ஓம்
குஹப்ரஹ்மணே நம:

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத
வைதிக சைவ சித்தாந்த ஞானபானு

# பாம்பன்
# ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள் சரித்திரம்

இது
குமரகுருதாசர் வெளியீடு

1987

ஓம்

குஹப்ரஹ்மணே நம:

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத

வைதிக சைவ சித்தாந்த ஞானபானு

பாம்பன்

# ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள் சரித்திரம்

இது

குமரகுருதாசர் வெளியீடு



1987

முதற் பதிப்பு—1929
இரண்டாம் பதிப்பு—1961
மூன்றும் பதிப்பு—1965
நான்காம் பதிப்பு—1974
ஐந்தாம் பதிப்பு—1987

விலை ரூ. 2-50

இந்நூல் கிடைக்குமிடம் ;

**"குமரகுருநாதர் பவனம்"**
எண் 136, 'O' Block, 36-வது தெரு
கணபதி காலனி, அண்ணு நகர் (கிழக்கு)
சென்னை-600 102

**பாம்பன் ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள் இல்லம்**
எண் 78, 'O' Block. 33-வது தெரு
கணபதி காலனி, அண்ணு நகர் (கிழக்கு)
சென்னை-600 102

எண் 75, 'O' Block, 33-வது தெரு
கணபதி காலனி, அண்ணு நகர் (கிழக்கு)
சென்னை-600 102

பி. எம். எஸ். பிரிண்டர்ஸ், சென்னை-5. போன் : 846668

ஓம்

குமரகுருதாச குருப்யோநம:

# முன்னுரை

இருமொழியின் கருத்துணர்ந்தெவ் வெவருளத்து
ஞானவிளக் கேற்று வானை
ஒருமொழியைச் சிவற்குரைத்தோ னுயரருள்பெற்
றருணகிரி யெனவுள் ளானைப்
பெருமொழிநூ லுரைகள்பல வருள்குமர
குருதாசப் பேரி ஞனைத்
திருமொழியெற் குரைத்தானைச் சிறியேனை
யாள்வானைச் சிந்தை செய்வாம்.

ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் மிகச் சிறந்த பெரியார்களுள் ஒருவர். 'ஆரியத்தோடு செந்தமிழ்ப் பயன்' நன்கறிந்தவர். தமது இளமைப் பருவந் தொட்டே முருகவேளின் மீது அன்பு முகிழ்த்து வரப் பெற்றவர். அப்பெருமானருளைப் பல நிலைகளிற் கனவினு நனவினுந் தரிசிக்கும் பேறு பெற்றவர். சுமார் 20 ஆண்டு இல்லற நடாத்திப் பின்னர்ச் சுமார் 34 ஆண்டு நேரிய துறவறத்தினின்று அச்செவ்வேளின் சீரைத் தம் வாழ்க்கையாலும் தாம் செய்தருளிய சாத்திர தோத்திரங்களாலும் பல விடங்களினும் பரப்பி வந்துள்ளவர். இவைபோன்ற அருமை பெருமைகள் வாய்ந்த நஞ் சுவாமிகள் சுமார் 80 ஆண்டுகள் இவ்வுலகில் ஞானவள்ளலாய் நிலவி, நிகழும் சுக்கில ஆண்டில் திருவுருக் கரந்துள்ளார்கள். நம் நாட்டில் இத்தகைய நம் பெரியார் பண்டை வரலாறுகள் ஒழுங்காக உரிய காலத்தில் வரையப்பெறுது விடப்பட்டமையால் அவற்றில் மெய்ம்மை மறைதல் பொய்ம்மை புகுதல் என்னும் குறைகள் நிதழ்ந்து நம்மை இடர்ப்படுத்தி வருவது மலையிலக்கே. நம் சுவாமிகள் வரலாறும் இவ்வாறு கறைப்பட்டும் குறைபட்டும் போகலாகாதெனக் கருதி, யான் இற்றைக்குப் பத்தாண்டுகட்கு முன்னர்

சுவாமிகள் ஜீவிய சரித்திர விவரங்களை உலகறியத் தர வேண்டுமென்று விண்ணப்பித்தேன். அவர்கள் அதுவு மோர் ஆரவாரத்தின்பாற் படுவதாகுமென்று கூறி மறுத்து விட்டார்கள். மேனாட்டு மொழிகளில் பெரி யோர்களின் உண்மை சரிதங்கள் பல விருப்பதையும், அவற்றுட் சில தற்சரிதங்களாகவே யுள்ளதையும் செப்பி, சுவாமிகள் வாழ்க்கையிலிருந்து பிற்காலத் தோரும் நலம் பெறற்கு அவர் உண்மைச் சரித்திரம் வெளியாதல் அவசியமாமென மீண்டு மீண்டும் வற் புறுத்தி வேண்டினேன். பின்னர்ச் சுவாமிகள் இவ் வேண்டுகோளை யங்கீகரித்துத் தமது ஜீவிய சரிதத்தைச் சொல்லி வந்தார்கள். ஆனாலதைத் தம் வாழ் நாளெல்லை கடந்த பிறகே வெளியிடவேண்டுமென்னு மொரு கட்டுப்பாட்டை யமைத்தனர். சுவாமிகள் சொல்லியவைகளை அவ்வப்போது குறிப்பாய் எழுதிவைத் தேன். இப்பால் சுமார் 2 ஆண்டுகட்கு முன்னர், அக் குறிப்புகளைச் சுவாமிகள் பார்வையிட்டுத் தருமாறு பெரி தும் வேண்டினேன். அவர்களும் அவ்வாறே செப்பஞ் செய்து தந்தருளினார்கள். இப்படித் திருத்தப் பெற்றதே இந்நூலின் பெரும் பகுதியும், எஞ்சிய சிறு பகுதி "சுவாமிகள் செவ்வேட் பரமன் சேவடி சேர்தல்" என்னுந் தலைப்பின்கீழ் வருவது. இது சுவாமிகள் சீடர் திரு. மா. துரைசாமி முதலியாரவர்களால் எழுதப்பட்டது.

இங்ஙனம் யாக்கப்பட்ட இந்நூல், சுவாமிகள் சரிதக் குறிப்புகள் கொண்ட சுருக்க வரலாறெனவே கொள்ளற் பாலது. இப் பெரியார் சரித்திரத்தில் சேர்க்கத்தக்க உண்மைகள் இன்னும் பலவுள்ளன வென்றறிகின்றேன். அவையிற்றை அவரோடு நெருங்கிப் பழகிய அன்பர்கள் எழுத்துவாயிலா யறிவிக்கும்படி வேண்டப்படுகின்றனர். அரிய விச்சரிதத்தைத் தற்கால முறையில் ஆராய்ந் தெழுதுதற்கு அவைகளுந் தேவை. சுவாமிகள் அவதார காலநிலைமை, அவர் காலப்புலவர் சந்திப்பு, சுவாமிகள்

சமயக்கோட்பாடு, பிற நூல்களையவர் தழுவிய முறைமை, அவரருளிய நூல்களின் மதிப்புரை முதலிய விஷயங்களும் பாகுபாட்டுடன் விரித்தெழுதத் தக்கவை. திருவருட் சம்மத மிருப்பின் இவைகளை யெல்லாம் சேர்த்துப் பின்னரிச்சரித்திரம் இம்முறையில் வரையப்படும்.

இச்சரிதச் சுருக்கத்தை இக்குருபூஜை விழாவிற்குள் வெளியிட வேண்டுமென்று அன்பர் பணித்தனர். ஆதலால், மிகச் சுருங்கிய காலத்தில், பல அலுவல்களி னிடையே, இதை விரைந்து பதிப்பிக்க நேர்ந்தது. முதலில் யான் விரும்பியபடி ஆராய்ச்சி முன்னுரை எதுவும் எழுத முடியவில்லை. எனினும் சுவாமிகளிடத்து உயர் மதிப்பும் மிக்க அன்பும் கொண்டுள்ளவர்களும், சுவாமிகள் நூல்கள் பலவற்றை அவர்கள் உள்ளம் உவப்ப முன்னமே அச்சிட்டிருப்பவர்களுமாகிய திரு. வி. சகோதரர்கள், தங்கள் "சாது அச்சுக்கூடத்"தில் மிக விரைவாய் அழகுற இதனை அச்சிட்டு உரிய பொழுதில் தந்த நன்றியைக் குறிக்காது விட இயலாது. அவ்வாறே சுவாமிகளிடம் உபதேசம் பெற்ற சற்சீடர்களே என்னும்படி அவர்களைத் தரிசித்த நாள் முதல் இன்று காறும் அவர்கள் மாட்டுத் தமக்குள்ள பேரன்பைச் செயலில் காட்டிவரும் திருவாளர்கள் C. S. மதுரை முதலியாரவர்கள், T. T. குப்புசாமி செட்டியாரவர்கள், K. சண்முகஞ் செட்டியாரவர்கள் முதலிய மெய்யன்பர்களையும் இங்கு பாராட்டிக் குறித்தல் முறைமையாயுள்ளது.

இக்கால அருணகிரிநாத ரென்றிலகி, முருகவேள் புகழை முற்பட வளர்த்த நமது சுவாமிகள் சரிதத்தின் அருமையை அனைவரும் உணர்ந்து, அம்முனிவர் காட்டிய செந்நெறியைப் பின்பற்றிப் பேரின்பப் பெருவாழ்விற் குரியராக வேண்டுமென்று சிவசுப்பிரமணியத்தின் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

திருவான்மியூர்
27—6—29

**ச. சச்சிதானந்தன்**

## 5-ம் பதிப்பின் முன்னுரை

தகர மெய்ஞானத் தனிப்பெரு வெளியெனும்
அகர நிலைப்பதி அருட்பெருஞ்சோதி.

திருநிறைந்த சிவம் ப்ரஹ்மம், பரம்
அருணிறைந்த அத்தன், பராபரன்
குருநிறைந்த குகன், சம்பு, என்பன
பொருளொன்றாய்ப் பொலிவுற்று நிலவுமால்.

-ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளருளிய
முதல் மண்டலம்—திருநிறைந்த சிவம்.

பனை வளம் பல்கியது பிரப்பன் வலசை என்னும் சிற்றூர். இது இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ளது. இவ்வூரடுத்த பனந்தோப்பு இடுகாடும் சுடுகாடுமிணைந்த இடம். அதனுள் உள்ள ஒரு கொட்டகைக் கீழ் உள்ள குழியொன்றினில் 43 வயதே நிரம்பிய கடுந்தவசி அமர்ந்திருப்பதைக் காண்கிறோம். இது இன்றைக்குச் சுமார் எண்பத்து மூன்று ஆண்டுகட்குமுன் நடக்கிறது. சடை முடி தாங்கிய முனிவர் இருவரும் அவர்களுடன் அறிவாற்றலழகுடன் ஒரு இளைஞரும் உளார். அம் முனிவரிருவரும் அவ்விளைஞரிடத்து ஏதோ பரிந்துரை பகர, அவ்விளைஞரும் மனங்கனிந்து தவசியாரிடம் "ஊடாடலிலாமே ஒரு மொழி" ஓதவும், தவசி தனித்திருக்க மற்ற மூவரும் உருக்கரந்தேகினறனர். அந்தத் தவசிதான் "அப்பாவு" என்னும் பிள்ளைத் திருநாமமும் ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள் என்னும் சிறப்புப் பெயரும்பெற்ற நமது பாம்பன் சுவாமிகள். அவர் முன் தோன்றி, அளவளாவி, அருள்மொழி கூறி மறைந்தவர்களில் இரு முனிவர்களும் அகத்தியரும் அருணகிரிநாதருமாவர். இளைஞராக எழுந்தருளியது இம்மூவரின் மனக் கருவுணர்வில் போற்றும் 'முருக' தத்துவத்தின் அருளுருவெளித்தோற்றம்.

விஞ்ஞானச் செய்திகளைக் கருவில் கொண்டு சரிபார்த்து ஒப்புதலளிக்கும் இந்த இருபதாம் நூற்றாண்டில் மேற்கண்ட பிரப்பன் வலசைப் பனந்தோப்பு நிகழ்ச்சி பயின்றுணர்வார் அற்புதமெனத் தெளிவர்; உணராதார்க்கு விஞ்ஞான அறிவின் முதிர்ச்சியால் விரைவில் விளங்கும்.

ஆபிரகாம் லிங்கன் நூற்றிருபது ஆண்டுகட்கு முன் அமெரிக்க மக்கள் தலைவராக இருந்தவர். அவரது எண்ண அலைகளைப் பதிவு செய்ய முடியும் என்னும் செய்தி யாவரும் அறிவர். அது எங்ஙனம்? பொருள்களிலிருந்து ஒலி அலைகளும் ஒளி அலைகளும் வெளிப்பட்டு, அகிலாண்டப் பெருவெளியில் (Cosmos) மிதந்து சென்றுகொண்டே இருக்கின்றன. ஒளி அலைகள் ஒலி அலைகளைவிட விரைவு மிக்கன. வானில் எழும் மின்னல் ஒளி முன்னும் இடி முழக்கம் பின்னரும் கேட்கப் படுவதிலிருந்து இது தெளிவாகிறது. பன்னூறாயிரம் ஆண்டுகளாக பல பொருள்களினின்றும் மக்கள் திரளினின்றும் வெளிப்பட்ட இவ்விருவகை அலைகளும் அகிலாண்டப் பெருவெளியில் மிதந்து சென்று கொண்டே இருக்கின்றன என்பது விஞ்ஞானத்தின் ஒலி இயல் மற்றும் ஒளியியல் விளக்கங்களால் (Theories of light and sound) அறிகிறோம்.

ஒலி அலைகளுக்கும் ஒளி அலைகளுக்கும் உருவமுண்டு. ஒலியை ஒளிவடிவமாகவும் ஒளியை ஒலிவடிவமாகவும் மாற்றலாம். வானொலி, தொலைக்காட்சி, பேசும்படம் போன்ற சாதனங்கள் இதற்கெடுத்துக் காட்டுகள்.

மன வளர்ச்சி மிக்கவர் மக்கள். இவர்கள் பால் எழும் ஒலி அலைகளும் ஒளி அலைகளும் அவ்வவரது எண்ண அலைகளைச் சார்ந்தவை. எண்ண அலைகள் மனக்கருவின் உணர்வலைகளால் உந்தப்படுபவை. உணர்வலைக்கும் உருவமுண்டு என நுண்ணுணர்வாற்றல் (Cryptaesthesia, E.S.P.)

தொலைவிலுணர்தல் (Telepathy) தொலைநோக்கு (Clairvoyance) ஆகிய கலைகள் கைவந்தோரின் அனுபவம்.

கால வெளியில் பின்னோக்கிச்செல்லும் ஆற்றல் கொண்ட இயற்கைக்கருவி மனம். மின்காந்தம், மின் அணு (Electronics) இவைகளை விட ஆற்றலும், நுண்மையும் கொண்டன மனக் கருவின் உணர்வலைகள்.

ஒலி அலைகளும், ஒளி அலைகளும் அவை எழுந்த இடத்தி லிருந்து நீரின் அலைகள் போல் அகிலாண்டப் பெருவெளியில் ஆண்டுகள் கணக்கில் மிதந்து சென்று கொண்டேயுள்ளன. ஆனல் மனக்கருவுட் கொண்ட உணர்வலைகள் அகிலாண்ட மெங்கனும் நீக்கமற நிறைந்து மின்னணு (Electronics) வினும் ஆற்றலுடையதாக யாண்டும் நீக்கமறப் பரவி நிற்கின்றன. அதற்குடைய மனக்கருவின் (Nucleus of the mind) உணர் வலைகள் மாத்திரம் உரிய உருவுடன் யாண்டும் நிறைந் துள்ளன. முறையான உடற்பயிற்சியும், உளப்பயிற்சியும் முதிர்ந்தபின் ஆன்மீகப் பயிற்சியில் முனைந்த தவசீலர்களுக்கு இவை புலப்படலாம். அருகியிருந்த இவ்வினத்தார் இப்பொழுது பெருகியே வருவது உணர்வார்க் கிறும்பூது பயப்பதாகும்.

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் இளமை முதற்கொண்டே சித்தர் நூல்களைக் கற்பவையெனக் கொண்டு கசடறக் கற்று கற்றவாறே பயின்று தெளிந்துணர்ந்தவர். அருணகிரி நாதரை தன்னை வழிப்படுத்தும் (ஆதர்ஸ) ஆசானகப்போற்றி வந்தவர். அருணகிரிநாதரோ வெனில், சில அகத்திய "ஞான தேனமுதைத் தருவாயே" எனவும் "குறுமுனிவனேத்து முத் தமிழோனே" என்றும் அகத்தீச முனிவர்களைக் கொண்ட அருளாளர். பாம்பன் சுவாமிகளது இடையறுததும், தடை படாததுமான ஊக்கமிக்க உள்முகச் சாதனை அதே அலை நீளமும் (Wave length) உணர்வின் அதிரளவும் (Frequency)

கொண்ட அருணகிரிநாதப் பெருமானின் உணர்வலைகளின் கருவை ஈர்த்தது. இருவர் உணர்வும் ஒன்றி மேலும் அசைவிலா ஊக்கம் கொள்ள அதே இயல்களைக்கொண்ட அகத்தியர் உணர்வுகளை எட்டின. அருணகிரியாரது உணர்வலைக் கருவுக்கும் அகத்தீசருடைய உணர்வலைக் கருவுக்கும் நடுநின்றது சுப்ரமண்யம் அல்லது முருக தத்துவம். உணர்வலைகள் ஒன்றியதும் அவ்வவற்றிற்குரிய ஒலி அலைகளும், ஒளி அலைகளும் கால வெளியினின்று உருவெளித் தோற்றமும் பெற்று பிரப்பன்வலசையில் ஒளிந்தன.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்"

கடுந்தவத்தில் அமர்ந்த ஏழாம் நாளிலேயே நமது சுவாமிகட்கு இந் நிகழ்ச்சி நேர்ந்தது. மேலும் 28 நாள் தொடர்ந்த பெருந்தவ முதிர்ச்சியால் நிறையறிவுணர்வும் குறைவிலா இன்பநிலை அனுபவமும் முகிழ்க்கின்றன. அதன் விளைவே சுவாமிகள் அருளிச் செய்த 'தகராலய ரகசியம்' மற்றும் "பரிபூரணனந்த போதம்" என்னும் அரிய இரு நூல்கள்.

சிவம் எனும் முழுமைப் பேரறிவும் சக்தி எனும் வரையிலா நிறையாற்றலும் பிரித்துணரா வியல்பிற்ருய்ப் பரம்பொருள் அல்லது பிரஹ்மம் எனப்படும்.

"சிவ சக்தியாத் மஹம் ப்ரஹ்மம்" என்பது ஸ்ரீலஸ்ரீ ஆனந்தமூர்த்தி அவர்களின் ஆனந்த சூத்திர முதற்பா.

இத்தகு அறிவும் ஆற்றலும் இணையத் தோன்றும் அருளானந்த வடிவே சுப்ரமணியம் என்னும் முருகதத்துவம்.

சுவ்வெ னும்பறை சுத்தவின் பாகுமோர்
அவ்வி யத்தவிண் ணும்பிர மத்தினின்
றெவ்வ மின்றெருளிர் கின்றமின் னேணியம்
ஒவ்வுங் கீர்சுப்ர மண்யமென் ருேர்தியால்.

—ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகருளிய **தகராலய ரகசியம்,** இரண்டாங்காண்டம், 43-ஆம் பாட்டு.

அறிவு, ஆற்றல், ஆனந்தம் இவையாவும் இணைந்த சுப்ரமண்யப் பொருள் ஒவ்வொருவருடைய சிதாகாசமென்னும் தகராலயத்தில் ஒளிரா நிற்கும். அதை உலகம் கற்று, முயன்று பயின்று பலன் பெறும் அருள்நோக்கம் கொண்டன சுவாமிகள் இயற்றிய நூல்கள் எல்லாம். அவற்றுள் நாள் தவறாது ஓதி வருவதற்குரியவை **பகை கடிதல், குமாரஸ்தவம், ஷண்முக கவசம்** ஆகிய மூன்றும். இதே வரிசையில் நாடோறும் ஒரே குறிப்பிட்ட வேளையில் அமைதியாய் அமர்ந்து, பொருளுணர்ந்து, சிதருவுணர்வுடன் மனமொன்றிக் கற்று வரும் பல அன்பர்களுக்கு வாழ்வில் இடர்கள் நீங்கி நல்லின்ப அனுபவங்கள் ஏற்பட்டு வருதல் கண்கூடு.

மஹா தேஜோ மண்டலத்தார் இத்துறையில் ஆற்றி வரும் பெரும்பணி மக்களது மனப்பிணி தவிர்த்து அருட்பிணிப்பார்த்து அளவிலா நலமெலா மெய்ப்பிக்கும் என்பது பரம்பொருளாம் சுப்ரமண்யத் திருவருளா மென்க.

பரவிய கான வேடுவர் தருமபிராம நாயகி
பரிபுர பாத சேகர—சுரராஜன்
பதிகுடி யேற வேல் தொடு முருக மயூர வாகன
பரவச ஞான யோகிகள்—பெருமாளே.

**அ. இ. தேவராஜன்,** எம்,ஏ.,
டிப்டி கமிஷணர் ஆப் லேபர், (Re'd)
எண். 8, வ.உ.சி. தெரு,
பெருங்களத்தூர்,
சென்னை-600 063.



பாம்பன்: ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள்

உ

ஓம் குஹேசாய நம:

பாம்பன்

# ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் சரித்திரம்

---

## சுவாமிகள் அவதாரமும் இளமையும்

பாண்டிவள நாட்டிலே, திருவிராமேச்சுரத்தைச் சார்ந்த பாம்பனென்னும் க்ஷேத்திரத்திலே, சிவாலய அகத்திருப்பணி வேளாளராய சாத்தப்பப் பிள்ளை யென்பாருக்கும் இராமேச்சுரத்து ஸ்ரீமதி - செங்கமல அம்மாளென்பாருக்கும் பிரதம புத்திரனாக இராமேச்சுரத்திலே சுவாமிகள் ஒரு சுக்கிரவாரஞ் *சூரியோதயத்தில் அவதரித்தனர். இருமுதுகுரவராய தந்தை தாயராலிடப்பட்ட பிள்ளைத் திருநாமம் அப்பாவு. தமிழ் உபாத்தியாயர் முனியாண்டியா பிள்ளையவர்கள் தமிழ் பயிற்றுவித்தார். இவர் கி. பி. 1866-ஆம் ஆண்டு அவ்வூர்க் கிறிஸ்தவ கலாசாலையை யடைந்தார். தமிழ் பரீக்ஷையிலே தேறினமை கண்டு உபாத்தியாயர் தேவசகாயமென்பவரால் அளிக்கப்பட்ட பரிசுகள் பெற்றார். அப்பொழுது வயது ஏறக்குறைய பதினொன்றென்னலாம். இவர் கலாசாலையிற் படித்துவருஞ் சிறு வயதிலேயே முகம்மதியர் மசூதியை யேனும் கிறிஸ்தவர் கோயிலையேனுங் காணும்போதெல்லாம் வணங்கிச் செல்பவராயும், தாழ்ந்த தேவதைகளுடைய விக்கிரகங்களைக் காணுந்தோறும் நம்முடைய தன்மைக்கும்

---

*சுவாமிகள் அவதரித்த வருடமு மாதமும் திட்டமாய்த் தெரியவில்லை. 1850—1852 க்குள் இக்காலம் உள்ளதென்று ஊகிக்கலாம்—(ச.ச.)

மேம்பட்ட தேவதைகள் நிலையென வெண்ணி அவற்றையுங் கைகூப்பி நமஸ்கரித்து நடப்பவராயுமிருந்தார். இங்ஙனம் இவர் அறிவொழுக்கங்களில் முதிர்ச்சி பெற்று வளர்ந்து வருகையில் ஒருகால் இவர் தம் வயதோடொத்த 5, 6-சிறுவர்களோடு குந்துகாலெனுமிடத்தையடைந்து ஆங்கு வீழ்ந்து கிடந்த ஒரு தென்னமரத்தின் மீதிருந்தனர். இலங்கைத் தீவிற்குச் செல்வார்களோடு ஆங்குவந்த ஒரு சோதிடர், ''சிறுவர்காள்! உங்களிருக்கை பாம்பனோ?'' என விசாரித்த பின்பு யானொரு சோதிடனென்றார். அவரை நோக்கி எங்களுக்குச் சோதிடஞ் சொல்லுமென்று கேட்டுக் கொண்ட சிறுவர்களுடைய கைத்தலங்களைப் பார்வையிட்டு ''விசேடமொன்றுமில்லை'' எனக் கூறிவிட்டு இவருடைய கைத்தலங்களையும் பார்வையிட்டார் அவர். பார்த்தவுடன் நாக்கை நீட்டச் சொல்லி அதனையும் பார்வையிட்ட அவர், ''சிறுவ! நீ ஒரு பெரிய வித்துவானாகவும் பலிதவாக்குடையானாகவும் விளங்கிப் புகழுடையவனாயிருப்பாய். விசேடந்தான்'' என்று கூறினதை ஏனைச் சிறுவர்களுங் கேட்டு உவகையுற்றனர். அன்னையார்க்கு இஃதறிவிக்கப்பட்டது.

இவர், பாடசாலைக்குச் செல்லுமொருஞான்று முகம் மதியருடைய பெரிய மசூதிக்கருகான ஆகாயவெளியிலே தங்கமயமான அரசிலைகள் பல வரிசை வரிசையாக வடக்கு நோக்கிச் செல்லுதலைக் கண்ணுற்று அதிசயித்துத் தேவரதஞ் செல்லுகிறதோ எனவெண்ணிச் சிறிது நேரம் ஆயிடைத்தங்கி நின்று வந்தனித்துப் போந்தார். பாடசாலைவிட்டு நீங்கற்குச் சிலநாள் முன்னே நாகநாதர் கோயிற் பிரமோற்சவம் பார்க்கும்பொருட்டுத் தம்மோடொத்த வயதுடை இளைஞர்களோடு செல்லத் தொடங்கினர். அக்கோவில் இராமநாதபுரம் ஜமீனைச்சேர்ந்த மகாமகிமையோடுங் கூடிய ஒரு சிவாலயம். எல்லாருமொரு தோணியிலேறினர். தோணியின் பாய்மரப் பலகையில் இவரிருந்தனர். அதனடியில் இரண்டு சன்னியாசிகளிருந்தனர், தோணி கடலில் விரைந்து

செல்லும்போது அவருளொருவர் ''சிவசிவ'' என்று சொல்லத்தொடங்கினர். தொடங்கினவர் விடாது செபமாகச் செய்தலை யிவருணர்ந்து தாமும் அவ்வாறே உள்ளுக்குள் அம் மகாமந்திரத்தைச் செபிக்கத் தொடங்கினர். பின்னர் இரவும் பகலுமாக மூன்றுநாள்காறும் இவ்வுச்சாரணத்தை விட்டாரல்லர். நாகநாதர் தரிசனஞ் செய்து பாம்பனை யடைந்து வீடு சேர்ந்த பின்னரும் அம்மந்திரம் இவரை விடவில்லை. பின்பு, மூன்ருந்தின ஈற்றிற் குமார பகவானைக் குறிக்கும் நூலொன்று பார்க்கவேண்டுமென்னும் ஆசை இவருக்குண்டாயிற்று: உடனே, புதிய புத்தகக் கடையை யடைந்து **சஷ்டிகவச**மென்னு நூலினை முக்காலணுக்கொடுத்து வாங்கிப் படித்தனர். அது பாடமானவுடன் அதன்கட் குறிப்பிட்டபடி நாளொன்றற்கு 36 - முறை பாராயணஞ் செய்யத் தொடங்கினர். தமது நாவை விடாது பற்றிக் கொண்டிருந்த ''சிவசிவ'' என்னும் மந்திரம் இங்ஙனமே தான் விலகிற்று.

கலாசாலையையும் விடநேர்ந்தது. பின்பு தம்மைப் போன்ற யௌவன பிராயமுடையாரோடு சிலம்பம், மற்பிடி, நீர்நீத்து என்பனவுங் கற்றுக்கொள்பவராயினர். சித்திர மெழுதல், புட்பங்கட்டல், துன்னர் தொழிலாய தையல் செய்த லென்பவற்றிலும் இவர் பழகியிருந்தனர். இவரொரு தேகதிடமுடையவராயு மிருந்தார்.

## பாடத் தொடங்கல்

இப்பால் ஒரு சுக்கிரவாரத்திலே அதிகாலையிலே மூன்று தென்னந்தோப்புக்களைப் பார்வையிடுமாறு கிழக்குத்திசை நோக்கிச்சென்ற இவர், முதற்கணுள்ள தோப்பு வாயிலினுழைந்தார். ஆங்குத் தமக்கு முன்னே தந்தையார் உட்சென்றிருத்தலை அறிந்துகொண்டு வாயிலடியிலேயே நின்றுவிட்டார். அஞ்ஞான்று கையிலிருந்த சஷ்டிகவசத்தை விரித்து இதனை ஆக்கியோர் யாவர் என்பதைக் கவனித்தார்.

தேவராய சுவாமிகளெனவறிந்தார். இவ்வாறு ஆண்டவனே யானும் பாடக்கடவேனென்னுந் துணிபு தம்முள்ளே துண்ணெனத் தோன்ற, உடனே வடக்குமுகமாய் நின்று செவ்வேளைச் சிந்தித்து வந்தனித்து ஆயிடைக் கிடைத்த ஒரு பனையோலையைத் தமதரையிற் செருகியுள்ள வெள்ளிப்பூக்களிடப்பட்ட தந்த எழுத்தாணியை யெடுத்து அதனால் வகிர்ந்து ஏடாக்கிக் கொண்டு கீழ்த்திசையை நோக்கிச் சூரியோதயமாதலறிந்து இது நல்ல வேளையென எண்ணிக் கொண்டு, "என்னாண்டவனாகிய குமாரபகவானே! நின்னையே பல பாக்களானும் பாடக்கடவேன் : அருணகிரிநாதர் பெயர் வைத்தே பிரபந்தம் முடிக்கக் கடவேன்: அவர் வாக்குப் போலவும் எனக்கு வாக்குண்டாகவேண்டு" மென்று நனிசிந்தித்துக் கைகூப்பி நிற்ப, உடனே தம்மை யறியாமலே தமது வாக்கிற் "கங்கையைச் சடையிற் பரித்து" எனவெழுந்த விசேட மங்கலமொழித் தொடரை ஆரம்பமாகக் கொண்ட பாட்டைப் பாடி அவ்வேட்டி லெழுதி முடித்தனர். அப்பாட்டு—

"கங்கையைச் சடையிற் பரித்துமறி மழுவங்
கரத்திற் றரித்துருத்ரங்
காட்டுழுவை யதளசைத் தணிமன்றி லாடுகங்
காளற் கபின்னமாய
சங்கரி சடாதாரி சருவாணி கல்யாணி
தற்பரி பவானிதந்த
தந்திமுக னேடுமற் றைந்துபெயர் நீர்மையுந்
தன்னகத் துளதெய்வமே
மங்கையர்த மின்பெனுந் துன்பினை விரும்புமட
மார்க்கத்தை விட்டதீதர்
வாழ்வுக்கும் வாழ்வாய வாழ்வினை யளிக்குமுன்
மலரடி தியானிக்கவும்
அங்கையினி னெல்லியங் கனியெனத் திருவருளை
யடையவுங் கருணைநல்காய்
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே." (1)

என்னுமிதுவே. இதனை, அந்நிலைக் களத்திற்றானே சுவாமி சன்னிதியிற் படிப்பதுபோல ஒருமுறை சத்தமிட்டுப் படித்து, ''இறைவ! ஒப்புக்கொள்ளவேண்டு'' மென்றார். அதி யிளமையிற் கூறிய இம் முதற்பாட்டையும் பொருளையு முணர் வோர்க்குப் பரஞானத்திற்கு முன்னெய்தும் அபரஞானம் ஆசிரியர்மாட்டுத் திண்ணிதாய்ப் பிறங்கவுள்ளது புலப்படும்.

மறுநாள் ''இனித் தினமும் உண்பதற்குமுன் ஒவ்வொரு பாட்டுப் பாடக்கடவேன், நூறு தினங்களில் நூறாங்காறு'' மென்ற தமது நியதியின்படி கூறி முடித்த எல்லை திருத் தணிகைத் தல பரியந்தமாம். இந்நியதி யேற்படவே **சஷ்டி கவச** பாராயணம் நின்றுவிட்டது. கூறிப்போந்த செய்திகளை **ஸ்ரீமத் குமாரசுவாமியத்துத்** திருவருட் செயன் ஞாபகத்தில்—

''நல்வி நயவரர் பெருமவென் னறிவே
 நவிர மிவர்பெரும் பரமவென் னுயிரே
கல்வி பயினல நீத்திள மையிலோர்
 கரிசில் வெள்ளியி னுதயநின் மீது
பல்க விதைநனி பாடிட வருள்செம்
 பறம்பன் பெயரும்வைப் பேனென வெணிநான்
சொல்க விதையது கங்கையென் மொழியிற்
 றொடங்கு மங்கல முணர்ந்துபின் மகிழ்ந்தேன்.

பாடி யேயறி யாவெளி யேன்வாய்
 பாட லுன்கிரு பையெனவு நினைந்தேன்
நேடி யேயறி யாதவென் னினைவு
 நினைநி னைந்திடல் கருதியு மகிழ்ந்தேன்
பாட லோர்சத மாயபின் றேவைப்
 பனவன் மாதவன் சயதச மியிலுன்
பீட ருமனு நல்கவென் னிதயம்
 பிடித்த துங்குக நினதரு ளன்றோ''.

எனவும், கி.பி. 1905-ற் பதிப்பிக்கப்பட்ட **சிறுநூற்றிரட்டி** லுள்ள **ஞானவாக்கிய**மெனு நூன் முடிந்த விடத்தே—

"குஹப்ரஹ்மத்தினது திருவருட்டுண்டுதலானே அதியிளமைப் பருவத்திற்றானே குஹேசனை நாம் பாடித் துதிக்க வேண்டுமென நினைத்த வளவிலே தம்மை யறியா மற் றமது வாக்கில் "கங்கையைச் சடையிற் பரித்து" என வெழுந்த மங்கல மொழித் தொடரைத் தொடக்க மாகக் கொண்டுளதும், **குமரகுருதாச சுவாமிகள் பாடலெனு**மொரு நூலிலே தெய்வ வணக்கத்திற்குப் பின்னர் வைக்கப்பட்டுளதுமான "அமரர்கோ" வெனுந் திருப்பதிகம் பாடியருளிய பின்"

எனவுங் கூறியுள்ளவைகளால் நன்குணரலாம்.

"அமர்கோ" வென்னும் பிரதமப் பிரபந்தம் பிரார்த் தனையா யிருத்தலின் வணக்கச் செய்யுளுமிருத்தல் வேண்டு மென்பது நுதலி "அறிவினுக் கறிவான பொருளை" என்றற் றொடக்கத்துத் தெய்வ வணக்கச் செய்யு ளொரு மூன்றுங் கூறினது, 100-பாட்டிற்கும் பின்னென்றே யுணரவுள்ளது.

## சுவாமிகட்குச் சடக்கர உபதேசம்

இங்ஙனமிவர் வளர்ந்து வருகையில் ஒருநாள் இரும்புச் சாமான்கள் உண்டுபண்ணிக் கொடுப்பார் பலர்க்கும் உரிய சம்பளமுதவிக்கொண்டு அவ்வியாபாரத்தி லிருக்கும் தந்தை யார், நீ ஒரு முகம்மதியரையும் பங்காகச் சேர்த்துக்கொண்டு நெல் வியாபாரஞ் செய்யென ஏற்பாடு செய்தார். அப்படியே செய்யுங் கிடங்கில் வைக்கப் பட்ட விற்பனைப் பணப்பெட்டி யின் மேலே சிவப்பு மை கொண் டெழுதியுள்ள அந்த 100-பாட்டுப் புத்தகங் கிடந்தது. இராமேசுவரம் ஆரியப் பிராமணர்களுள் வடமொழி தென்மொழிகள் கற்று உத்தபராயிரா நின்றவரும், சேதுமாதவப் பெருமாள் கோயில் அர்ச்சகரும், சுப்பிரமணிய பக்தருமான சேதுமாதவ ஐயரவர் கள் சேதுமார்க்கத்திலுள்ள அக்கிடங்குவழி வந்தார்கள்.

மார்க்கத்தினின்றுகொண்டே இவரைப் பார்த்து இராமேசுவரத்திலிருக்கும் இன்னர் மருமகனு நீ? என வினவினர். இவர் ஆமென்முர். அவர் யாது வியாபார மென்று கேட்டார். இவர் நெல்லென்றுரைத்தார். அது காண்பான் வந்த அவர் பெட்டிமேற் கிடந்த அப்புத்தகத்தை யெடுத்துப் படித்துப் பார்த்து, இது புதிது போலும், யார் கூறினதென்று கேட்டார். இவர் யானே யென்முர். அவர் இதுமட்டுமோ? என வினவினர். இவர் வேறில்லை யென்முர். அவர் புதுக்கோட்டை - வித்துவான் குமாரசுவாமிப் பிள்ளை யென்பார் இராமேசுவரத்திலிருக்கிமுர். அவர் பார்வைக்கு இதனைக் கொண்டு போகக் கடவேனென்று அப்புத்தகத்தை யெடுத்துக் கொண்டுபோய் அவ்வித்துவான்பா லளித்தனர். அதனை யவர் பார்வையிட்டு, பாட்டு நயமுடைத்து, ஆரம்பச் செய்யுளிலேயே துறவுந் தோன்றுவதாயிற்று என்று கூறி, அவரும் ஐயரும் இரண்டு சாத்துக்கவிகளெழுதி வைத்து அச்சிற் பதிப்பிக்கலாமென்னுஞ் செய்தியோடு புத்தகத்தை யிவருக்கனுப்பினுர்கள். இவர் இன்னும் பாட வேண்டு மென்னும் கருத்தினுல் அச்சிட முடியவில்லை. பின்னே பல நாட்கள் கழிந்தன. மீளவும் பாம்பனுக்கு வந்த ஐயரவர்கள் ஆசிரியரைக் கண்ணுற்று, 'நாளை விஜயதசமி; இன்று மாலையிற்றுனே எனது வீட்டை யடைந்து என்னை நீ காண வேண்டு' மென்று இராமேசுவரம் போந்தார். இவரும் அவர் வீட்டை யடைந்து அவரைக் கண்டனர். அவர், அதிகாலையில் நின்னையெழுப்புவேனுகலின் இங்கேயே சயனித்துக் கொள்ளென்றபடி இவருஞ் சயனித்திருந்தார். அவர், குறிப்பிட்ட வேளையில் இவரை யெழுப்பிக்கொண்டு அக்கினி தீர்த்தமாகிய சமுத்திர தீரத்தை யடைந்து இத் தீர்த்தத்தில் மும்முறை மூழ்குவாயாக என்றபடி இவரும் மூழ்கிவந்து திருநீறணிந்து அவர் முன்னிருந்தனர். உடனே சூரியோதயமாதல் கண்டு, 'பிள்ளாய்! சுப்பிரமணிய ஷடக்ஷரத்தை யுபதேசிக்கக் கடவேன், பெறுதி' யென்று விதிப்படி அங்கநியாச கரநியாசங்களை அர்த்த மண்டலமாதற்குட்செய்வித்து

வலச்செவியில் அவ்வெழுத்துக்களை இனிது உபதேசித்தருளி ஞர். இவர், ஆசிரிய வந்தனமியற்றி அவர் பிரசாதமா யளித்த விபூதியை யணிந்து கொண்டவராயினர். இப்பரம காரியத்தை, இவர் தந்திருப்பாட்டகத்தே கூறியதுண்டோ? எனின், உண்டென்க. என்னை? **ஸ்ரீமத்-குமாரசுவாமியத்திலே** வருகை விழைந்திரங்களிலும், திருவருட்செயன் ஞாபகத் திலும்—

"பரத ஞர்தலம் யாத்திரை செய்பரிவார்
பலரு மேகுவி சேதுவில் வாழ்மறையோன்
எரியி னுமநெ டுங்கட னீர்நிலைமே
லெளியவென்னுள மோர்ந்துகொ டுத்தபொருள்
உரிமையே''.

''பாடலோர்சத மாயபின் தேவைப்
பனவன் மாதவன் சயதச மியிலுன்
பீட ருமனு நல்கவென் னிதயம்
பிடித்த துங்குக நினதரு ளன்றே''.

என்ருராகலின். உபதேசமான தினத்தின் மாலைப் போதில் இவர், ஆசிரியரைத் தரிசித்தார். அவர், ''இனி நீ வடமொழி கற்க வேண்டும், வேறு மந்திரங்கள் செபிக் கொண்ணுது'' என்னும் இரண்டு கட்டளைகளை யிட்டார், இவர் அப்படியே யென்று கூறிவிட்டு விஷபரிகார மந்திரம், கட்டிகரைக்கும் மந்திரமாகிய இவற்றை உடனே விடலா யினர். இராமேசுவர சிவாலயத்துக்குப் பன்முறையுஞ் சென்று தொழுதுவருமிவர், சிலகாலமாகச் சுக்கிரவாரந் தோறும் நிகழ் பர்வதவர்த்தினி யுற்சவத்தைக் குமாரக் கடவுளுற்சவமாக மதித்துத் தொழுது வருதலும், முருகவேள் மகிமைகளைப் பலருக்கும் போதித்து மகிழ்தலுமுடையவரா யிருந்தனர். முருகவேள் மகத்துவம் பற்றி இவர் பேசாத நாளே கிடையாது. ஏழைகளுக்கும் கடவுளடியார்க்கும் தம்மாலியன்ற வுதவியைச் செய்து வந்தார்.

## மேலும் பாடல்

பாம்பன் பதியிற் குளக்கரை கடற்கரை வெண்மணற் பாங்கராகிய இவ்விடங்களிலே இராக்காலங்களிலே தனித் துவைகி இயன்றவளவை தங்கடவுளாகிய குமார பகவானைத் தியானித்திருந்து ''என்னப்பனே! எளியேற்கெப்போது விடுதலை யேற்படும்? கூறுய் கொல்லோ'' என்பதும் இவர் செய்கையா யிருந்தது. இந்நிகழ்ச்சியிற் குமாரக்கடவுளது திருவருள் விழைந்து சில பாட்டுக்களையும் பாடினர். இவர் பாடுஞ்செயலை யுணர்ந்த உபாத்தியாயர் முனியாண்டியா பிள்ளையவர்கள், ''அப்பாவு! குந்துகாலிற் கோவில் கொண் டுள்ள முனீசுரனும் யான் பூஜிக்குந் தேவனுயுள்ளானுகலின் அவன்மீதுஞ் சில செய்யுளைக் கூறு'' என்றபோது இவர், ''ஐய! முருகவேளைப் பாடுவதென்பதே விரதம். யான் யாது செய்வேன்'' என்றனர். அங்ஙனம் உபாத்தியாயர், ''முனியை முருகனெப் பாடுதி'' என்ற வேண்டுகோள் பிடித்து ''அம்புத நிறைந்துவிரி'' ''கம்மற் சிமிக்கிமிலை'' ''அமரர்களை யேவல் கொள'' ''முடிபூண்ட மண்டலீ'' என்றற் ருெடக்கத்துக் குழிப்புச் சந்தச் செய்யுள் நான்கும், ''உப்பேறு சிந்து'' என்றற்ருெடக்கத்தொரு செய்யுளும் பாடினர். இச்செயல் கருதி அவ்வூரிலுள்ளாருட் பலர், இவர் செய்கை வியக்கற்பாலதே யென்று பேசிக் கொள்வா ராயினுர். அங்ஙனம் அசூயை கொள்வார் யாருமிலரென்னு முண்மையையும் இவரறிந்து கொண்டார்.

## ஒரு கனவு

ஒருநாள் இவர் கனவில் அழகிய திருமேனிச் சைவ ரொருவர் தோன்றி, ஒன்று ஒன்றரை மைல் வரையிலும் இவரை யழைத்துக் கொண்டு சென்று, ஒரு கட்டிடத்தி னுழைந்து வாழையிலைமிசை அன்னமும் பாலுமிட்டு இனிப் புறப் பிசைந்து, ''அன்ப! என்னேடிதனை யுண்பாயாக''

வென்னுமொரு கட்டளையிட்டனர். அதற்கிவருடன்பட்ட வுடன் இவரோடு அவருஞ்செவ்வனே அதனை யுண்டுவிட்டு "இனி யிருப்பிடஞ் செல்வாயாக" வென்று கூறிச் சென்று விட்டனர். இதற்குமேலேதான் இவருக்குப் பாடுஞ் சக்தியும், நூலாராய்ச்சியும் அதிகரித்தன. இவ்வாய்மையை மேலைத் திருவருட்செயன் ஞாபகத்தில்—

"வனப்பு மிக்கவோர் சைவரென் கனவில்
வந்தெ னைக்கொடு போய்ப்பய சடிசில்
இனிப்பு றப்பிசைந் தனரதை யென்னோ
டினித ருந்தியு மேகின ரதுதொட்
டுனைப்ப ழிச்சிடு கவிதையு நூலோ
ருணர்வு வளர்ந்தன விவையுமு னருளே"

எனக் கூறினமை காண்க.

## திருமணமும் மகப்பேரும்

இந்நெறியிலே நின்றுவரு மிவருக்கு வயது சுமார் 25 ஆயிற்று. ஆகியும் இவருக்கு விவாகஞ் செய்து கோடலில் மனமெழ வில்லை. ஆயினும் இவருக்குத் திருவாறெழுத்தை யுபதேசித்தருளிய ஆசிரியருத்தரவுப்படி இவர் விவாகஞ் செய்துகொள்ள இணங்கினர். மதுரை - சின்னக்கண்ணு பிள்ளை புத்திரியாகிய ஸ்ரீமதி-காளிமுத்தம்மாளை வெகுதானிய வருஷம் (கி.பி. 1878) வைகாசி மாசத்திலே சுப முகூர்த்தத்திலே இராமநாதபுரத்திலே பாணிக்கிரகணஞ் செய்து கொண்டனர். பாணிக்கிரகண காரியத்தை இருமுது குரவராகிய தந்தை தாயரும் சுற்றத்தாரும் உடனிருந்தே சிறப்பாக முடித்தார்கள். பின்பு இவர், தம்முடைய உத்தம பத்தினியோடு பாம்பனை யடைந்து வாழ்ந்திருந்தார். மேலைத் திருவருட்செயன் ஞாபகத்தில்—

''பின்ன ரப்பன வன்சொன படியோர்
பெண்ணை மணந்தன னவளுநல் லவளே''

என்று இவர் கூறியவாற்ருனும் இச்செய்தி பெறப்படுகின்றது. மூன்று வருடத்திற்குப் பின் முருகைய பிள்ளை புத்திரனுகத் தோன்றினர். பின்பு சிவ ஞா னு ம் பா ளென்னுமொரு பெண்ணும், குமரகுருதாசபிள்ளை யென்னுமொரு ஆணும் பிறந்தார்கள்.

சிவஞானும்பாள் பிறந்து ஓராண்டாவதற்குமுன் ஒரு நாள் நள்ளிரவிலே அக்குழந்தை பால் குடியாமல் ஓயாதழத் தொடங்கியது. குழந்தையின் தாய், ''இதற்குற்ற துன்பம் இன்னதெனத் தெரியவில்லையே. கொஞ்சந் திரு நீறு கொடுங்க''ளென இவரைக் கேட்டபோது '' இப்பொழுது யான் ஒருவருக்குந் திருநீறு கொடுப்பதில்லை ஆண்டவனிடம் கேள் தருவார்'' என்று கூறினர், அத் தாயும் அவ்வாறே யெண்ணிக் குழந்தையினருகே படுத்துக் கொண்டவுடன் ஒரு காஷாயதாரி தோன்றி ''இக் குழந்தையைக்கொடு'' என்று கேட்டு வாங்கி அதனுடம்பெங்குந் திருநீறு பூசி ''இனி அழாது'' எனத் திருவாய் மலர்ந்தருளிக் குழந்தையைக் கொடுத்துவிட்டு மறைந்தனர். பின்பு அக்குழந்தை அழாமை யை இவர் கருதி ''யாது பரிகாரம்?'' என்று வினவினுர். அதற்கு அத்தாய், நிகழ்ந்தவாறு கூறியது கேட்டுத் திருவருட் செயலை யெண்ணி யிருப்பவராயினுர் இவர்.

## துறவற வேட்கை

இப்பெண் குழந்தை பிறப்பதற்கு முன்னரே இவ்வாசிரியர் சிந்தை, துறவறத்தை மிகுதியும் நாடுவதாயிற்று. பிரதம நூலான **குமரகுருதாசர் பாடலிலே** '' திருவுயர்ந்த வாறெழுத் தான்'' என்றற்ருெடக்கத்துப் பத்தின் 10-ற் ''கரவருடங் கடகமாதம் வந்தவொரு புகரிரவிற் பழநிக்கோவில் வர

விஞ்ஞான் றருளவில்லை'' என்பது காணப்படுதலால் '' அமரர்கோ '' என்னும் பிரபந்தமுதல் '' அமிர்தமதி '' என்றற்றொடக்கத்துப் பத்துவரையிலும் பாடியுள்ள பாட்டுக்களைத் தமது மேன்மாடியி லிருந்துகொண்டு ''தேவனே! இவற்றைநீ கேட்டருளல் வேண்டும்; யான் நாளை யிவ்வூரைவிட்டுத் துறவறநிலையை அடையவுள்ளே'னெனச் சிந்தித்துப் படித்து முடித்துத் தென்புறந் திரும்பியவுடன் எதிர்முகமாக இறைவன்றோன்றிக் கூறியருளிய செய்திகளுள் ஒருசிறிதறியப்படுகின்றது. காலம், அதன்கணுள்ளபடி கரவருடத்து ஆடி மாதத்திற் போந்த ஒரு சுக்கிரவாரத்தின் மாலைப்போதாகும். இது, கலியுகம் 4993-ஆம் ஆண்டு சாலிவாகன சகாத்தம் 1814-ற் கி. பி. 1891-ஆகும். புகன்று போந்த சுக்கிரவாரத்துப் பகற்போதில் ஆசிரியர், அங்கமுத்துப் பிள்ளையென்னும் ஒரு நண்பர்பால் '' நாளை நான் பழநிப்பதியை நோக்கிச் செல்லவுள்ளேன் '' எனக்கூறினவுடன் நண்பர் '' மீண்டெப்போது வருவீர்கள் ?'' என்று வினவினர். ஆசிரியர் '' சொல்ல முடியாது '' என்றனர். உடனே நண்பர் '' இப்பொழுது அவ்வாறு செய்யலாகாது '' எனத் தடுத்து '' இது குமாரக் கடவுள் கட்டளையோ ?'' என்றும் வினவினர். அதனைத் தடுக்க ஆற்றாத ஆசிரியர் '' ஆம் '' என்றலும் நண்பர் சும்மா விருந்து விட்டனர். இப்படி '' ஆம் '' என்று கூறியதையும் பிறதருமங்களையுந் திருவுளத்தடைத்துள்ள இறைவன், '' எனது கட்டளையென்று பொய்கூறினை '' யென்று தனது வலக்கரச் சுட்டுவிரலை நிமிர்த்தசைத்துப் பல்லைக் கடித்து அச்சுறுத்திக் கோபிப்பதை ஆசிரியர் கண்டு தம்முடைய கண்களை மூடிக்கொண்டு உண்ணடுங்கி உடம்பு நடுங்கி, '' என்னப்பனே! என் கடவுளே! நிலம்பொலம் விழைந்து பொய் புகலவில்லை, ஆன்மலாபம் எய்தவேண்டுமென்பது பற்றியே அது தோன்றுவதாயிற்று: பொறுத்தருள்க '' என மனத்தினுலேயே விடையிறுத்தனர். அது தெரிந்துகொண்ட பெருமான், '' அந்த இலாபம் என்னுலாகாதா ?'' என்று திருவாய் மலர்ந்தருளி '' இனி, யான்

வருகவென்று கூறுங்காறும் பழநிக்கு நீ வரவொண்ணுது! வருவதில்லை யென்று கூறு" என்று கூறலும் அவனடியவராகிய ஆசிரியர் "அப்படியே" என்று மனத்தினுலேயே விடை யிறுத்தவுடன் இறைவன் அந்தர்த்தானமாய் மறைந்து விட்டனன். இந்நிகழ்ச்சியில் அவனொருவனுள னென்பதும், அவனெங்குமிருந் தெல்லாமறிபவ னென்பதும், அவன் அடியவர்மீது கிருபையுடையா னென்பதும், ஆன்மலாப மென்னும் வீடு பேறு அவனுலே தான் ஆகுத்தக்க தென்பதும், பிராமண ஜாதியிற் பிறந்தார்க்கே வீடுபேறேயு மென்பார் வியவகாரஞ் சாலாதென்பதும் ஐயம் திரிபற அறிந்து கொண்ட ஆசிரியர், இறைவனுக்குந் தமக்கும் நிகழ்ந்த செய்கை யாவையும் பின்னர்க் கூறித் துதித்தவாறெல்லாம் அவர் பாட்டு நூல்களுள் ஆங்காங்குக் காணக் கிடக்கின்றன. என் முதலினேர் முன்னருங் கூறினுர். "மானுட வடிவாய்த் தடுத்து நின்ற இறைவன் திருமேனி விவரம் இங்கே கூற என் மனம் இசையவில்லை" யென்றுங் கூறினுர். "சிறுமை நீக் குயர் செல்வம்" "துறவு நோக்கம்" "பிழை பொறுக்க முறையீடு" என்னும் பதிகங்களையும் நோக்குக.

## குடும்பப் பொறுப்பேற்றல்

இந்நிகழ்ச்சிக்கு முன்னரேயே தந்தையார் சிவகதி யடைந்துவிட்டார். அப்போது குடும்பகாரியம் இவரைப் பொறுத்து நிற்பதாயிற்று. தம்முடைய தென்னந் தோப்புக் களைப் பார்த்துவரும் பொருட்டு முதிர்வேனிற் காலத்து வெயிலாற் சூடுமிக்குற்ற மணலில் இவர் நடந்தனர். அப் போது ஒரு முழு முள் தம் காலிலேறினமை கண்டு அதனைக் கையால் வலிந்திழுக்கு ஞான்று இரத்தம் பாய்ந்து பெரு கிற்று. இம்முள் வருத்த மிங்ஙனமாயின் உடல் நீங்கு ஞான்று எப்பெரு வருத்தமெய்துமோ? என்பதுங் கருதி முருகையா! என்று கண்ணீர் வடித்தனர். அஃது அம்முள்மீது வீழ்ந்த பின்றை அது பிடுங்கப்படுவதாயிற்று. அன்றிரவு ஒரு நல்ல

தச்சுவேலை யுடையார் கனவிலே "என்னடிமையாகிய அந்த இளைஞனுக்கு நீ ஒரு பாதகுறடு செய்துகொடு" என்று கட்டளை யிட்டருளினன் இறைவன். இது, ஸ்ரீமத் - குமார சுவாமியத்தில் **இடையருது நிற்க விழைதலில்—**

"கொடிய கோடையிற் சுடும ணற்கணே
குருதி பாயவெ னடியி லேறுமுள்
வடிக ணீரிலே நனைத லுள்கியம்
மழவ னுக்கணி குறட ளித்தியென்
றடியை நாடுமோர் தபதி பாற்புகன்
றருளொர் தண்ணளி யிறைவ வென்னையும்
மிடிய னுகவே விடுவை யோவயின்
மிளிர்கை யாளியே விபுதர் மீளியே."

என்றாசிரிய ரருளிச் செய்தவாற்றானும் பெறப்படுகின்றது.

## சீடர்கள் சேர்தல்

இங்ஙன நிகழுநாளில் இவருக்கு வெ. அப்பாவு பிள்ளை, L. D. முத்துக்கருப்ப பிள்ளை, மு. சின்னசுவாமி பிள்ளை, சா. முத்தைய பிள்ளை யெனும் பெயருடைச் சிறந்தவர்கள் பாம்பனிற் சீடரானார்கள்.

## ஆகார நியமம்

உப்பு, புளி விலக்கி ஆறுமாதங் களாகும்போது உடம்பு மிகவும் மெலிந்து பலவீனமானார் ஆசிரியர். அப்பொழுது பாம்பனில் ஒரு தெருவழியாக இவர் போந்தனர். அங்கொரு வீட்டுத் திண்ணை மீது குழுமி யிருந்தவர்களுள் ஆங்கிலஞ் சிறிது கற்ற ஒரு மனிதன் இவரைப் பார்த்துவிட்டு "சுவல்ப காலத்திற்குள் இவர் கூடு போட்டுவிடுவார்: தகாத காரியத்திற் பிரவேசிக்கிறார்: பறக்கத்தான் பார்க்கிறார்" என்று

பரிகாசமாகத் தன்னுடனிருந்தாரோடு புகன்றனன். அவரு ளொருவர், அம் மனிதன் கூறியதை ஆசிரியருக் கறிவித்துச் சென்றனர். பலவீனத்தைப்பற்றி ஆசிரியர் தம்முடைய நண்பராகிய ஒரு வைத்தியர்பால் தெரிவித்தபோது அவர், இந்துப்பைச் சேர்த்துக் கொள்ளலாமே யென்றனர். அவ் வுரை பிடித்து இந்துப்புக் கட்டியொன்று வாங்கி இதனை யுப யோகப்படுத்தத் திருவுள்ளமாமோ? என்று தம் இறைவனை ஒரு சீட்டு மூலம் வினவினர். உபயோகிக்க வேண்டாமென் னும் உத்தரவே அங்ஙனங் கிடைத்தது. அவ்வாறே அதனை யுபயோகப் படுத்தாது விடுத்தார். பின்பு, ஒரு மாதத்தில் உடம்பு பலப்பட்டதைக் கண்டு இஃது இறைவனருளேயென உவகையுற்றார். அதுமுதல் உப்பு, கசந்த பொருளாகவே போயிற்று.

ஸ்ரீமத்-குமார சுவாமியத்து அசோக சால வாசத்தே இரத்தாக்ஷி ஞூ (கி.பி. 1924) கார்த்திகை 4-ஆந் தேதி பாடிய பதிகத்தும்—

''எம்ம னித்தரு முண்ணு முப்பையி
கந்த நுங்கழ லாயுள்கண்
செம்மை யுற்றமை மாவி யப்பெனல்
செப்பி நின்றன ளற்பொடே ''

என வருதல் காண்க.

பச்சரிசியும் பச்சைப்பயறும் கலந்து சமைத்த அன்னமே ஆகாரமாய் நிகழ்ந்து வந்தது. துறவறநிலை யடைதற்கும் தந்தையார் சிவகதியடைதற்கு மிடையிற் சில வருடங்களாக ஏககாலவுணவே கொள்ளலும், உச்சிப்பொழுது சற்றுச் சாயுமாயின் உணவேனும் நீரேனு முட்கொள்ளாதிருத்தலும், அப்படி யடுத்த தினங்களிலு நேருமாயின் அவ்வாறே உபவாச மாயிருந்து உச்சிப் பொழுது கண்டேயுண்டலும், சில சந்தர்ப் பம் 5,6 நாளாக யாது முட்கொள்ளாதிருத்தலும் இவர் கொள்கைகளாயிருந்தன.

## சுவர்க்க நரகக் கனவு

பாம்பன் பதியில் வைகுஞான்று ஒருநாள் நித்திரையில் நல்லவொரு பாதையில் நடப்பவராயினர். அப்பாதை பிரிதொரு பிரிவாகவுஞ் செல்வதாயிருந்தது. அதில் இவர் போதருங்கால் ஒரு பாங்கரிலே கற்ருழையும் கள்ளியும் விரவிய் காடு கண்டதுமன்றி, அவணிருந்து பல கற்களைத் தம்மைநோக்கி யெறிவாரையும் மணலையள்ளி வீசுவாரையுங் கண்ணுற்றனர். அன்னோர் சிறு சிறு கரித்துணிகளை அரையிற் கட்டிக்கொண்ட கருநிறத்தவர்களாய்ப் பலவிடத்தும் போய் மறைந்து கொள்பவரா யிருந்தார்கள். பிறகு பலத்த தேகிகளான மூவர் இவரெதிரேயெய்தி எங்களுடன் வருகவென அழைத்தனர். அதற்குடன்பட்ட இவரை அவர்கள் கூட்டிக்கொண்டு தென்திசை நோக்கிச் சென்ருர்கள். எதிரேயொரு மார்க்கங் காணப்பட்டது. மூவருள் இருவர், இவருடைய இரு கரங்களையும் நன்கு பற்றிக்கொண்டவராகியும் ஒருவர் முன்னே நடப்பவராகியும் தெற்கே செல்லும் அம்மார்க்கத்திலே இவரை நடத்தத் தொடங்கினர். அஃது ஆமையின் முதுகொத்து நடுவே யுயரமாகவும் பக்கங்கள் படிவாகவு மிருந்தது. இருமருங்கும் அடர்ந்து நெருங்கிய தில்லைமரங்களே நிழலளிக்கும் மரங்களென நின்றன. அம்மரங்கள் பெரிதும் வெப்பந் தரத்தக்க பாலுடைக் கொடுமையுள்ளன. இம்மரங்களுக்கு நடுவணுய அந்நீள்வழியெங்கும் மலம்போன்ற அசுத்த வழவழப்பான சேற்றினைக் கண்ணுற்ற இவரை அதன்கண்ணே அன்னோர் நடத்துப்போது இவர் வழுக்கி வீழ்ந்து விடாது பற்றியிருப்பவை அவர்கள் கைகளேயாயின. வழுககல் கொள்ளும் இவருடைய கால்களும் விரல்களும் அதிகமும் வருந்தலாயின. ஒன்றரை இரண்டு மைல் நீட்சியுடைய அம்மார்க்க முடிவிலே அம்மூவரும் இவரைவிட்டு மறைந்துபோயினர். அவர்களுடைய பாதங்கள் அச்சேற்றில் நடைபெறவில்லை யென்பதையும் இவர் கவனித்துக் கொண்டனர். பின்பு, எதிரே தூய வெண்மணற்

பூமி காணப்பட்டது. அதன்கண் நடைதருமிவர், கீழ்த்திசைக் கண்ணே அழகினு மழகாகச் செம்மை முதலிய பன்னிறங் களாகப் பழுத்த பழத்திரட் பொலிவோடுள்ள மரச் செறிவு களையுஞ் செடிகளனைய சிறு மரங்களையும் கண்ணுற்று அதிசு யித்து அப்பழங்களிற் சில கிரகித்து நுகர்ந்தனர். அவற்றின் இன் சுவைகளையும் நன் மணங்களையும் உவமிக்க உலகில் யாது மின்றெனவு நிச்சயித்துக்கொண்டு மரச்செறிவுகளின் பராரை களை நோக்கினர். அவற்றின் மிசை பலரேறியிருந்தும் தரையிற் சிலர் நின்றுகொண்டும் பழங்கள் பறித்துண்டலையுங் கண்ட இவர், அம்மரங்கள் அதிக வுயரமுள்ளன அல்லவென் பதையு மறிந்தனர். விழிப்பார்ந்த பின்னை ''இவ்வுலகு மாந்தருட் பெரும்பாலார், நரக சுவர்க்கங்களுமிருக்குமோ? என ஐயுறுகின்றனர்: நீ அதனுட்படலாகாது'' என்னுங் கருணைக் கருத்தானே அம்மார்க்கங்கள் இவ்வா றிருக்குமெனத் தெய்வம் நமக்கறிவிப்பதாயிற்றென உள்கினவராய் மேனி கழ்த்திய அனைத்தையுந் தம்முடைய சீடர்கட்கு உரைக்கு நராய் நிலவினுரிவர்.

## குறிசொல்வாள் கூற்று

தம்மோடு சம்பாஷணை புரிந்துகொள்ள வந்த ஒரு முகம்மதியரோடு தாம் தமது வீட்டுக் கூடத்திலிருக்கும் போது அறுபதிற்கதிகமான வயதுடைய ஓரம்மாள் கையில் வேப்பிலையும் வேத்திரமுங் கொண்டுவந்து தெருவிலுள் ளார்க்கு உள்ளபடி செய்திகள் கூறிப் பலரையுந் திருத்தி செய்து அவரவர் கொடுப்பன பெற்றுக் கொண்டு வருதலை அம்முகம்மதியர் அறிந்து இவருக்குத் தெரிவித்தார். உடனே இவர், தாமிருப்பது அவளுக்குத் தெரியாவண்ணங் கதவடியி லேயே மறைந்து கொண்டார். அடுத்த நேரத்திலே அவள் இவருடைய இல்லத்திற்கு நேரே வந்து நின்று, அப்பாவு! என அழைத்தாள். இவரெழவில்லை. அவள், ''ஏன் கதவடி

யில் மறைந்திருக்கின்றனே? எழுந்து வா'' வென்றாள். இவர், அதற்கு மெழாதிருந்தனர். பின்னர் அவள், ''இவ்வளவு ஐயமுனக்கு உண்டாதல் எதுபற்றி? எழுந்து வா. யான் சொல்லவேண்டியது உண்''டென்ருள். அவ்வுரை செவிக்கொண்டவுடன் இவரெழுந்து வாயிற்படியடைந்து நின்ருர். ''கோர்ட்டு வழக்குகள் உனக்கு அனுகூலமாய் முடியும்: கவலைப்படேல்: உன் உயிர்த்துணை ஆண்டியே (குமாரன்). அவனை மறவாதிரு. எல்லா நன்மையும் உண்டாம். உன்மேலே காணப்படுகின்ற கோடிவஸ்திரத்தையெனக்குக் கொடு. யான் பெற்றுக்கொள்வேன்:'' என்றனள். அப்படியே அதனை அவளுக்குக் கொடுத்து அவளது ஞானத்தை மெச்சிக் களிகூர்ந்திருந்தார்.

ஆசிரியர், கட்டைகளை வெட்டி விற்பனை செய்து கொள்வதற்காக ஆற்றங்கரை தாமரைக்குள மென்னும் இரண்டு டிவிஷன் காடுகளை இராமநாதபுரம் ஜமீனிலும் தேங்காய் முதலிய பலன்களை யனுபவித்துக் கொள்வதற்காகத் தென்னந்தோப்புக்களை இராமநாதபுரம்-பொ. கோட்டைச்சாமித் தேவர்களிடத்திலுங் குத்தகையாகப் பெற்றனர். சில வருஷங்களாக இவ்வாறு வியாபாரமிழைத்திருந்தனர்.

## சண்முக கவசமும் பஞ்சாமிர்த வண்ணமும் பாடல்

தமக்குற்ற ஓரல்லலினின்று நீங்கு நிமித்தம் அகாராதி னகாராந்தத் தொடக்கமாய் வரூஉம் முப்பது செய்யுளாகிய **சண்முக கவசத்தைக்** கரவருடத்துக் (கி.பி. 1891) கார்த்திகை மதி 8உ ஆதித்த வாரத்திலே திருவிராமேச்சுரத்திலே ஆசிரியர் பாடினர்: அவ்வல்லலினின்றும் நீங்கினர். இதன் மகிமையை யாவரே புகலவல்லார்? நான்காம் பதிப்பாயுள்ள நூலகத்தே காண்க. இது சாமானியர் நூலோடு வைத்தெண்ணப்படுமோ? படாதே. ஆசிரியரும் திருவனந்தபுரம்

ந. சுப்பிரமணிய பிள்ளையும் பாம்பனெனும் பதிக்கட் சந்தித் திருந்த ஒரு பகலில் ஆசிரியரைக்காண வந்தவர்களு ளொரு வர் தமக்குப் பாடமாயிருந்த சிற்றின்ப வண்ண மொன்றனை யினிமையாகப் பாடினர். அதனைக் கேட்டிருந்த மேற்படி பிள்ளை, நங்கடவுளாகிய குமாரசுவாமியின் பேரில் சுவாமிகளும் வண்ணம்பாட வேண்டுமென்ற திவ்விய வேண்டு கோளை யங்கீகரித்து, ஆசிரியர் கரவருடத்துக் (கி.பி. 1891) கார்த்திகை மதி 24உ சேய்வாரத்திற் **பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணத்தைப்** பாடி முடித்தனர். இதன்மீது குமாரக்கடவுள் பிரியம் வைத்து வெளிப்பட்டு நின்றருளிய கட்டளை விவரம் பின்னர்க் கூறப்படும்.

## வமனபேதி நீக்கம்

வாந்திபேதி யென்னுமொரு நோய் மூன்று நாள் காறும் இவரைப் பற்றிக்கொண்டபோது மரணமே யெனும்படி செயலற்றுக் கிடந்து தம் பெருமான்மீது சித்தத்தைச் செலுத்தினவராயினர். பாதிராத்திரியாய அஞ்ஞான்று இவருடைய பத்தினியார், நாயகர்இறந்து பட்டார் போலும் என்று கருதிக் கதறியழுது கால் கைகள் காயப்படுமாறு வீழ்ந்து மூர்ச்சையாயினர். உடனே, ஒரு காஷாயதாரி தோன்றிக் கையிலுள்ள பிரம்பினலே தட்டியெழுப்பி, ''நீ இப்படித் துன்பப்படுவதென்னை ? அவன் மரணமாகவில்லை. இம்மாடத்திலுள்ள திருநீற்றை யெடுத்துக்கொண்டு, 'உன்னை நான் விட்டகலவில்லை' யென்று யான் கூறினதாக அவன் செவியிற் சொல். கண்ணைத் திறந்துகொள்வான்; திருநீற்றினை யிட்டு இந்நோய் போயிற்றென்றுங் கூறுதி'' என்று சொல்லியருளினர். பத்தினியார், ''சுவாமி! யான் வீட்டிற்கு விலக்கமே. திருநீற்றினை யெப்படித் தொடுவேன்'' என்று கூறினர். ஆண்டவனுர், ''இப்படிப்பட்ட ஆபத்தில் அந்நியதியில்லை; செய்'' என்று திருவாய் மலர்ந்தருளி

மறைந்தனர். அருமைப் பத்தினியாரும் அவ்விதமே செய்தனர். ஆசிரியர் குணமுற்றெழுந்திருந்தார். இங்குப் போந்தகாரியம் மூன்றனுள் முற்பட்டதும் பிற்பட்டதுமே ஆசிரியராலும் மேலே **இடையருது நிற்க விழைதலில்—**

''அத்த மேபெறற் கெனைப்பி டிக்கவென்
றயர்மு யற்சியி லெனையி சைத்திலே
செத்த மேனிபோல் வமன பேதிநோய்
திளைத்த போதுநீ றளித்து மேவினுய்''

என்று கூறப்பட்டனவே.

## வழக்கில் வெற்றி

இவர் பெற்றிருந்த காட்டுக் குத்தகைக்கு விரோதமாய்ப் பகைவரொருவர் ஒரு புளியந் தோப்புக்குள் வளர்ந்திருந்த காட்டு மரங்களை விலைக்குப்பெற்று அவற்றுட் சிலவற்றை வெட்டிப் பண்டிகளிலேற்றி இராமநாதபுரத்தில் விற்பனை செய்யக் கொண்டுவந்தபோது இவருடைய மனிதர்கள் அக் கட்டைகளைத் தடுத்து இவருடைய பேட்டையிற் குவித்து வைத்தார்கள். இச் செய்கைபற்றி நிகழ்ந்த கிரிமினல் வழக்கிற் பகைவர் இவரையுஞ் சேர்த்துவிட்டனர். விசாரணையில் அதிகாரிக்கும் இவருக்கும் நடந்த வாக்கு வாதத்தினுல் அதிகாரி கோபங்கொண்டு, உன்னைச் சிறைப்படுத்துவேனென வுரைத்தார். அது கருதிய இவர், இருப்பிடமடைந்து, ''என்னுண்டவனே யான் அனியாயமொன்றுஞ் செய்யவில்லையே, அதிகாரி சிறைப்படுத்துவே னென்கின்றனரே'' யென்றுரைத்துக் கண்ணீர் உகுத்துப் படுத்திருந்தார். அற்றைப்போது விடிவதற்குள் இவர் நித்திரை யுறுமாறு மயக்கிக்கொண்டு ஒருவர் தோன்றி, ''வழக்கில் நினக்கு ஆபத்துண்டாகாது. நவபாஷாணம் போய்ச் சமுத்திரத்தின் மூழ்கித் தேவாலயந் தரிசித்து இங்கு வருதி'' என்று கூறி மறைந்தபின், இவருந் தம்முடைய காரியஸ்தரோடு போய்

---

* திளைத்தல் - அனுபவித்தல்

அத்தீர்த்தத்தின் மூழ்கு ஞான்று, பீடைகள் சிகையிலுள்ள பேன்களென நீரிலே போதலையும் தலைக்கனம் விலகியதையுங் கண்டு மகிழ்ந்து விழிப்படைந்தனர். அடுத்த தினமே காரியஸ்தரோடு ஆங்குப் போந்து ஆண்டவன் கட்டளைப்படி செய்து திரும்பிவந்து நியாய மன்றத்திற்குச் செல்லவேண்டிய காலத்திற்சென்றனர். அதிகாரி யிவரைக் கண்ணுற்றுக் குற்றமொன்றுமில்லை. நீயும் மற்றையரு மிருப்பிடஞ் செல்லலாமென்று நியாயத் தீர்ப்பளித்தனர். அறிந்தவரெல்லாம் அதிசயித்தார்கள். மற்றொரு காலத்தில் இராமநாதபுரம் ஜமீனிற்பெற்ற காட்டுக்குத்தகையிற் குடிகளுஞ் சில காடுகளை வெட்டிக்கொள்ளலா மென்னும் உத்தரவைத் தாசில்தார் செய்த நிமித்தம் (பாக்கி) செலுத்தவேண்டிய ஒரு சிறு தொகையை இவர் செலுத்தவில்லை. அது பெறவேண்டிச் ஜமீன்தார் மானேஜர் தொடர்ந்த வழக்கிலே கோர்ட்டுச் செலவைப் பல நூறுகச் செய்தலைக் கருதிய நீதிபதி வட்டி யில்லாமலே பாக்கியைப் பெற வேண்டும். கோர்ட்டுச் செலவெல்லாம் இழந்துபோக வேண்டுமென்று தீர்மானித்தார். தீர்ப்புக்குக்கட்டுப்படாத மானேஜர் பெரியகோர்ட்டில் அப்பீல் செய்தார். அந்நீதிபதி, ''பாக்கியைக் கொடுக்கச் சொல்லி வட்டி செலவுகளைத் தள்ளினமை சரியன்று'' என அபிப்பிராயப்பட்டார். இவர் வக்கீல், இரண்டு தஸ்தாவேசுகள் பார்வையிடாத இக்கோர்ட்டார் அவற்றைப் பார்வையிடற்கு இவ்வழக்கு இற்றைப்போது நிறுத்தப்பட வேண்டுமென்றார். நீதிபதியு மிணங்கினர். அற்றைப் போதிரவு சோமசுந்தரக்கடவுள் ஆலயம்புக்க ஆசிரியர், அங்கிருக்கின்ற தண்டபாணி மூர்த்தியைத் தரிசித்து ''நியாயங்கொடுக்க வேண்டுமே, புதுமண்டபத்துக் கருங்கற் சவுக்கையிற் படுத்திருப்பேன்'' என்பது தெரிவித்துவிட்டு அதன்கட் படுத்திருந்தார். எழுதிய காகிதத்தோடு ஒருவர் தோன்றி ''இது காண்டி'' என்று அதனைக் காட்டினர். அதனிற் ''கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்பே உறுதி'' என்னுஞ் செய்தி யெழுதியிருந்தது. போதுவிடிந்து இவர் நீதிமன்றம் அடைதற்கு முன்னரேயே அவ்விதத் தீர்ப்பையே பெரிய நீதிபதி

செய்துவிட்டனர். இதுவும், முற்போந்த கிரிமினல் முடிவுமே கூறிப்போந்த **இடையருது நிற்க விழைதற்கண்—**

"பத்தர் வாழுமூர் முகவை யிற்சிறைப்
படுத்து வேனெனு மிழற்றி னுரையே
சுத்த போதியென் றெனைவி டச்செய்த
துறைவ நீயிஙன் மறைவ தேதுகொல்.

சொன்ன தீர்வையைப் பெறுமு னேயெனைத்
துயிற்றி யேநவ சிலைக்கண் மூழ்கெனப்
பன்னி யன்னவா றிவனு மாடலிற்
பழிகள் பேனென வொழிய வாடினை
பின்ன ரந்நகர்த் தலைவர் நீதியைப்
பிழைத்து மாபொருள் பெறச்செய் காரியம்
மன்னு ருதுசெய் தருளி னுயிஙன்
மறப்ப தென்னைவேல் பிடித்த சொன்னமே.

முடிந்த தீர்வைமே லுயர்ந்த தாக்கனேர்
முயன்ற போதுநான் மயங்கு ருமனீ
இடந்த ராதுவே றிதனை நோக்கெனு
வினிது தீட்டியோர் முடிவு காட்டினுய்
விடிந்து போமுனே மதுரை நீதியார்
விளம்பு தீர்வும விதங்கு லாவிய
துடங்கு கோடலின் றிஙன்வி டுப்பையோ
வுயிரி னுதனே யயிலி னுதனே."

என வருவனவற்றுள் ஆசிரியர் கூறியுள்ளார். பின்பு அப்பாக்கியையும் அம்மானேஜருக்குச் சேரும்படி ஆசிரியர் செய்துவிட்டனர்.

## சித்தர் நூலாராய்ச்சி

சித்தர் நூல்கள் பல படித்துப் பார்த்தார். இவற்றிற் சொல்லப்படுகின்ற மருந்து, மந்திரம், மை, இரசவாதம், சோதிடம், (மூச்சிழுத்தடக்கும்) யோகம், யோகசித்தி முதலியன உலோகோபகாரமே யாயினும் நமக்குத் தேவை யில்லை: ஆன்மலாப மொன்றே தேவை: அஃதாண்டவ

னுக்கிரகத்தால் எய்துமென்பதை அவனறிவிக்கவே அறிந்துகொண்டனை நெஞ்சமே! எனத் தமது நெஞ்சத்தை அப்பிடிப்பினின்றுந் திருப்பிக்கொண்டனர்.

## சேஷகிரிராயர் நட்பும் சுவாமிகட்குச் சிறப்புப் பெயர்களும்

பாம்பனிலே சேஷகிரிராயர் என்னும் பெயருடைப் பிராமணர், இவ்வாசிரியருக்கு ஒரு நேயராயினர். அவர் ஆங்கிலங்கற்று இராசாங்கத்துத் தந்திச்செய்தி ஆபீசில் உத்தியோகமுடையவரா யிருந்ததோடு வடமொழியிற் பண்டிதராயு மிருந்தார். ஒருநாள், ''நாஸ்திகர் பிரத்தியக்ஷ மொன்றுமே கொள்ளத்தக்கது. அப்பிரத்தியக்ஷமான யாதுங் கொள்ளத்தக்கதன்றென்பது கொண்டு உலகியற்றியான் இல்லை யென்கின்றனர். இவர்வாயை அடக்கும் வழி நன்கு புலப்படவில்லை. நீங்கள் யாது கூறவுள்ளீர்கள்?'' என வினவினர். அப்போது, ''இரும்பிற்கு எதிராக வைக்கப் பட்ட காந்தம் அவ்விரும்பை யிழுக்குங்கால் அதனைப்பற்றி யிழுத்தல் கட்புலனுகாதன்ருே, அதனுற் கட்புலனுகாச்சக்தியு முண்டெனஅந்நாஸ்திகர் கொள்ளவேண்டுமே: கொள்வரேற் கொண்ட நாஸ்திகங் குலைவுறுமே''யென இவர் கூறினுர். ''மேலும் காந்தத்தின் செயல் கட்புலனுதலாற் பிரத்தியக்ஷ மும், அதன் சக்தி கட்புலனுகாமையால் அப்பிரத்தியக்ஷமுங் காணப்படுமாற்ருனே பிரத்தியக்ஷ அப்பிரத்தியக்ஷங்கள் பல் பொருளகத்துங் கொள்ளக்கிடப்பன. கொள்ளப்படுதலினும் அறிவில் பொருள் அறிவுள்பொருளாதலும், அறிவுள்பொருள் அறிவில்பொருளாதலும் இல்லையெனப் பகுத்துணரல் அறி வுடைமையாம். காந்தசக்திபோலவே உலகெலாம் வியாபித் துள்ள பரமான்மசக்தி யுண்டு. காந்தசக்தி தூரத்திலிருக்கும் இரும்பை யிழாது சமீபத்திலிருக்கும் இரும்பையே யிழுத்துத் தன்னேடு சேர்க்கும். அதுபோலப் பரமான்மசக்தியுந் தன்னை

விரும்பி நெருங்காத சீவனையிழாது. விரும்பி நெருங்குஞ் சீவனை யிழுத்துச் சேர்த்துக் கொள்ளும். இதுவே குறிப்பறிந் துபுரி அனுக்கிரக'' மெனும் பொருள் பொருந்தவுஞ் சில கூறினர். இவற்றையுய்த்துணர்ந்த ராயர், உவகைபூத்த சிந்தையோடு ரூபாய் (100) நூறு கொடுக்கக்கடவேன். நுங்கள் நூல் அச்சிடுங் காரியத்திற்கு அது உபயோகப்படட்டும் என்று அத்தொகையை நல்குநராயினர். ஆசிரியர், தம் மாற் பாடப்பட்டுள்ள **பரிபூஜன பஞ்சாமிர்தவண்ணத்தைத்** தாமே படிக்குமொருஞான்று கேட்டிருந்த ராயர், சந்த மதுரமும் அர்த்தபுஷ்டியுமுடைய திதுவெனக் கழிபேருவகை கொண்டார். இத்திற வுணர்வுடை யுத்தமகுண ராயர் சம்மதமாகத்தான் **குமரகுருதாசர்** எனும் பெயரொன்று இவர்க்கு ஏற்படுவதாயிற்று. இதற்குமேல் அவ்வாபீசிலுள்ள உத்தியோகஸ்தர் அனைவரும் இவர் மீது விசுவாசம் பாராட்டி யிருக்குநராயினர். துறவுறநிலையடைந்து பலவருடங்களாய பின்னர்த் திருமலைராயன் பட்டணத்திலுள்ள ஒரு தேவதை, ''குமார சுவாமி'' என இவர் பெயர் குறிப்பிடுவதாயிற்று. அஃதும் வழங்கப்படுவதாயது. **குமரகுருதாச சுவாமிகள் பாட**லெனும் பெயர் பெற்ற பிரதம நூலில் ''அவனியாசை'' எனுந் தொடக்கத்துப் பத்தின் 8-ல்—

''என்னுற் பன்னமுவ் வாறிரண்டாண்டெனு
விங்கு ளோரூகித் தோதுகிறுர்''

எனப் பாடுமாற்றுனே அஞ்ஞான்று ஆசிரியர்க்கு வயது இருபது கூறலாமெனச் சிலர் மதித்தனரென்பது காணப் படுகிறது. இச்செய்யுள் பாடியகாலம் தாரண ஞு சித்திரை மீ என்பதுங் குறிப்பிடப்பட்டுள்ளது. இது, கி.பி. 1884-ஆம். திருக்கோயிலூர் சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டு முன்பாக 1908-ஆம் வருஷத்துக் காலண்டர் கேஸ் 112-ல் தமக்கு வயது (60) அறுபது சொல்லலாமென்று ஆசிரியர் கூறியுள்ளார்.

## விசித்திர விசேட கவிகளியற்றல்

ஒருநாள்,

"கோத்தயிர்வெண் ணெய்த்திருடன் கோலமரு காநறிய
பூத்திருடன் றன்மதலாய் பொங்குகுறக்—கோத்திரத்தோர்
பெண்டிருடிச் சென்ற பெருந்திருடா வென்போத
முண்டுதிரு டத்தெரியா யோ."

எனநிகழ் வெண்பாவை ஒரு காகிதத்துண்டில் இவரெழுதித் தழுவணை யடியில் வைத்துவிட்டுப் படுத்திருந்தார். அப்போது கைகொண்டு மெத்தென அடிக்கும் ஒரடி தமது முதுகில் வீழ்ந்ததை யுணர்ந்து "இறைவ! பாடிய பாட்டு, திருவுளத்திற்குச் சம்மதமில்லையென இதன்மேலு மறிவிக்கப் படுமாயின் அதனைப் பரிகரித்து விடக்கடவேன்" எனச் சிந்தித்துப் படுத்துக் கொண்டனர். அவ்வித அறிவிப்பொன்றும் ஏற்படவில்லை. நிகழ்ந்த தலம் பிரப்பை. தம்மிடம் வந்தவொருவர், தம்முடைய வுடம்பெங்குந் திருநீறு பூசுதலைக் கனவிற் கண்டார். பாடலிற் பொன் மயிற் கண்ணியில்—

"தேம்பெருகு சந்தமத்தர் தேடியிட மார்க்கமின்றிச்
சாம்பலிட்டு மையறந்த சாமியெங்கே பொன்மயிலே."

என ஆசிரியர் பாடியிருத்தலானும் இஃதறியப் படுகின்றது. பத்துச் செய்யுளை யுள்ளடக்கிய தசபங்கி யெனும் ஒரு பாட்டை ஆசிரியர் பாடித் தமக்கு முன்பாக விருக்கின்ற ஒரு நண்பரிடங் காட்டினர். சென்னை வாசியாய அவர், (100) நூறு செய்யுளை யடக்கிய சதபங்கியை இருமாதத்திற் கதிகமான காலங்காறும் பிரயாசப்பட்டு இவ்வூர்ப் பண்டிதர் வேலாயுத முதலியார் முடித்தார்: அதன்கண் ஓர் எழுத்துப் பிழையிருந்து ஒரு பெரியாரால் திருத்தப் பட்டதென அவரே யெனக்குச் சொல்லின ரென்றும், அதனை யான் காணக் கிடைக்கவில்லை யென்றும் ஆசிரியர்க் குரைத்தார். அவர் வியப்புக்கருதி 125 செய்யுள்களை யுள்ளடக்கியுள்ள "பஞ்ச

விஞ்சதியதிக சதபங்கி'' எனும் மகா விசித்திர விசேட கவியை ஆசிரியர் பாடியருளினர். இஃது இறைவனைச் சிந்தித்திருந்து ஆலோசித்து இரண்டரைக் கடிகையுட் பாடப்பட்டதாகும். பங்கியான கவியனைத்தும் இறைவன் பெயருக்குரியனவாய்க் குழிப்புவண்ணச் செய்யுள்களா யுள்ளன. இத்திறப் பாட்டொன்றனை வேறு எந்நூலகத்தும் காண்டற்கில்லை. இது, ஆசிரியர் துறவறமடைந்த பின் பாடப்பட்டு **பாடலோடு** சேர்க்கப்பட்டதாம். கி. பி. 1901-ல் அச்சிடப்பட்டதா யுளது.

## தல யாத்திரை - குமரகோட்ட தரிசன விசேடம்

ஆசிரியர், தலயாத்திரையை விரும்பித் திருவாலவாய், காளத்தி, திருத்தணிகை, திருவண்ணுமலை யென்னுந் தலங் களைத் தரிசித்துக் கொண்டு காஞ்சிபுரத்தை யடைந்து ஆடிசன்பேட்டைச் சத்திரங்களுள் ஒன்றிற் பத்துத் தினங் களுக்கு அதிகமாக வைகி அங்குள்ள தெய்வமூர்த்தங்களைத் தரிசித்த பின்பு, செலவுக்குரிய பணங்குறைந்தமை கருதி அத் தலத்தை விட்டுப் புறப்பட ஆரம்பித்துச் சத்திரத்தின் தலை வாயிலைக் கடந்து வீதியை மிதித்தனர். மிதித்திடலும் தலை யில் வெள்ளை முண்டாசும், அரையிலும் மற்றுடம்பினும் வெண்ணிற ஆடையும், அங்கியு மணிந்துகொண்டு கிழக் கிருந்து மேற்கு நோக்கி வரூஉம் 30, 35-வயதுடைச் செவ் வுடம்பினரொருவர், இவரை நோக்கி "நீர் எவ்வூர்?" என்று கேட்டார். இவர், "யான் தென்தேசம்" என்றார். அவர், "இங்கே வந்த காரியம் யாது?" என வினவினர். இவர், "தெய்வ தரிசனமே" என்றார். அவர், "குமரகோட்டம் தரிசித்ததுண்டா?" எனக் கேட்டனர். இவர், "அஃதியாண் டுளது?" என வினவினர். அவர், "இங்கேதானுளது; காட்டுவேன்: என் பின்னே வருக" என்று கூறி மேற்கு நோக்கி விரைவாக நடந்து சென்று, உடன் வந்த இவரை

நோக்கி, " இதோ கொடிமரம் : இதுவே குமர கோட்டம் " என்று சுட்டிக் காட்டினர். இவரும் அதுகண்டு காட்டினவரைத் தேடினர் ; அவர் காணப்படவில்லை. உட்கவலையோடு கோயிலை வலம்வந்து திருமுன் நின்று, "நின்கருணை யிருந்தவாறென்னே ! நின்னைப் பாடியுள்ள பிரபந்தம் படித்துக் காட்டற்கும் அஃதென்கையி லில்லையே" யெனக் கண்ணீர் உகுத்துப், " பொழுதாய் விட்டமையின் என் பிரயாணந் தடையுண்ணுது புகைபண்டி யெனக்குக் கிடைக்கும்படி கிருபை செய்"யென வணங்கி விரைந்து போந்து அப்பண்டியிலேறினர். அக்கணமே அப்பண்டியும் புறப்படலாயிற்று. அதன்கண் தனியாயிருக்கலுற்ற ஆசிரியர், ஆண்டவன் வந்து செய்த காரியத்தை எண்ணி யெண்ணிப் பெருமூச்சு விட்டுத் தேம்பித் தேம்பியழுதார். இப்பரம தண்ணளி நிகழ்ச்சிபற்றி ஸ்ரீமத்-குமாரசுவாமியத்து **வருகை விழைந்திரங்கலில்—**

" பிமர மீட்டஞ்செய் காஞ்சியி னுன்சிலநாள்
பெரிய கோயில்கள் கண்டுபு றப்படுஞான்
றமல மூர்த்தங்கொ ளாசுடை வீக்கியசெவ்
வழக னுயென்முன் வந்துநுங் காரியமென்
குமர கோட்டங் சணுற்றதின் றிங்செனவே
குயின்று காட்டிம றைந்தத யாநிதியே
தமசில் வேற்செங்கை யாநினை யேகருதித்
தடவு கின்றதெ னெஞ்சைவ லக்கரமே "

என்று ஆசிரியர் பாடியருளினர்,

பின்னர்த் திருக்கழுக்குன்றந் தரிசித்துவிட்டுத் தமது வாசநகர் போந்தார்.

## நெருப்பு மிதித்தலின் மர்மம்

இவருடைய சகோதரராகிய முத்தைய பிள்ளை அவருடைய நண்பராகிய சேதுவென்னும் பெயரிய ஒரு யௌவன

புருஷரோடு இவர் முன்னர் வந்து நின்று, "முகம்மதியர் பத்து நோன்பிலே பெருநெருப்பி லிறங்கிச் செல்கின்றனர். அதனைத் தெய்வ மகிமையென்றே பலரு மெண்ணுகின்றனர். உண்மை அதுதானோ?" என வினவினர். "அக்காரியம் புரிவோர் முகம்மதியர் மட்டுமேயல்லர்; முருகவேள் கோயில், துரோபதை கோயின் முதலிய சில கோயில்களில் இந்துக் களுஞ் செய்கின்றனர். அச்செய்கை தெய்வ மகிமையினால் நிகழ்வதென்று நீ நினையற்க. ஒரு பெரிய சட்டி நிரம்பிய நெருப்பினை இங்கே கொண்டுவா" வென்றிவர் கூறினர். அவ்வாறு கொண்டு வரப்பட்ட தழலை வீட்டு நடையிற் பரப்பும்படி செய்து "இதன்மிசை நில்லாமல் நடந்துசெல், சுடா" தெனு மிவருரை கேட்ட முத்தைய பிள்ளை அது செய்ய அஞ்சினர். இவர், "சுடுமாயின் அதனை யான் மாற்றுவேன். அஞ்சற்க" என்றலும், முத்தைய பிள்ளை அத் தழலின் மீது நடந்தனர். நடந்தமை கண்ட அவருடைய நண்பரும் அதன் மிசை நடந்துவிட்டு, "இது மந்திர சக்தியோ?" என்று வினவினர். "மந்திரமன்று; தந்திரமே"யென்று கூறிய இவர், "கை விரல்களாலே தழலையெடுத் தெறிந்திடலாம்; பிடித்துக்கொண்டிருத்தல் கூடாதாகலிற் கைத்தலவுறுப்பு ஒரு மாத்திரை சூடு பொருக்கு மென்பதையும், காலின் மிதியுண்ட தழல் சற்றுப் பொறுத்தே சுடு மாகலிற் காலடித் தல வுறுப்பு இரண்டு மாத்திரை சூடு பொறுக்கு மென்பதையும், தீயில் விரைந்து சென்று விடலும் அதன் சாம்பர் பாதத்தி லொட்டிக் கொள்ளுமாயிற் சுடுதலைச் செய்யு மாகலிற் சாம்பர் பூக்காமலே தீயைக் கனியச் செய்து கோடலும் பாதத்தின் மேற்றலம் ஞெமுங்காதவாறு தழலைப் பரத்திக் கோடலுமே தந்திரமென்பதையும் நீவிர் உணரல் வேண்டு"மென்று விளக்கிச் சொல்லினர். பின்பு, உண்மை தெரிந்துகொண்ட அவ்விருவரும் பாம்பனில் வானளாய இருப் பைத் தோப்பகம் போந்து ஒருகுழி விசாலமுறத் தோண்டி அதன்கண் ணிடப்பட்ட காஷ்டங்களை நெருப்பாக்கிக் கொண்டு அதன் மிசைப் பன்முறை நடக்கலுற்றனர். முகம்

மதிய இளைஞரும் பிறரும் அதுகண்டு இச்செய்கை யாதோ என இறும்பூது கொண்டிருக்குநராயினர்.

## சகோதரர் மரணம்

இம்முத்தைய பிள்ளை விருப்பத்திற் கிணங்கிய ஆசிரியர், அப் பிள்ளைக்குத் திருவாறெழுத்தை உபதேசித்தருளிய துண்டு. சின்னாட்களின் மேல் அப்பிள்ளை மரண மெய்தினர். அவர் மரணங் கருதிய மாதாவானவர், இரவும் பகலும் அழத் தலைப்பட்டனர். "இவனை மூத்தவனே சபித்துக் கொன்றனன்" என்பதும் அவரரற்றலிற் காணப்பட்டது. இப்படி யொருவாரங்காறும் அழுதுகொண்டிருக்கும் மாதாவின் நித்திரையிலே அம் முத்தைய பிள்ளை தோன்றி, "நீ இவ்வாறழுது பிரலாபித்தல் எற்றிற்கு? எனக்கு மூத்தவருள்ளம் வருந்துகின்றதே, அது வருந்துதலாகாது. அவராலேயே எனக்கொரு நல்லிடங் கொடுத்தார்கள். நீ அவரை மதி. இதுகூறவே யான் இங்கு வந்தேன். அதிக நேரமிங்கே யான் தாமதித்து நிற்றல் கூடாது. பாயசத்திலெனக்கு விருப்பம்; அதனைச் செய்துவை; யாண் ஏற்றுகொள்வேன்" என்பன கூறி மறைந்தனர். அன்றிரவு புலர்ந்தவுடன் மாதாவானவர், தமக்கன்புடைய ஒரு மங்கை மூலமாக நித்திரையி னிகழ்ந்த வெல்லாம் இவருக்கறிவித்துவிட்டு அவ்வரற்றலினின்று நீங்கி யிருப்பவராயினர். பாயசம் வைத்துப் படைத்தனர். ஆசிரியர், இம்முத்தைய பிள்ளை விஷயமாக ஸ்ரீமத்-குமார சுவாமியத்துத் **திருவருட்செயன் ஞாபகத்தில்—**

"எம்பி முத்தைய்ப் பெயருடை யானென்
சொந்த தவநெறி பழித்துவை வேற்றுத்
தொலைந்த தையுமறிந் தேன்குக தேவே"

எனக் கூறியிருத்தலுமோர்க.

## சுவாமிகள் கைரேகை விசேடம்

இரேகை வழியே இலாபநஷ்டங் சுழறுவதாயுள்ள கமலமாமுனிவரது அருந்தமிழ்ச் செய்யுணூல் ஒன்றின் கண்ணே சுவாமிகளைக் குறித்து யாதாயினுங் கூறப்படுமா என்பதை யறிவான் நேயர் பலரும் ஒருநாள் முயன்றனர். அந்நூல் வைத்திருப்போர், அற்றைப் போதே 'கபாலிமுக் கோணக் கைலாசரேகை' இக்கரத்துள தென்பதை ஆசிரிய ருக்கு விவரமாகச் சுட்டிக் காட்டினர். காட்டிவிட்டு இதற் குரிய இலிகிதங் கிடைக்குமா என்று ஏடுகளைச் சோதித்து இரண்டு ஏடு எடுத்தார். அவற்றுள் "தமிழால் வேற்பெருமா னைப் பாடுதல், அறிவுநூல் பல தெரித்தல், அனேகரைச் சீடராகக் கோடல், சித்திவிளையாடாத் துறவு" என்பன கூறப்பட்டிருத்தலோடு, யாருமறியாது இயல்பாகவே தமக் குள்ளே மறைந்திருந்த ஒன்றனையும் அதன்கட்கண்டு ஆச்சரியப்பட்டார் ஆசிரியர். இச்செய்தியை இவரெடுத்து நுவன்றதுண்டோ எனின்,—உண்டென்க. என்னை? போந்த **திருவருட்செயன் ஞாபகத்தில்—**

"அன்ன நற்பகல் கமலனென் முனிவ
னருந்த மிழ்ப்பனு வலிலெனைக் குறித்துச்
சொன்ன கட்டுரை யுணர்ந்தன னதுவுஞ்
சுரேச நின்செய லேயென நினைந்தேன்."
"இயல்பி னேமறை வாகியென் மாட்டே
யிருந்த தூஉமப் பனுவலிற் கண்டேன்
உயர்வொ டோமனைப் பாடிடு வான்பல்
லொண்மை நூல்குயில் வான்பல சீடர்
இயலொ டார்குவ ராடலி றுறவா
மிவன்க ரத்தொர்க பாலிமுக் கோணக்
கயிலை யிரேகையென் றதுசொன தானீ
கடவு ளாயது மூழ்வழி யன்றோ."

என்றுராகலின்.

# இயற்கை யாராய்ச்சியும் பிறர் நூலைத் தழுவும் முறையும்

(1) கருங்குயிலும், புள்ளிக்குயிலும், செம்மை பொன்மை முதலிய நிறமுறும் அழகிய பறவைகளும், இந்திரகோபம் முதலிய பூச்சிகளுங் கார்காலத்தில் இப்பாம்பன் தீவிலுங் காணப்படுகின்றன. இவற்றுட் பறவைகள் யாண்டேனு மிருந்து ஈண்டு வருகின்றனவோ? என்னும் ஆசங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு இவர் செய்த விசாரணையில் இத் தீவிற்கு வடக்கிலுங் கிழக்கிலுந் தெற்கிலும் பெருங்கடல் இருக்கின்றமையாலும், அடுத்துள்ள தீவுகளும் அதிசிறுமை யவா யிருக்கின்றமையாலும், மேல்புறத்துள்ள ஆறு 2-மைல் அகலமுண்மையாலும், தோணித்துறையென்னும் அக்கரை யில் வசிக்கும் மனிதர்களேனும் ஆற்றில் ஓடம் விடுபவர்களே னும் அத்திறப் பறவைகள் மேற்குத் திசையிலிருந்து வருதலைக் காணுமையாலும் பகற்கால சஞ்சரிப்பையேயுடைய அவைகள் அதிகமும் பறந்து செலற்கு முரியன அல்ல என்பது சித்திக் கின்றமையாலும், சில மாதங்களுள் மனிதர் கிரகிப்பு முதலிய பல காரணங்களால் அவைகள் காணப்படாமே அழிந்தொழி கின்றன வென்று பலரும் பகர்கின்றமையாலும் இயல்புக் கருவிலிருந்து இந்திரகோபம் மஞ்சட்குருவி யென்பன ஆண்டு தோறுந் தோன்றுதல்போல இத்தீவின் கண்ணேயே தோன் றுங் கார்காலப் பிராணிகளென்று மதிப்பவராயினர். தோற் றத்திற்கு வேறு காரணங்களிருப்பினுங் கார்கால பிராணிக ளென்றல் பொருந்தாது போதற் கிடனின்றெனவு நிச்சயித்த னர். (2) காகத்தின் கூட்டிற் குயில் முட்டைகளை யிட்ட போது அவற்றைத் தன் முட்டைகளெனக் காகம் அணைத்துக் கோடலால் வெளிப்படுங் குஞ்சே குயிற்குஞ் சென்னுங் கூற்றை, அக்காகந் தன் குஞ்சுகளோடு அக் குயிற் குஞ்சுகளை யுங் கூட்டிக் கொண்டு வந்து இரையூட்டி வளர்த்தலை யெவருங் கண்டதில்லை யென்பதும், புள்ளிக்குயில் காக்கை போலவுமில்லையென்பதும், காக்கைக் கூட்டிற் குயில் படுத்

திருக்கப் பார்த்தாருமிலரென்பதும், காக்கை முட்டையோடு குயின் முட்டை கண்டாருமில ரென்பதும் மறுக்குமெனுந் துணிபு கொண்டனர். இத்துணிபினையும், (3) வலப்புறம் நோக்கும்போது அதனைச் சார்ந்து நின்றும் இடப்புறம் நோக்கும்போது அதனைச் சார்ந்து நின்றும் பார்வையளித்த லானே இரு கட்டொளையிலும் ஒரு மணியே காகத்திற்கு உண்டாகலின் அஃது "ஏகாக்ஷம்" எனப்படுமென்னுஞ் செய்தி யைக் கண்டறியும் பொருட்டு ஒரு காகத்தைப் பிடித்துப் பார்த்து ஏனைப் பறவைகட்கிருத்தல் போன்ற ஒரெலும்புத் தடையை நடுவட் கொண்ட இரு தொளைகளிலும் இரு விழிகளு முளவாகலின் ஏகாக்ஷம் அன்றென்று கூறினர். கூறிப்போந்த விடயங்கள் பண்டைநாட் பெரியார் கூறல்களி லுங் காணப்படுகின்றனவேயென்பார் கூற்றிற்கு, "அறியா தொலிக்கும் உலக வழக்கினை நம்பி அன்னணங் கூறியிருக்க லாம். அவை, உண்மைக்கு முன்னே நிற்குமாற்றல் பெரு வெனக் கழறல் விடையாய்ப் பொருந்தலாமே" எனுஞ் சமா தானத்தையும் தஞ்சீடர்களுக்கு ஓதினர். மேல், (4) யானை யுண்ட விளாங்கனி என முந்தை நூல்களுள் வருவதற்குப் பொருள் கூறுவாருட் சிலர் பலர், ஒருவகை நோய் யானை யெனப்படும். அதன் வயப்பட்டமையின் அக்கனி உள்ளிடத் தொன்று மில்லாததாமென்று கூறினமை, யானையின் வாயுள்ளே திணிக்கப்பட்ட அக்கனி அந்த யானை கழிக்கும் இலண்டத்துடன் உள்ளொன்று மில்லா உருவாகவே வரு மென்பதை அறியாநிலை நின்றுரைத்தமையாமென்றார்.

"ஒன்றும் விசாரியாமலே ஒருவர் போம்வழியே ஒருவர் போதலென்னும் பொருள் பயக்கத்தக்க கதானுகத நியாய மாகச் செல்வாரோடு வைத்தெண்ணப்படுவோரே மேலே கூறிப்போந்த பொருந்தா வுரையினராகலின் இவ்வுரைக ளுள்ளும், இவ்வுரை போல்வனவற்றைக் கொண்ட பிறவுரை களுள்ளும், ஈசன், தேவர், முனிவர், ஐரோப்பியர், மற்றை யர் செய்தனவாக வரையப்பட்டுள்ள எப்புத்தகங்களுள்ளும்

நல்லன காணப்படின் அவற்றைக் கொள்ளலும் அல்லன காணப்படின் அவற்றைத் தள்ளலும் லீடாலீட நியாய மென்பதிற் பொருந்தும்; அதுவே நியாயமும் அறிவுடைமை யுமாமென்பதை யோர்ந்து கொள்ளும் மஹாதேஜோ மண்ட லத் தாராகிய நீவிர் என்னுடைய நூல்களுள் ஏற்புடைமை கருதி யெடுத்துக்காட்டா யார்ந்துள்ள அளவே என்னால் அங்கீகரிக்கப்பட்டனவன்றி அதிகமில்லை யென்பதையும், சில புத்தக ஆசிரியர் பெயர்கள் நிலைகள் என்னுடைய நூல்களிற் சிறப்பில் வைத்துக் கூறப்பட்டமை, பெரும்பாலும் விடுதலை விருப்பமுடைச் சைவரென்பது பற்றிச் சாற்றப் பட்டமையாமென்பதையும் அறிந்து கோடல்வேண்டு'' மென்றுஞ் சீடர்கட்குப் போதித்தார். இவ்வரம்பினைச் **சிவஞானதீபத்து** முன்னுரையில்—

> ''இந்நூலுள் எடுத்துக்காட்டாய் ஆர்ந்துள்ள செய்யுள்களுள், எம்முடையன வல்லாத மற்றெல்லாம் ஏற்புடைமைகருதிக் காட்டப்பட்டனவாம். அவற்றைக் கொண்டே அந் நூல்களுட் கூறப்பட்டனவெல்லாம் எம்மால் அங்கீகரிக்கப்பட்டன வென்னுந் துணிபு கோடல் கூடாது. என்னை? லீடாலீட நியாயமாக இயைவது கோடலே எமது நடுவுநிலைத் துணிபாகலின்''

என இவர் வரைந்த வசனங்களானு மறியலாம். **திருப்பா வுரை** நூன்முகத்தில்— ''எம் பாடலை, உரையை யிழுக்கத் துட்படுத்த முயன்றாரெல்லாம் சைவராகவே காணப் பட்டார்'' எனவும், ''இதன் காரணம் அழுக்காறெனலே சாலும்'' எனவும், ஆசிரியர் கூறிய பின்னர், ''அவ்வழுக் காற்றுச் சைவர் எம்முடைய நூல்களைப் படித்தன்மட்டுஞ் செய்வாரென்றற்கும் இடனின்று;

> ''கற்றல் கேட்டலுடை யார்பெரியார்''

எனவும்,

''எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

எனவும்,

''நூல்பல கல்''

எனவும்,

''தொன்மையவா மெனுமெவையு நன்றாகா வின்று
தோன்றியநூ லெனுமெவையுந் தீதாகா''

எனவும்,

''பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே''

எனவுமெழுந்த நியாயம் அன்னோர் கொள்கைக்குப் புறம் போந்து நின்று அவரது மூர்க்க நாடகங்கண்டு முறுவலிக்கும்'' என இடித்துரையாடி யுள்ளார்.

''போனகான் முயலே பெரிதெனப் பேசிப்
புலம்புதல் போலமுன் னாளில்
மானமின் றெழுதி வைத்தபுத் தகக்கோ
மான்களே பெரியரென் றுயர்த்தி
ஏனைவல் லவரை யிகழுமிந் நாளி
லேழையே னறைகடொன் னூலில்
தேனென வினிக்கு முடிபென வுனக்கே
தெரியுமெஞ் சிதம்பர சிவமே.'' [திருப்பா- 90. 6]

எனவும் பாடினர். வித்தைகளு ளொன்றாய தருக்க நூலுள்ளுங் கொள்ளு நியாய அளவறிந்தே கோடல் வேண்டும், அல்லவை கொள்ளொணா தென்பதும் இவர் கருத்தாக ஆர்ந்தவாறு, **திருப்பாவுரை**, நூன்முகத்தில் —

'''இப்பரமான்மா அளவையுட் படாதவன்; பிறப் பிலி; தருக்கத்தினுல் இந்நீர்மையனென நிச்சயிக்கப் படாதவன்; சிந்திப்புக்கெட்டாதவன்'.

'அதிவாத தருக்கங்களை விடல்வேண்டும்; ஒரு கக்ஷியிலுஞ் சார்தல் கூடாது.'

'ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச் சோதிக்க வேண்டா'

என இருதிறமறையு மெடுத்துரைத்தல் இந்நூலின்

'முந்தை நாளிற் சாருவாக னுலகாயதன்' என்றற் றொடக் கத்துத் திருப்பாட்டுரையினேரலாம். வித்தைகளு ளொன்றாய தருக்கநூலுள்ளும் உண்மைப் பொருட்டு ஏற்புடைமையில் வருதலே கோடற்பாற்றென்பதைத் தருக்கத்தினுல் இந் நீர்மையனென நிச்சயிக்கப்படாதவன் என்னும் மறைமொழி காட்டிய படியுமோர்க. இயவுளுடைத் திருவாக்கின் முன்னே திருவுளப் பாட்டின் முன்னே தருக்க நூலிற்கொரு செயலு மின்றென்பதே ஈண்டெமது துணிபு' ''

என இவர் வரைந்தது கொண்டே உணரப்படும். இவற்ருல் உயரிய எத்துணை நியாய நிலைநின்று அறிவுறுத்தும் ஆசிரியரா யுள்ளார் இவரென்பதையு மறிந்து கொள்ளலாம். அழுக்காறு பாபப்பிரவாக மாதலின் அதிலமிழ்ந்தார் கற்றல் கேட்டல் களில் தலைப்பட்டாரே யாயினும், வேறு சற்கருமங்க ளுடை யரே யாயினும், ஆன்மலாப முத்திக்கரை யடையாது அவ் வழுக்காறனுபவிக்கப் பிறவிப் பெருங்கடல் படிபவரேயாவ ரென்றல் உறுதியென்றும் இவ்வாசிரியர் போதித்த நீர்மை பலர்செவி புக்கதே. பதிபுண்ணியம் பசுபுண்ணியமென்பவற் றுள் எதுவும் பிறர்கண்டு மெச்சுமாறு செய்யப்படுவது இடம் பத்திற்சேரு மாகலிற் பிரகடனமின்றி இரகசியம் பேணத்தக்க தென்பதைப் பல்லிடத்தும் பல்காலும் போதித்தார்.

## திருவனந்தபுரத்தில் யாப்பிலக்கணப் பயிற்சி

திருவனந்தபுரத்துத் திருவாளர் ந. சுப்பிரமணியபிள்ளையின் வேண்டுகோளை ஆசிரியர் அங்கீகரித்து விஜய (கி. பி. 1893) வருஷம் அத்திருவனந்தபுரத்தை யடைந்தார். ஆங்கொரு மேல் வீட்டிலே தனித்திருந்து 22-நாள் யாப்பிலக்கணத்தை நன்கு படித்துணர்ந்த பின், திருவலங்கற் றிரட்டின் இரண்டாங் கண்டமென இஃதாகட்டு மென்றெண்ணு மாற்றுனே **பல்சந்தப் பரிமளத்தைப்** பாடினுர். இது, யாப்பிலக்கண இலக்கியங்களிற் காணப்படுகின்ற சந்தேகமெல்லாம் நிவர்த்திக்கும் நிமித்தமும், சந்தபேதங்களையும் எதுகை மோனை முதலிய நயம்பிழையாது சித்திரகவிகள் நடைபெறுதலையு முணர்த்து நிமித்தமும், செவ்வேள் கிருபையே உய்தி பெறுவார்க்கெல்லா முயிர்த்துணை யென்பதை யுபதேசிக்கு நிமித்தமுமாகப் பாடப்பட்ட பெருநூலென்னலாம். இன்றுகாறும் இத்திறநூலொன்று வெளிப்பட்டதின்றென்வு முரைக்கலாம். இதுபற்றிக் **காசியாத்திரை**—

"யாப்பி னிலக்கணமும் யாத்த விலக்கியமும்
யாப்பொலிபல் சித்திரமு நச்சியல்போய்—மூப்போ
தலங்கற் றிரட்டினிரண் டாங்கண்டம் பாருன்
விலங்கைத் தரித்து விடும்."

என்றறிவுறுக்கின்றது. கூறிப்போந்த யாப்பிலக்கணம் படித்துணர்தற்கு முன் வெண்பாவுங் கட்டளைக் கலித்துறையும் பாட இவர் விதி கற்றிருந்தாரென்பதும் இங்ஙன மறியக் கிடக்கின்றதால், பரிமளம் பாடியருளிய பின்னர் ஆங்குள்ள திருவனந்தசயனத்திற் புரட்டாதி மாசத்துப் பூர்வபக்ஷ ஏகாதசியிற் பதுமநாப மூர்த்தியைக் குமாரபகவானின் மாதுலனுகத் தரிசித்து மகிழ்ந்து,

"சீராரு நல்வி சயவாண்டு கன் னியந் திங்கண்மதி
ஏராரு முற்பக்க வேகா தசியி லெழில்வளஞ்சேர்

ஊரா மனந்த சயனத்தி லென்னிறை யோன்கடப்பந்
தாரானம் மானது பள்ளிகண் டேனற் றருக்குறவே."

என்னும் இக் கட்டளைக் கலித்துறையைப் பாடினர்.

## கன்னியாகுமரி, சுசீந்திரம், செந்தில் முதலிய தலங்களை வணங்கல்

பின்னர் விஜய வருஷம் புரட்டாசி மாசத்துப் பூரணை யிலே மேற்படி சுப்பிரமணிய பிள்ளையோடு திருக்கன்னியா குமரி போந்து ஆங்குத் திருக்கோயில் கொண்டுள்ள சத்தி யைச் சத்திவேற் பெருமானென்றே தரிசித்து வந்தித்தார். அஞ்ஞான்று—

"அலைமேவு பவ்வ வளநீடு மங்கன்னி யாகுமரி
நிலைமேவு சத்தி தனையென்னை யாளொரு நேயமுள்ள
இலைவேல னென்று விசயதெய் வக்கன்னி யென்னுமதிக்
கலைமேவு பூரணை நான்கண் டிறைஞ்சிய காலமன்றே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினர். பின்னர் அந்தப் புரட்டாசி மாசப் பூரணையை அடுத்து வருந்தினத்தில் மேற்படி பிள்ளையோடு சுசீந்திரத்தையடைந்து பரமதரிசனஞ் செய்தார். அச்செவ்வி—

"பத்தர் குழாஞ்சூழ் சுசீந்திரம் வாழுமை பங்கனைமா
சித்தர் குழாஞ்சூழ் குமர னெனக்கரு டேவெனவென்
புத்தி விடாது நினைந்து கனிந்து புகழவுற்ற
இத்தின நற்றின மன்ருே வெனக்கு ளிருப்பவனே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினர். பின்னே (கி. பி. 1893) திருச்செந்தூரை யடைந்து குமாரபிரானைத் தரிசித்தார். அச்செவ்வி—

"தண்டடச் சிந்துமுத் தங்கொழிக் கின்ற தகைமையுடன்
அண்டருக் கின்புள்ள தாயவிர் செந்திநல் லாலயத்துள்
தொண்டரைக் கொள்ள விளங்குமெம் மான்குகன்
றாவடியைக்
கண்டவர்க் கானந்தம் பொங்குமென் கண்களுங்
கண்டனவே."

"தேவர் சிகாமணி சித்தர் சிகாமணி தெள்ளறிவுத்
தூவர் சிகாமணி யோகர் சிகாமணி தோமில்கவி
நாவர் சிகாமணி நாதர் சிகாமணி நண்ணுமென்னுள்
மேவு சிகாமணி செந்தியில் வாழ்வடி வேலவனே."

என்னுங் கட்டளைக் கலித்துறைகளைப் பாடினார். பின்பு (கி. பி. 1893) திருநெல்லைத் தளியை யடைந்து தெய்வ தரிசனஞ் செய்தார். அஞ்ஞான்று—

"எல்லையி லாவொரு சோதி சரவணத் தெம்பெருமான்
நல்லையி லாரும் வணங்கி னருள்புரி நம்பனமர்
நெல்லையி லார்தளி வீற்ற வருங்கொலு நேர்த்தியினைத்
தொல்லையி லாதடி யேன்கண்ட நன்னலந் தொன்னலமே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினார். பின்னே (கி. பி. 1893) திருவிச்சாபுரம் நான்மாடக் கூடலென்னும் மதுரையை யடைந்து தெய்வ தரிசனஞ் செய்தார். அஞ்ஞான்று—

"பாண்டியன் மாணிக்க வேத்திரப் பேரடி பட்டவனும்
நீண்ட வயிற்சிவ னுமெம் பிரானு நிலவுதல்கண்
டாண்டையர் நாகரு மையரு மேத்துவிச் சாபுரத்தைக்
காண்டகை பெற்றவென் கண்களை நெஞ்சங் கருதுமன்றே.

வான்மாடக் கூடல் களினுஞ் சிறந்து வயங்குமெழில்
நான்மாடக் கூட னகர்தன்னி லெங்கோ னறுங்கடம்பு
தான்காணு மார்பனை யங்கயற் கண்ணியைச் சங்கரனை
நான்காணு மாறிங்கண் வாய்த்தது முன்செய்த நற்றவமே."

என்னுங் கட்டளைக் கலித்துறைகளைப் பாடினுர். பின்றைத் (கி. பி. 1893) தமது வாசநகராய பாம்பனை யடைந்து திருச் சேதுமத்தி யென்னும் திருவிராமேச்சுரத்தை யெய்தி ஆங்குத் திருக்கோவில் கொண்டு விளங்கும் இராமநாதனையும் பருவத வர்த்தனியையும் என்னுண்டவனுகிய சுப்பிரமணியமென்றே கருதி வணங்கலுற்றனர். அப்போது—

"கார்சேர் கடனனி சூழ்சேது மத்தியிற் காகுத்தனுர்
ஏர்சேர் விபூதி யணிந்துபூ சித்திட்ட வீச்சுரனைச்
சீர்சேர் சதங்கைத் திருத்தாள னென்றனைத் தேடிவரு
நார்சேர் குகேச னெனவெண்ணி யன்பொடு நாடுவலே.

எல்லாங் குமாரப் பெருமாளென் றேர்ந்திடு மென்னகத்தே
நல்லான் பருதிக் குலராமன் பூசித்த நாதனையும்
அல்லாஞ் சுரியற் பருவத வர்த்தனி யம்மையையும்
வல்லான் சிவசண் முகன்றனென் றெண்ணி வணங்குவலே.

தராமேற் றிகழ்துறக் கத்தவர் பேற்றினைச் சாற்றிடினும்
அராமேற் புனையிறை யோனும் பனிமலை யான்மகளும்
மராமேற் புனையயி லீசனு நன்கு வதிபதியாம்
இராமேச் சுரமுதித் தோர்தவப் பேறிங் கியம்பரிதே."

என்னுங் கட்டளைக் கலித்துறைகளைப் பாடினுர். அஞ்ஞான்றே திருத்தேவை மேலைக்கோபுர வாயிலை யடைந்து குகேசனைத் தரிசித்துத் தொழுது நின்று—

"அண்டரு மோனரு மெண்டிசை நாதரு மம்புவிவாழ்
தொண்டரு நாளு நினைந்து பணிந்து துதிக்கவுள்ள
வண்டறு தேவை யணிமேலைக் கோபுர வாயினிலை
கொண்டகு கேசன் பதாம்புய மென்றனைக்
கொள்பொருளே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினுர். பின்னர்த் தமது வாசநகரை யடைந்து வைகினுர்.

## சிவாலயத்தில் வணங்குமுறை தெரிவிக்கப்படல்

திருத்தேவை யெனும் இராமேச்சுர சிவாலய வழிபாடு செய் காலத்தில் உடையும் உடம்பும் அழுக்காதல் கூடா தெனுங் கருத்தால் நின்றபடியே கைகூப்பித் தொழுதுவிட்டு வருஉம் இவ்வாசிரியரைக் கனவிற் சந்தித்தவொருவர், "நீ சிவாலய வழிபாட்டிற் சாஷ்டாங்க நமற்காரஞ் செய்ய வேண்டும்" என்னுங் கட்டளையிட்டு மறைந்தனர். இக் கட்டளை பெற்ற ஆசிரியர், "ஆண்டவனே! இக்காரியத்தையு மறிவிக்கத் திருவுளத் தெண்ணிய பரிவை, யான் இனி எஞ் ஞான்றும் மறவாது நடந்துகொள்ளக் கடவேன்" என்று கூறி ஞர். அவ்வாறே எச்சிவாலயத்தும் வழிபாடுஞற்றி வருபவ ராயினர்.

## கார்த்திகைச் சுவாமிகளோடு சந்திப்பு

இவர் குடும்பத்திலிருக்கு ஞான்று திருவுத்தரகோச மங்கையிற் கார்த்திகைச் சுவாமிகளென ஒரு குமாரபக்த சிரோமணியிருக்கிறு ரென்பதும், அவர் ஜனனபுரி இராமநாத புரமே யென்பதுங் கேள்விப்பட்டு அவ்வுத்தர கோசமங்கை போந்து அவரிருக்கை யாது யென விசாரித்தனர். அவர் மதுரை போந்தன ரென்பது கேட்டலும் வியசனித்து ஆலயத் துட் புக்குச் சிவபெருமானையும் குமார பிரானையுந் தரிசித்து விட்டுப் பாம்பனை யடைந்தார். சின்னுட் சென்று நாகப் பட்டின மடைந்து சமுத்திர தீரத்திலே ஒரு மாலைப்போதிலே இவர் உலாவிக்கொண்டு நிற்கும்போது, ஒரு காஷாயதாரி வடக்கிருந்து வரல் கண்ணுற்று, இவர் கார்த்திகைச் சுவாமி களாயிராரா என்று சிந்தித்து நின்றவுடன், அவர், இவர் முன்வந்து "நீங்கள் யார்" என்று வினவினர். இவர் "பாம்பன் குமரகுருதாச னென்பர், நீங்கள் யார்?" என் றனர். அவர், "திருவுத்தரகோசமங்கைக் கார்த்திகைச்

சுவாமி யென்ப'' ரென்றனர். இருவரும் ஒருவரை யொருவர் கட்டித் தழுவிக்கொண்டு மகிழ்ந்த பின்பு இவர், ''நினைத்த படி சித்தித்த'' தென்றனர். அவர், ''யானுந் தங்களைத் தேடிப் பாம்பன்போய் அவரிங்கில்லை மேற்கே போயிருக்கிறு ரென்பது கேட்டு வியசனித்து வந்தவனே'' யென்றனர். பின்றை, இருவரும் ஓரிடத்தில் வைகி மறுநாள் புகைரத மேறினுர்கள். அது மதுரையை யடைவதற்குள் இவர், ''தாங்கள் முருகவேள் திருவடியை நம்பினதற்குக் காரணம் யாது'' என வினவினுர். அவர், ''துறவிகளுக்கு அன்னம் படைத்தலை இயன்றவளவு புரிந்துகொண் டிருந்தேன். ஒரு நாளிரவு நெடுநேரமானபின் ஒருவர் என் வீட்டுக் கதவைத் தட்டிநின்று 'என் பசியைத் தீர்' என்ற உடன் கதவைத் திறந்துவிட்டு மனைவியை யெழுப்பினேன். அவளெழும் பாமையால் தண்ணீர் விட்டுள்ள அன்னத்தைப் பிழிந் தெடுத்து அதன்கண் எஞ்சியிருந்த கறிகளையுஞ் சேர்த்து யானே பிசைந்து கொடுவந்து அவரை யுள்ளே வருகவென அழைத்தேன். இங்ஙனேயே நிற்கும் என்கையிலே கொடு வந்ததை இடு என்ற அவருரையின்படி யானும் அவர்கையி லிட்டேன். முழுதும் உட்கொண்டவராய் அவர் கைகழுவிக் கொண்டவுடன் உணவு நன்ருயிருந்ததென்று சொல்லிவிட்டு மறைந்தனர். யான் தீபத்தைப் பிடித்துக்கொண்டு அவர் வந்த அடிச்சுவடு போன அடிச்சுவடொன்றுங் காணுமையால் அதிசயித்து, யாவரென அறிய கில்லேனே! அவரையினிக் காண்பேனே? என ஏங்கி யேங்கிப் பெரிதும் வருந்தலுற் றேன். வைகறை நேரத்திலே ஒருவர் என்முன் தோன்றி, 'நினக்குப் பாத்தியமான சொத்துக்களை உத்தரகோசமங் கைச் சிவாலயத்துக்குப் பாத்தியப்படுத்திவிட்டு ஆங்குப் பழுதுபட்டுள்ள குமாராலயத்தைப் புதுக்குந் திருப்பணியை மேற்கொள்வாயாக. நீ இட்ட வுணவுண்டவன் அக் குமாரனே: அவன் இவனே'யெனக் கூறி மறைந்தருளின ராகலின், அவன் கட்டளையின்படி நடந்துகொண்ட யான் அவன் திருவடியை நம்பி நிற்பவனுனேன்'' என்று கூறினர்.

இவர் அதுகேட்டு விம்மிதமுடையராயினர். இச்செய்தியை இவர் நூற்கட் குறிப்பிட்டதுண்டா எனின், உண்டென்க. என்னே? ஸ்ரீமத்-குமாரசுவாமியத்துப் பெருவேண்டுகோளில்—

"திங்கட்சடை யவன்மங்களை திகழுஞ்சிவ கோச
மங்கைக்கும ரேசற்றெழு தான்வைகிட னெய்தி
அங்கைக்கிடு வால்வல்சிய யின்றேதிம றைந்த
மங்குற்பகை மணியேயெனை மறவேலெனை மறவேல்"

என்றாராகலின். திருவுத்தரகோசமங்கையில் நிகழொரு கார்த்திகை ஆராதனையில் அந்தச் சுவாமிகள் அம்முருகவேள் திருவடிப்பே றடைந்தன ரெனுஞ் செய்தி வெளிப்படுவதா யிற்றென்று ஆசிரியர் தமது பிரசங்கத்துங் கூறினர்.

## 'திருத்தொடையல்' பாடியமை

சிறு நூற்றிரட்டிலுள்ள திருத்தொடைய லென்னுமொரு நூலை ஆசிரியர் நந்தன (கி.பி. 1892) வருஷத்திலே கார்த்திகை மாதத்திலே பாடியருளினர்.

## திருவலங்கற்றிரட்டு 1- பாடியமை

பாம்பன் சீடர்களுள் L. D. முத்துக்கருப்ப பிள்ளை, கல்வி யறிவுடையராகவும், உத்தியோகத்திலிருப்பவராயு மிருந் தார். அவர் குமரகுருதாச சுவாமிகள் பாடலுள் "நவரத்தின மீக்கூற்று" முதலிய குறிப்புடைச் சந்தப்பாட்டுக்களைப் பார்த்துவிட்டு, இவ்விதமாக இறைவனைப் பாடித்துதிப்பதா யின் அவை, எளிதாக யாவரும் பாடவும் பொருளறியவும் இயையாதனவாமே; திருஞான சம்பந்தர் முதலியோர் பாடி யருளிய பாட்டுக்களை இக்காலத்தே பலரும் எளிதாகவே பாடு கின்றனர். அவ்விதமாக முருகநாதன் மீது சுவாமிகளும்

பாடுவதாயின் அவை, என்போல்வார் பலருக்கும் பயன்படு வனவாமே என்றுரைத்ததை அங்கீகரித்த வாறுகவே ஆசிரியர், **திருவலங்கற்றிரட்டு முதற்கண்டத்தைப்** பாடியருளி னர். ''பயின்றுவரும் யோகத்திலே நீ தவறி விட்டனை யென்று என் கடவுளாகிய நீ இரண்டறிகுறிகளை எனக்குரைத் தருளினை. அவற்றுள் ஒன்றனை மறந்து யான் மயங்கிய துண்டு. அதனைப் பெயர்த்தும் எனக்கு நீ யறிவித்தருளல் கண்டிலேன். இதனை யாவர் பாலோதிக் கொள்வேன்'' என ஆசிரியர் நுவன்று கொண்டமையும் இக்கண்டத்தில் நின்ற நிலை விண்ணப்பத்திற் ''செய்யும் யோகந் தவறினுய்'' என் றற்றொடக்கத்துப் பாட்டிற் காணப்படுகின்றது. இக்கண் டத்துக் **காப்பு தௌத்திய மென்பன** நந்தன (கி. பி. 1892) வரு ஷம் மார்க ழிமாசம் 24-ஆந் தினமாகிய சுக்கிரவாரந் தொடங்கப்பட்டனவாகவுள ''அடிமை'' என்னும் பதிகம் விஜய (கி. பி. 1893) வருஷம் சித்திரை மாசம் முதற்றின மாகிய புதவாரம் பாடப்பட்டதாகவுளது. திருக்குன்றக் குடிப் பதிகம் மன்மத (கி. பி. 1895) வருஷம் ஆடி மாசம் 3-ஆந் தினம் புதவாரம் பாடப்பட்டதாகவுளது. இப்பதிகம், மௌன நிலையிலிருந்தே அக்ஷேத்திரத்திலே வரைந்து ஒரு சைவரிடங் கொடுத்துப் பகவான் திருமுன் படிக்கும்படி செய்ததாகும்.

## பிரப்பன்வலசையில் துவமியற்றித் தலைவன்பா லுபதேசம்பெறல்

இவ்விரண்டு திருப்பதிகங்கட்கும் இடைக் காலமாய் விஜய வருஷத்துப் பங்குனி மாசமாய் நிகழ் நாட்களிலேயே பிரப்பன்வலசை மயானத்தில் ஒரு சனிவாரம் தொடக்கமாக (35) முப்பத்தைந்து நாள் நிஷ்டையிலிருந்ததும் சொல்லத் தக்கன. இக்காலம் கி. பி. 1894-ஆம் ஆண்டாம்.

அந்த மசான வெளியில் ஒரு கொட்டகை நிருமிக்கப் பட்டு அதன் நடுவே ஒரு மனிதனிருக்கத்தக்க சதுரக் குழி யொன்று செவ்வனே செய்யப்படுவதாயிற்று. ஒரு பெரிய முள்வேலி நாற்புறமு நாட்டப்பட்டு, மேல்புறத்திலே நிலைக் காலுங் கதவு மிடப்பட்டன. பாம்பன் மு. சின்னசுவாமிப் பிள்ளை, பிரப்பை சொ. நமச்சிவாயம் பிள்ளை, கிராம முன்சீபு சின்னசுவாமிப் பிள்ளை, உடையநாயகம் பிள்ளை முதலினோர் அவ்வெல்லை போந்து குழுமியிருந்தார்கள். அஞ்ஞான்று ஆசிரியர் கடவுளை மறவாதிருங்கள் என்று நல்வார்த்தை கூறி விட்டு அக்கொட்டகையுட் பிரவேசித்துக் குழியுள் இறங்கி வடக்கு முகமாயமர்ந்து 'குமரகுரு' என்று கூறிச் சிரமேற் சுரங்கூப்பித் தொழுதிருந்தார். மனத்தை யொருவகைப் படுத்தித் தியான யோகத்தை முயன்றார். சில தினங்காறும் பிசைந்து வைக்கப்பட்ட ஆகாரத்தை ஒரு துவாரத்தின் வழி யாக வெடுத்துச் சிறுவரை யுட்கொண்டு தம் காரியத்திலே கருத்தா யிருந்தார். ஒரு பகலில் ஒரு பாம்பு இவருக்கெதிரே யிவரிருக்கை கடந்துஞ் சென்றது. இந்தத் தபத்துக்குக் கெடுதி விளையுமாறு ஆணும் பெண்ணுமான 6, 7 - பேய்கள் முதனாள் இரவு தொடங்கி ஐந்திரவு வரையிலும் இவரைச் சூழ்ந்து கொண்டன. சூழினுந் தீண்டாமலே யிருந்த அவைகள் பின்பு வராமலே சென்றுவிட்டன. ஒரு பெரிய ஆவிபோன்ற ஒன்று வந்து இவரைத் தன்னுளடக்கி, வருதி என்று மேலெழும்படி தூக்கியது. எட்டி மரத்தினாற் செய் துள்ள யோக தண்டத்தால் இவர் அடித்தனர். அத்தண்டம் வெறு வெளியில் வீசப்படுவது போல அதன்மீது படாது போதலைக் கண்டு திருவாறெழுத்தை யுச்சரித்தனர். உடனே அஃதிவரைவிட்டு தெற்குநோக்கி ஒரு மயிலுக் கப்பாற்சென்று மறைவதாயிற்று. பின்றை, பேய்த் தலைமை வகித்த அஃதொரு முனியென அஞ்சா நெஞ்சு படைத்த இம் முனிவரறிந்து கொண்டனர். இச்செய்கைகளை ஆசிரியருங் கூறினரோ எனின்,—ஆமென்க. என்னை? ஸ்ரீமத் - குமார சுவாமியத்தில் இடையருது நிற்கவிழைதலில்—

" நிலவ ளந்தரும் பிரப்பை யீமமா
நிலனி ருந்துநா னினைநி னைத்தபோ
தலகை யைந்துநா ளெனைவ ளைந்துபே
மதுவி ளைத்தகா லவைது ரத்திநெய்
வலய வாவிபோ லணுகி யென்னைமேல்
வருதி யென்றெழல் புரிவி யந்தரம்
விலக வேசெய்தை யிஙன நீயெனை
விடுவ தென்கொல்சூ ரடும டங்கலே."

என்முராகலின். திருவலங்கற்றிரட்டிற் பிரப்பன்வலசை யெனும் பதிகத்திலும் இத்தப விவரங் கூறப்பட்டமை காண லாம். ஆறுவது நாள் மனமடங்கித் தேவனைத் தியானித் திருந்தார். "நீ எழுந்துவிடு" என்னுஞ் சொல் தோன்றுவ தாயிற்று. "இக்காலத்து மனிதருள் ஞானசிரியனுக ஒரு வனைப்பெற என் மனம் இசையாது. சொல்லவேண்டிய துண் டேல் அதனை என்னுண்டவனுகிய நீயே சொல்லியருளின் எழுந்துவிடுவேன்" என்று விண்ணப்பித்திருந்தனர். ஏழா வது நாளிரவில் ஜடாமகுடமுடைய இரண்டு முனிவர்களோடு ஓரிளைஞர் இவர் முன்னே தோன்றினர். அவர், இவரை நோக்காது நின்றுகொண்டிருக்கும்போது அவ்விருவரும், "கல்வியறிவில் உம்முடைய திறம் இவருக்குமுண்டு. இவர் உம்மைப் பார்க்கவே வந்தார்" என்று கூறினர். உடனே அவ்விளைஞர் இவர் முகமாகத் திரும்பி ஓரிரகசியமான வார்த் தையை வெளியிட்டு மேற்குத் திசை நோக்கிச் செல்லத் தொடங்கினர். இரு முனிவர்களும் பின்றொடர்ந்தார்கள். ஒல்லையில் மூவரும் மறைந்து விட்டனர். அத்திசை நோக்கி ஆசிரியர் கரங்குவித்து வணங்கி அவ்வார்த்தைதான் உபதேச மென்று நன்கு மதித்து அது கருதியே யோகத்திருப்பவ ராயினர். சொல்லவேண்டியதைச் சொல்லியருளின் எழுந்து விடுவேனென விண்ணப்பித்த இவர், எழுந்துபோய் வெளியி லிருக்கக் கூடிய யான் இங்கேயே யிருக்கலாமே என்று கூறி விட்டு அங்கேயே அந்த யோக நிட்டையிலிருந்தார். (35) முப்பத்தைந்தாந் தினத்திரவு 24 - கடிகைக்கு மேலே இவர்

தலைக்கு மேலாய வெளியில் ஒரு பெருந்தொனி யுண்டாயிற்று. அப்பொழுது விண்ணும் மண்ணும் நடுக்கங் கொள்வது இவர்க்குப் புலப்படுவதாயிற்று. அவ்வெளியில் ஒரொளி பரவுதலை இவர் காண்டலும் "ஏகாதச ருத்திரர் வருகின் றனர், நீ எழுந்துவிட வேண்டும்" என்னுஞ் சத்தந் தோன் றிற்று. அவர், "எவர் கூறினும் யான் எழேன், செவ்வேள் கட்டளை கிடைத்தக்கால் எழுவேன்" என்று தெரிவித்துக் கொண்ட பின்பு, அவ்வேள் கட்டளை, "அப்படியே செய்க" என இவருக்குக் கிடைப்பதாயிற்று. உடனே, உச்சிமேற் கைகூப்பி யெழீஇ அவ்விடத்தை மும்முறை வலம் வந்து தண்டாகாரமான நமற்காரஞ் செய்தெழுந்து "இவ்விடமான உன்னைவிட்டுச் செல்ல எனக்கு மனமில்லையாயினும் இறைவன் கட்டளையின்படி உன்னைவிட்டுச் செல்வோனுயினேன்" எனக் கூறிவிட்டு வேலிவாயிலைக் கடந்து வெளிப்போந்தார். சந் திரன் மேற்றிசை விண்ணிலே நல்ல விளக்கமா யிருப்பதையுங் கண்டுகொண்டு சில தோட்டங்களின் எல்லைகளையுங் கடந்து ஊர்த்தெருவை யடைந்தார். உடனே அவ்வூரவர் பலருங் கூடினுர்கள். விடிந்த பிறகு "சென்ற இரவோடு நாள் முப்பத்தைந்து, இரவு வெள்ளிக் கிழமையைச் சேர்ந்ததே" என்று அவர்கள் கூறினுர்கள். இச்செய்தியை ஆசிரியர் குறிப் பாக வெடுத்துக் கூறினரோ எனின், கூறினுரென்க. என்னை? மேலை **இடையருது நிற்க விழைதலில்—**

"அறுதி னத்திலே மனம டங்கிமே
லணுகு நாளிரு முனிவ ரோடிகல்
உறுக ணேதமில் வடிவ ஞகிவந்
துரைத்த வுன்பறை பிடித்த வென்றனை
இறுதி வைகன்முப் பதுட னைந்திலே
யெழவ யர்ந்தவொர் களைக ணிங்கெனைத்
தறுக ணுளற்போர் கழிப்ப தென்புகழ்த்
தமிழ னீசனே யவிர்கு கேசனே."

என்ருராகலின். ஒரு வாரங்காறும் பிரப்பையைச் சூழ்ந் துள்ள பல கிராமங்களிலுமிருந்து ஜனங்கள் சுவாமிகளைத்

தரிசித்துத் திருநீறு பெறவேண்டுமென வந்து அந்நீறுபெற்று இருப்பிட மடைந்தார்கள். பாம்பன் நகரிலிருந்து மு. சின்னசாமிப் பிள்ளை, L. D. முத்துக்கருப்ப பிள்ளை முதலினோர் வந்தார்கள். அவர்கள், சுவாமிகள் வாய்திறந்து பேச வேண்டு மென்று விண்ணப்பித்தார்கள். இவர், இந்நிலை சுகமாயிருக்கின்றதே என்பதாக எழுதிக் காட்டினர். அவர்கள் எங்கள் திருப்தியின் பொருட்டும் தங்கள் போதகத் தின் பொருட்டும் திருவாய் திறப்பது அவசியம் என்றார்கள். இவர் அங்ஙனமாவதேல் பெரியபுராணத்தில் நீயிர் கயிறு சார்த்தித் திருஞானசம்பந்தர் புராணம் வரப்பெறல் வேண்டும் என வரைந்தார். அவர்களும் அவ்வாறே புரிந்து அதுகண்டு காட்டியபின்றை இவர் பேச முயன்று மூன்றாந் தினஞ் செவ்வையான வாக்குத் தோன்றுதலை யினிதுணர்ந் தார். அக்காலத்தில்—

''எத்தனை யோதலஞ் சுற்றிவந் தேன்மன மெட்டுணையும்
அத்தன் குமாரன் முருகனை நாட வடங்கவில்லை
பத்தர்கள் வாழ்பிரப் பன்வல சைச்செம் பதிதனிலே
சத்திய மாகக்கை கூடின தாலினித் தாழ்விலையே.''

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடியருளினர். இது, திருத்தலதரிசன காலங்களிற் பாடியருளிய கட்டளைக் கலித் துறைகளு ளொன்றாயுளது.

## பாம்பன் செல்லல்

பின்னர் அன்னோர், தாங்கள் முன்போல வஸ்திர தாரணஞ்செய்து கொண்டு பாம்பன் பதிக்கு எழுந்தருளல் வேண்டுமென்று வேண்டுதல் செய்தார்கள். சுவாமிகள், ''என்முன்னே தோன்றி யெனக்குச் சொல்லத் தக்கதைச் சொல்லி யருளிய பரமாசாரியனுடைய சிரசோ முண்டிதமா யிருந்தது. அரையோ கௌபீனமே கொண்டிருந்த தாகலின்

யானுங் கௌபீனத் தோடுள்ளேன்" என்று கூறினர். "அங்ஙனமாயின் வெள்ளை வஸ்திரமொன்று மேனிமேலே போட்டுக் கொள்ளப் பெரிதும் வேண்டுகின்றோம்'' என்னும் அன்னோர் விண்ணப்பத்தை அங்கீகரித்து ஆசிரியர், ஒரு வெள்ளை வஸ்திரத்தைத் தமது மேலே போட்டுக்கொண்டு அவர்களோடு மரக்கலமேறிப் பாம்பனை யடைந்தார். பலருங்கண்டு திருநீறுபெற்றுத் திமிர்ந்து கொண்டு குதூகல மடைந்தார்கள். மேலும், ஏறக்குறையப் பதினைந்து மாதங் கள் பாடலுமின்றி அதிக வார்த்தை ஆடலுமின்றி ஆசிரிய ரிருந்தார்.

## மீண்டுந் தலயாத்திரை செய்தல்

மேலே கூறிப்போந்த மன்மத வருஷம் ஆடிமாசம் திருக் குன்றக்குடி போந்து குமரவேளைத் தரிசித்துத் துதித்துவிட்டுத் திருப்புத்தூரை யடைந்து தெய்வ தரிசனஞ் செய்தார். அஞ்ஞான்று—

"பொன்னு மருஞ்செல்வி நீங்கா திலங்கு பொழில்வளஞ்சால்
நன்னு டெனுந்திருப் புத்தூரின் மேவிய நந்திதன்னை
என்னு தரம்படு செவ்வே ளெனத்தரி சித்திறைஞ்சி
இன்னு வுரங்கடிந் தேன்மனந் தான்குளிர்ந் தேனன்பரே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினர். பின்னர்த் திருக்கானப்பேரூரை யடைந்து பரமதரிசனஞ் செய்தார். அஞ்ஞான்று—

"நீரகஞ் சார்நெடு நேமியிற் சீர்மை நிரம்புகின்ற
பேரகஞ் சார்திருக் கானநற் பேரூர்ப் பெரியவனை
யேரகஞ் சார்திருச் சேயவன் யாண்டு மிருப்பவனென்
றோரகங் கொண்டுவந் திப்பவர்க் கேம னுலகில்லையே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினுர். இங்கே சொற்ற மூன்று தலங்கள் வரையிலும் இவருக்குத் துணையாய்ப் போந்தவர் பாப்பன் சே. காளிமுத்துப் பிள்ளை யெனும் பெயரிய அன்பரே யாவர். பின்பு, தூற்றுக்குடி போந்து திருவனந்தபுரத்துத் திருவாளர் ந. சுப்பிரமணிய பிள்ளை யில்லத்தில் வைகியிருந்து விட்டுத் திருநெல்வேலியிலுள்ள சிக்கநரசையன் கிராமத்திலே தங்கித் தாமிரபருணி நதி யிடைத் திருவுரு மாமலையில் திருக்கோயில் கொண்டுள்ள குமார மூர்த்தியைத் தரிசித்தார். அஞ்ஞான்று—

"தூமவி யன்புடை யார்நன் னடையைத் தொடரடியேன்
மாமவி நெல்லை நதியிற் றிருவுரு மாமலைமேல்
பாமலி நாவயின் மன்னெனு மெந்தையைப் பார்த்ததினம்
பேமலி மன்மத வாடியிற் பக்கப் பிரதமையே,"

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினுர். பின்பு, "பூமகளகமே" என்றற் றொடக்கத்துத் திருவுரு மலைப் பதிகமும் பாடினுர். ஆடி மீ 28உ திருநெல்வேலிச் சிவாலயத்திலுள்ள சண்முகமூர்த்தி திருக்கோவில் பூதிமங்கியிருத் தலைக் கண்ணுற்று உளம் வருந்துநராய் எனதுள்ளத்தைப் பூர்த்திசெய் யென்னுங் கருத்தானே "சீருடை யாரியனே" என்றற் றொடக்கத்துத் திருப்பதிகம் பாடியருளினுர். அக் கோவிலும் அடுத்த ஆண்டிற் செழுமை பூத்து விளங்குவதைப் பின்னே கண்ணுற்று உவகை பூத்தாரிவர். அந்நரசையன் கிராமத்திலிருந்துகொண்டே—

"கார்முகி ருன்பொழியு மிந்தக் காசினி மீதெனெதிர்
நார்முனி யென்னவந்தே யொரு நாட்டத்தில் வைத்ததுபோல்
ஆர்மதி யுந்தருவோ ருனே யன்றி யெவருளரே
சீர்பெற வாட்படுவார்க் கருள் சிந்துபு ரத்தானே."

என்னுஞ் செய்யுளை முதற்கட் கொண்டுள்ள திருச்சிந்துபுரப் பதிகத்தை ஆவணிமீ 9உ பாடியருளினர். சிந்துபுரம்—திருச்செந்தூர். அந் நரசையன் கிராமத்திலே இவர் தங்கியிருந்த

வீட்டிற் குடையராய நயினர்ப் பிள்ளையைப் பற்றியிருக்கும் இருமல் தீராதென்பதை யறிந்துகொண்டு பாம்பனுக்குத் திரும்பும்போது அப்பிள்ளையின் மைத்துனராய சுடலை முத்துப் பிள்ளையை நோக்கிப் 'பிள்ளைக்குற்ற நோய் தீராது, பணச் செலவு செய்யவேண்டாம், 7, 8-மாசங்களுக்கு அதிகமில்லை' என்பன வுரைத்த இவர், பின்றை அந்நயினர்ப் பிள்ளை அவ்வாறே காலகதி யடைந்தா ரென்பதையு மறிந்தார். சிக்க நரசையன் கிராமத்தை விட்டுத் திருவாலவாயை யடைந்து தெய்வ தரிசனஞ் செய்தார். அஞ்ஞான்று—

"பொன்னைப் பூமியைப் புன்புல வாக்கையை
மின்னை நாடியு ழன்றுள்ள வீணனேன்
தன்னை யாண்டவொர் தன்மையென் ஞலவாய்
அன்னை யேயரு ளேகுகப் பிரமமே."

என்னுஞ் செய்யுளை முதற்கட் கொண்ட திருவாலவாய்ப் பதிகத்தை மன்மத ஞு புரட்டாதிமீ 2உ பாடியருளினர்.

"சீருளா ரேத்துஞ் சீருடை நஞ்சிவ பெருமான்
கூருலாம் வேற்கை யோடன வரதமுங் குறைவில்
பாரெலா மேத்துங் கன்னிநா டுறைதரு பாங்கை
ஓரெலா வார்ப்பு மொருங்கியுய் வாயென துளமே."

என்னுஞ் செய்யுளை முதற்கட் கொண்ட திருக்கன்னி நாட்டுப் பதிகத்தைப் புரட்டாதிமீ 7உ பாடியருளினர். திருவாலவா யென்பதூஉம், திருக்கன்னி நாடென்பதூஉம் மதுரையே. பின்னர்த் திருக்கொடுமளூரை யடைந்து குமார பகவானைத் தரிசித்தார். அஞ்ஞான்று—

"சிந்துசுல விந்தநிலை தன்னிலும தன்புடையர்
சேவடிபு கழ்ந்துதொழவோ
நுந்திருவி ரும்புபரி பக்குவர்கண் மும்மலமு
நூறியருள் செய்யவெனவோ

அந்தமடி யற்றபர மங்களவ கண்டசிவ
மாகவுள நீர்கழனிசூழ்
சுந்தரம லிந்துயர்தி ருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே."

என்னுஞ் செய்யுளை முதற்கட் கொண்ட திருக்கொடுமளூர்த் திருப்பதிகத்தைப் பாடியருளினர். இது மன்மதஞூ புரட்டாதிமீ 16உ ஆகும். இத்தல தரிசனுர்த்தம் சுவாமிகளுக்குத் துணையாய்ப் போந்தவர், சால்ட்டு இனிஸ்பெக்டராகிய அறம்வளர்த்தநாத பிள்ளை யெனும் அன்பரே. இதற்குமேல் பிரப்பன் வலசையை யடைந்தார். அச்செவ்வி—

"பூமகளி யங்குலகி னல்லதமிழ் நாவலர்பு லம்பு கவிதைத்
தாமமணி நங்கடவு ளென்னுமுரு கையரடி தன்னை
யெணியே
நாமுனமி ருந்தவள மேகிளர்ந யப்புளபி ரப்பன் வலசை
ஆமிதனை நண்ணுபவ ரன்புடைய ராவர்பழி யஞ்சு
மனதே."

என்னுஞ் செய்யுளை முதற்கட் கொண்ட பிரப்பன் வலசைத் திருப்பதிகத்தைப் பாடியருளினர். இது, மன்மத (கி. பி. 1895) ஞூ புரட்டாதிமீ 24உ ஆகும். இதற்குப்பின் பரமப் பிரகாசம், வாதனை நீக்க மன்ருட்டு, துயரறுக்கு மார்க்க விளக்கம், எண்ணலங்காரலகரி, அருளானந்தலகரி, பூரணப் பொருளென வரும் 6-பொதுப் பதிகங்களும், இதற்குமுன்னுய அவ்வித பதிகங்களும், தலப் பதிகங்களும் பாடப்பட்ட காலங்கள் அவ்வப் பதிகங்களின் முடிவிடந் தோறுந் தீட்டப்பட்டுள. **திருவலங்கற்றிரட்டின்** முதற் கண்டத்தில் இவ்வளவிற் போந்துள்ள 491-செய்யுளும் இல்லற நிலை நின்று பாடியுள்ளனவாம். மேலுறு 110-செய்யுளும் துறவற நிலை நின்று பாடியுள்ளனவாம். (அச்சிற் பதிப்பிக்கப்பட்ட காலம் கி. பி. 1901-ஆம்.) மேலே கூறிப்போந்த பிரப்பன் வலசையை விட்டுப் பாம்பன் பதியை யடைந்து வைகினுர் ஆசிரியர்.

## துறவு பூணல் -- மதுரையடைதல்

ஆசிரியர், மன்மத (கி. பி. 1895) வருஷம் கார்த்திகைத் திங்களுக்குப் பின்னே துறவற நிலையை அடைவான் எண்ணி னர். எண்ணினவர் ஒரு தினம் வடசமுத்திர தீரத்தை யெய்தி ஒரு நாவாயிலேறி யமர்ந்தார். யாரிடத்தும் யாது முரையாது செல்லலைக் கருதிய திருவாளர் மு. சின்னசுவாமிப் பிள்ளை, ஆசிரியர் துறவறத்தை மேற்கொண்டார்போலு மென்றெண்ணினவராகி, சுவாமிகளுடைய குமாரர் முருகைய பிள்ளையோடு விரைந்து வந்து ஆசிரியரை நாவாய்மீது தரிசித்து வந்தித்துச் ''சுவாமிகளுடைய நோக்கம் துறவறமாயின் இச்சிறுவன் மயங்குகின்றனன். யாதுகூற வுள்ளீர்கள்?'' என வினவினர். இவர், ''முருகவேள் செய்வதைச் செய்யும், நீ மயங்கற்க. பெருஞ் சிறப்புடை இப்பிள்ளையும் உன்னைக் கவனித்துக் கொள் வார்'' என்று கூறினர். பின்றை நாவாய் ஓடுவதாயிற்று. ஆற்றைக் கடக்கும்போது ''செவ்வேள திருவடி சேராமல் இந்த ஆற்றைக் கடந்து பாம்பனுக்கு யான் இனி வருவதில்லை'' என்னும் பிரதிஞ்ஞை செய்து கொண்டார். அப்படியே அது பேணிக் கொள்பவராயினர். **பரிபூரணனந்த போதத்** துறவற விளக்கப்படலத்து 32-ன் உரையிலே—

> ''துறவியாய்த் தமதூரைவிட்டு வந்த இந்நூலாசிரியரும் பின்னர் அவ்வூரையெய்தாது நிற்பவரே யாயினர்.''

என இவரே வரைந்திருத்தலு முணர்க. ஓடிய அந் நாவாயை விட்டிறங்கிய சுவாமிகள் பிரப்பன் வலசையை யடைந்தார் கள். பின்னர்ப் பிரப்பை கடக்கு மெல்லையில் ஸ்ரீமதி-மாதா வானவர் கவன்ற முகங்காட்டி ''எனக்கு யாது கூறுவாய்?'' என வினவி எதிர் நின்ருர். உடனே இவர், ''தாயே! தடுக்க வேண்டாம், செவ்வேளை நம்பினல் எல்லா நலமுஞ் செய் தருளுவன். அவன் திருவுள்ளமிருந்தவாறே எதுவும் முடியும்'' என்று கூறி வந்தித்தார். அஃதுணர்ந்த வுடனே அம்மாதா

வானவரும் ஒருசாரொதுங்கி நின்று விட்டனர். சீடர்களுள் மு. சின்னசுவாமிப் பிள்ளை முதலியோரும் வேறு சிலருஞ் சிறிது தூரம் பின்றொடர்ந்து சென்று நமஸ்கரித்து நின்று விட்டார்கள். மேல், இராமநாதபுரத்தை யடைந்த சுவாமிகள், ஒரு குதிரைத் தபால் பண்டியிலேறிப் போம்போது வானர மதுரை யென்னும் மானுமதுரைக் கருகில் ஒரு பாதம் தரையிற்றுக்குண்டு வளைந்தமையால் வீங்கி வருத்தம் புரிவதாயிற்று. ஆவயினிறங்கிப் பிறிதொரு பண்டி யிவர்ந்து ஆற்றிற் கப்புறத்துள்ள அறம் வளர்த்தநாத பிள்ளை யென்னும் அன்பரது வீட்டை யடைந்தனர். சால்ட்டு இனிஸ்பெக்ட்டராகிய அவர் அவ்வீடு விட்டுச் சிவகங்கை யென்னும் ஊர் போந்தமையை அவரன்னையா ரறிவித்து நீங்கள் இத்திண்ணை மீதிருங்கள் என்று விரிப்பொன்று விரித்தனர். அதன் கண் இவரிருந்தனர். அன்றிரவு "நினது இல்லத்தில் இன்ன பெயருடையார் காலிலேற்பட்ட துன்பத்தோடு வந்திருக்கிறார்: நீ சீக்கிரஞ் சென்று அவரைப் பார்" என்றறிவிக்கப் படுதலைக் கனவாகக் கண்ட அம்மெய்யன்பர் மறுநாள் முற்பகலில் இவரைக் கண்டவுடன் இங்கிலீஷ் வைத்தியரொருவரை அழைத்து வந்து பார்வையிடும்படி செய்ததுமன்றி உரிய மருந்தும் பாதத்தின்மீ திடும்படி செய்தனர். ஒரு வாரத்தில் அத்துன்பொழிவுகண்டு மேலும் தமது பிரயாணத்தைத் தொடங்கினர். இவ்விடயங்களை ஆசிரியர் வெளியிட்டமை யுண்டுகொலோ எனின், உண்டென்க. என்னை? **ஸ்ரீமத் குமாரசுவாமியத்து** இடையுறுது நிற்க விழைதலில்—

"சீர்த்த செல்வர்வா ழூர்பி ரப்பையென்
றிணையை நீங்கிநீ ரணவு பாம்பனேய்
கூர்த்த வுள்ளுளா ரோடொர் வற்சரங்
குல்வி நின்றுதா யவள்பி றந்துளார்
நார்த்த வில்லினுண் மக்க ணட்பெலா
நழுவ வேகியோர் கிழிச லோடுனோர்
பூர்த்தி நல்குதா ணம்பி னேனெனைப்
புரந்தி டாய்கொலோ கடம்பின் மாலையாய்.

நம்பு நான்முனே சொல்பி ரப்பையே
நணுகி யேகுகா லனையுள் வாடினுள்
எம்பி ரான்குகன் றன்னை நம்பனே
னிதய நின்றதே முதிரு மென்றுபோய்
அம்பி றங்குநா டால வாய்சென்முன்
னடல்கொள் பண்டியா லடிம டங்கியே
வெம்பி வாடலிற் காத்த நீயிங்ன்
விடுகை யென்கொலோ முருக நம்பியே.''

என்றுராகலின். போந்த பிரயாணத்தில் மழவராயனேந்த லென்னுங் கிராமத்தை யடைந்தார். ஆங்குச் செல்வாக் குடையராயிருந்த நல்லபுலி சேர்வைகார ரென்னுஞ் சிவ பக்தர் பேரன்போடு செய்த உபசாரங்களை அங்கீகரித்துப் பதினைந்து நாள்களுக்கு அதிகமாக வைகித் **திருவாதவூரை** யடைந்து தெய்வ தரிசனஞ் செய்து கொண்டு திருவாலவா யாகிய **மதுரையை** யடைந்தார். ஆங்கு ஒரு வாரத்திற்கு அதிகமாகச் சிவாலய தரிசனஞ் செய்திருந்தார். சொற்ற திருவாதவூர், மதுரை யென்னும் இரண்டு க்ஷேத்திரம் வரை யிலும் மேற்படி சேர்வைகாரர் சுவாமிகளுட னிருந்துவிட்டுத் தமது ஊரை யெய்தலுற்றனர்.

## சென்னை சேர்தல்-முருகவேள் செய்த முன்னேற்பாடு-குமாரானந்தர்க் குபதேசம்

பின்னே சுவாமிகளுடைய மனத்திற் றோன்றியவாறு சென்னை மாநகரஞ் சேர்வான் றூமரதமேறினர். ஏறலும், "வச்சிரபாணியாய்ச் சத்திபாணியாய்த் தண்டபாணி யாய்த் தயாசிந்துவாய் இலங்குமிறைவ! இதுகாறும் யான் தெரிந்துள்ள நாடாகவே யிருந்தது. உதவிசெய்வாரு முதவி செய்தனர். இனி, யான் செல்லுநகரம் எனக்கெவ்வாறு யிருக்குமோ?'' என்றியம்பிக் கண்ணீ ருகுத்தனர். மறுநாட்

காலை அத்தூமரதஞ் **சென்னையை** யடைந்த பின்னே ஒருவர், வைத்தியநாத முதலியார் தெருவிலுள்ள 41-வது இலக்க வீட்டிலே இவரை யுய்த்தனர். அவ்வீட்டிற் குடையரா யிரா நின்ற தபச்சீருடைப் பெரிய அம்மாளாயுள்ளார் இவரைக் கண்ணுற்றவுடன் வணங்கி, மேன்மாடிக் கழைத்துப்போய் "இராத்திரி யென்கனவில் இத்தப வடிவந்தோன்றி 'எனக்கு ஆகாரமிடுக' என்று கேட்டபடியால் நாம் இவருக்குச் செய்ய வேண்டிய உபசாரத்தைச் செய்யக் கடவோம்" என்று தம் மகனார் கோவிந்தராஜ முதலியார், மருமகள் ஜகதம்பாள் ஆய இருவருக்கும், ஆங்குள்ள வேறு சிலருக்கும் அறிவித்து அன்னம் படைத்து உபசரிக்கலாயினர். இவ்விவர மறிந்து கொண்ட இவர், இறைவனிழைத்த அருட்செயலை நினைந்து நினைந்தழுது மகிழ்ந்திருந்தார். பின்பு அவ்வம்மையார் வேண்டுகோ ளங்கீகரித்துத் திருவாறெழுத்தை விதி முறையாக அவருக்கு உபதேசித்தார். அவ்வீட்டினர் யாவரும் செவ்வேட் பரமனுக்கே அடிமைப்பட்டு அவனைப் பூசிப்பவ ராயினர். இவ்விடயமே **ஸ்ரீமத்-குமாரசுவாமியத்து** இடையறுது நிற்க விழைதலில்—

"சென்னை சேர்முனே யவ்வி ராவவ்வூர்த்
திருவி னேர்சொனுர் தவமு ளாள்கனுத்
தன்னி லென்னுடம் போடு நின்றனந்
தருதி யென்றுநே ரருளி யந்தவீ
டென்னை யெய்துமா ருற்றி யங்குளா
ரெவ்வரை யுந்தொட ரடிமை கொண்டனே."

எனவுங் கூறப்பட்டுளது. பின்னர் அவ்வம்மையார், செவ்வேள் வடிவத் தியானபாவனையி லமருந்தோறும் மயூரத்தின் மிசை இறைவனிருத்தலைக் காண்பவராகி இனி யெனக்குக் காஷாயமளித்தலும் நுங்கள் கடனென்று நுவன்று அதனை யேற்றுத் தாரணஞ் செய்திருப்பவராயினர். இவரது பெயரே குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதியிலே குமாரானந்தம் என வருகிறது. அச்செய்யுள்—

"கொள்ளச் சயிலா கள்ளிப் பழமுங் கொண்டேன்
பசித்தோர்நாள்
எள்ளத் தனையு மன்பிற் பிரியா வியல்பும் பத்தியுமோங்
குள்ளக் குமரா னந்தப் பெயர்மா துணவீ யாவிடினென்
பொள்ள ற்சட நில் லாதே சென்னைப் புகழும் மாதைக்கா."
[60]

என் நிகழ்தலுங் கருதிக்கொளத்தக்கது. **அசோக சால வாசத்தில்** "முதிய வயித்தியநாதன் றெருவின் மூப்பாய்—வதியுமயிற் குகனருள்கொள் வாழ்க்கையாளர்" எனக்கூறப் பட்டவர்களும் இங்குக் கூறப்பட்டவர்களே. தேசிகர், திருத் தேவையெனுந் திருவிராமேச்சுர இறைவனை யெண்ணியே **திருவலங்கற்றிரட்டில்** "கார்கொள்வானும்" என்றற்றொடக் கத்துத் திருப்பதிகத்தை இச்சென்னையி லிருந்துகொண்டே மாசிமீ 21உ பாடியருளினர்.

## சிதம்பரமடைதல் - 'பரிபூரணானந்த போதம்' 'தகராலய ரகசியம்' 'திருப்பா' முதலியன அருளிச் செய்தல்

பின்னே சுவாமிகள் கலியுகம் 4998-ஆம் ஆண்டில் நிகழ் சாலிவாகன சகாத்தம் 1819-ல் துர்முகி (கி. பி. 1896) வருடம் சென்னைமாநகரை நீங்கிச் சிதம்பரத்தின் கீழ்த்திசைக் கண்ண தாய குசவன்பேட்டையை யடைந்தார். அங்கே இராஜா-முத்துக் கிருஷ்ண நாயுடுகா ரென்பாரின் உபசரிப்பிலிருந்தார். துர்முகி வருடத்து ஐப்பசித் திங்களில் 230 செய்யுள்களையுட் கொண்ட **பரிபூரணானந்தபோத**மென்னு நூலை யியற்றியருளி னர். துர்முகி (கி. பி. 1896) வருடத்து மார்கழித்திங்களிற் சொல்லிப்போந்த குசவன்பேட்டையில் 117 செய்யுள்களை யுட்கொண்ட **தகராலய ரகசிய**மென்னு நூலை யியற்றி யரு ளினர். இறைவன் ஒரு சொல்லா லிவருக்குணர்த்திய வுப

தேசப் பொருளே இந்நூலாய் விரிந்துளது. இவற்றிற்குப் பின்னே சுவாமிகள் **சுந்தரொலியலந்தாதி, குகப்பிரம வருட்பத்து** என்னு மிரண்டையும் அவ்வூரிலேயே பாடியருளினர். இவற்றைப்பாடும் ஒலித்திறனறியார்க்கு அத்திறனை யறிவுறுத்தும்பொருட்டு (ஒன்றறை வருடங்காறும் தாமனுசரித்த) மௌனத்தை வரைந்து, பாடிக் காட்டினர். போந்த இராஜா-முத்துக்கிருஷ்ண நாயுடுகாரும் சீடர்களுளொருவரே.

## குடந்தையிலும் தூற்றுக்குடியிலுமுற்ற துன்ப நீக்கம்

1101-திருச்செய்யுள்களை யுட்கொண்ட **திருப்பா** வென்னு மொரு நூலையும் ஆசிரியர் பாடியுள்ளார். இது, கூறிப் போந்த துர்முகி வருடத்து மாசித் திங்களிலும் (கி. பி. 1897) நடந்து கொண்டிருந்த தென்பதாக அந்நூல் 6—ஆம் பத்தின் 6-ல்—

''வெகுசனத் தொறுவொன்று சேரநன் மாமக
விழாவங் குடந்தையின்கண்
வியப்பா நடக்கவருள் செய்தெனையு மாண்டுற
விதித்து''

என வெளியிடுகிறது. கும்பகோணமே குடந்தை யெனப் பட்டது. ஆங்கே மாசிமாதத் தெய்திய பன்னிரு மகாமக புண்ணியகால ஸ்நானங் கருதி ஆயிடைப் போந்த ஆசிரியர், அநேக ஜனத்திரளுக்கு நடுவட் செல்கையில் நெருங்கிய ஒரு வழியிலே அத்திரளானது முன்னும் பின்னுஞ் செல்லவியலாது துவைபடவும் நசுங்குண்டு அலறவும் நேர்ந்தது. பலரிறந்து பட்டனர். அஞ்ஞான்று ஆசிரியர் தம் மிறைவனைச் சிந்தித்தவுடன் தம்முயிர் மீட்சிபெறுதலை யறிந்தார். இச்செய்தியையே அவர், **இடையருது நிற்கவிழைதலில்**—

"............... குடந்தை யிற்சிகா
துற்ற மன்பதைக் குண்ணெ ருங்கிநா
னுயிர்த்த துன்செய லெனற்கு மென் றடை"

என்றுரென்க.

பின்பு சுவாமிமலை யென்னுந் திருவேரகத்தை யெய்திச் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு குசவன் பேட்டையை யடைந்து திருப்பாவைப் பாடிக்கொண்டிருந்தார். **இத் திருப்பா** 27-ஆம் பத்தில்—

"சத்திய மேயுரை யென்றருள் சாரும்
புத்தி யுரைத்து மறைந்து புலங்கூர்
நித்திய வன்பி னிறீஇய பின்னென்
அத்த வெனக்கய லாவது மென்னே"

என்றெழுந்த திருச் செய்யுளாற் சத்தியத்தையே சொல்வா யாக வென்று தெய்வங் கட்டளை யிட்டருளியது வெளிப்படல் கவனிக்கற்பாலதாகலின், இந்நூலாசிரியர் பாடல்களும் வசனங்களும் சத்தியமே சாற்று மென்க. பின்னே, தூற்றுக் குடி போந்து ஆயிடை வைகுஞான்று வெயில் வெப்பத்தினுல் இவருக்குண்டான இருமல், பெருவருத்தம் புரிவதாயிற்று. அதற்காற்ருத இவர், திருச்செந்தூர் ஆண்டவனைச் சிந்தித்து "இத்துன்பு தீர்த்தருடி" என்று பிரார்த்தித்தார். அடுத்த இரவிலே கனவிலே ஆங்கில உடையோடு ஒரு வைத்தியர் இவர் முன்னே தோன்றி வேதனை யாது? என விசாரித்துத் தன்னுடன் நிற்கின்ற ஓரிளைஞனை நோக்கி "மருந்துகொடு" என்றருளியபடி அவனுங் கொடுத்தனன். பின்னர் அவ்விருமல் சாந்தமுறுவதாயிற்று. இவ்விடயம் **ஸ்ரீமத்-குமாரசுவாமி யத்தே** இடையருது நிற்கவிழைதலில்—

"மாசின் மந்திரப் பேர்நகர்க்கணுன்
வதியு நாள்விடா விரும னேயையே

ஏசில் பண்டிதஞ் செய்து தீர்த்தசெந்
திநகர் மன்னையா''

எனவுங் கூறப்படுவதாயிற்று.

## சிக்கநரசையனூரிற் சீடர் சேர்தல்--
## சீவகாருணிய நிகழ்ச்சி -- தல தரிசனம்

இவ்வண்ணமாகத் துறவு நிலைநிற்குமிவர், திருநெல் வேலிச் சிக்கநரசையன் கிராமத்திலே காலஞ்சென்ற நயினூர்ப் பிள்ளை யென்பார் வீட்டிலே தங்கியிருந்தார். அஞ்ஞான்று ஒரு பகலில் ஒரு மூட்டைப் பூச்சி வெளிப்பட்டு விரைந்து செல்வதாயிற்று. ''அதனைப் பிடித்து வெளியிற் கொண்டு போய் விடுக'' என அவ்வீட்டுச் சிறுவனை யேவினுர். அவன் அதனை நசுக்கிக் கொன்று விட்டனன். அது காண்டலும், ''மடவோனே! கொலை செய்தனையே, மனம் வருந்துகின் றதே, என்செய்வேன்!'' எனக் கவன்றுக் கூறி ''உணவு உட் கொள்ளேன், நீ போ'' என்று வருந்தி யிருந்தனர். வீட்டி லுள்ளோர் யாவரும் மன்னித்து உணவு கொள்ள வேண்டு மென்று வேண்டி நின்றனர். ''இழவு ஏற்பட்டுளது, இப் பொழுது கூடாது, நாளைக்குக் கூடும்'' என்றுரைத்துப் பால் மட்டும் பானு அஸ்தமித்தபின் அருந்தி மறுநாள் உச்சிப் போதில் உணவுட் கொண்டார். அங்ஙனம் இவரது சீவ காருணியங் கருதிப் பலரும் அதிசயிப்பவராயினர். கூறிப் போந்த நயினுர்ப் பிள்ளையின் பிரதம குமாரனுகிய குப்புச் சுவாமிப் பிள்ளை விருப்பத்தின்படி பின்னரும் அவ்வீட்டினை யடைந்தனர். குப்புச்சுவாமிப் பிள்ளையின் அன்னை, இவரை வணங்கி நின்று, ''சுவாமி! இற்றைநாளிரவு எனது நித்திரை யில் ஒரு மயில் இங்கே வந்து தன் தோகையை விரித்துக் கொண்டு திவ்விய நடனம் பண்ணியது. அது, தங்கள் வர வென்று இப்பொழு துணரலாயினேன். இனி, என் காலம்

வீணுகக் கழியாதபடி முருகப் பெருமானை உபதேசித்தருளல் வேண்டு'' மென்ற பெரு வேண்டுகோளை அங்கீகரித்த இவர், விதிமுறையாகவே திருவாறெழுத்தை அவ்வம்மையாருக்கு உபதேசித்தனர். ஐம்பது வயதுடைய அவ்வம்மையார், அம் மந்திரத்தை மணியுருட்டிச் செபித்தலிற் றலைப்பட்டிருக்கும் போது ஒரு குழந்தை தன் மடியில் வந்திருப்பதைக் கண்டு ஆசையோடு தூக்க முயன்றவுடன் அது மறைந்துவிட்டது. இச்செய்தியைத் தம்முடைய தேசிகருக்குத் தெரிவித்துக் கொண்ட அம்மாது சிரோமணியார் ''அவ்வாறு வருங் குழந்தையைத் தூக்க முயலவேண்டா'' மென்னுங் கட்டளை யையே அவர்பாற் பெற்றனர். பின்னே, தேள் விஷம் போக்கத்தக்க ஒரு பச்சிலையையும் அவ்வம்மையாருக்கு இவர் காட்டிக் கொடுத்தனர். அக்காரியமும் நடைபெறுவ தாயிற்று.

சிறுநூற் றிரட்டிற் சேர்ந்துள்ள கந்தகோட்ட மும்மணிக் கோவையை ஒருவர் தனியாக அச்சிட்டார். அந்தப் பிரதியி லொன்றினைத் திருநெல்வேலிப் பாங்கரில் வதியும் நல்ல சைவ நண்பரொருவருக்கு இவரீந்தனர். அவரதனைத் திருநெல் வேலிப் புதுப்புலவ ரொருவருக் களித்தனர். படித்துப் பார்த்த அப்புலவர், கட்டளைக்கலித்துறைகளி னீற்றுச் சீர் காய்ச்சீராகவே வரல் வேண்டும்; இக் கோவையுட் கனிச்சீர் களும் புக்கனவென்று வழுக் கூறியதை அந்நண்பர் இவர் முன்னே கூறி நின்றார். உடனே,

''சொல்லாரும் வல்லின மெல்லின மோடிடைத் தோன்று
நில்லாது நேர்நிரை நேராய் முடியு நிரம்பியநூல் [மொற்று
கல்லாத மாந்தர்க டேமாங் கனியென்பர் கற்றுணர்ந்த
நல்லார்கள் யாவருங் கூவிளங் காயென நாட்டுவரே.''

எனும் விதியை இவரெடுத்துரைத்து இலக்கியங்களுங் காட்டி னர். இவ்விதி தெரிந்துகொண்ட பின்றை புதுப்புலவரும் பழம்புலவ ராயினர்; பன்னூலும் படித்துணர்தலே தெளி வைத் தருமென்றும் ஓர்ந்தனர்.

மேல், சிக்க நரசையன் கிராமத்துச் சில சிவபக்தர் களோடு திருவெற்பினை யடைந்தார். அடைந்து அம் மலை மிசை யிலங்கு திருக்கோயிலில் வீற்றிரா நின்ற குமாரக் கடவுளைத் தரிசித்து உவகை பூத்தார். அச் செவ்வி, விளம்பி (கி. பி. 1898) வருஷத்து ஆனிமாச ஆரம்பமா மென்பது அஞ்ஞான்று பாடியருளிய

"திருவானி லாவிடு குற்றால நாதர் தஞ் செல்வனையென்
வெருவானி தீர்த்தருள் வேலவ னைத்திரு வெற்புமிசைப்
பெருவானி லாது மளமள வென்றுரை பெய்விளம்பி
மருவானி யாரம்ப நான்கண்டு பூரித்த வைகலன்றே."

என்னுங் கட்டளைக் கலித்துறையா லறியப்படுகிறது. பின்பு, குற்றாலம் பாவநாச மென்னுங் கேத்திரங்களை யடைந்து தெய்வ தரிசனஞ் செய்துகொண்டு மீண்டு அந்நரசையன் கிராமத்தை யடைந்திருந்தார். பின்பு, திருநெல்வேலிக்கு மேற்றிசைக் கண்ணதாய மலைமிசையுள்ள வாண தீர்த்தத் தின் மூழ்கிவர வெண்ணினர். சில சைவ நண்பர்களோடு அத்தீர்த்த நிலைக்களனெய்தி மூழ்கித் திரும்புவதற்குள் தமக்கு மிக்க சிரம முண்டாயிற்றென்ற மன வருத்தத் தோடும்—

"தேன்பட்ட வாய்வண் டறைவெற்பு மேல்வாண
தீர்த்தமதில்
ஊன்பட்ட காயந் தனையே நனைப்பா னுவந்துசென்று
நான்பட்ட பாடுன் றிருவுள்ள மொன்றே நனியறியுங்
கூன்பட்ட சோதிப் பிறைமுடித் தோனிளங் கோமகனே."

என்னும் இக்கட்டளைக் கலித்துறையைச் சுவாமிகள் பாடினு ரென்ப தறியக் கிடக்கின்றது.

## சிதம்பரம் திரும்பல்-சென்னை செல்லத் திருவாணை பிறத்தல்

மேல், அந்நரசையன் கிராமத்தை யடைந்து நண்டர்களை நீங்கி, மேலே கூறிப்போந்த குசவன்பேட்டையை யடைந் திருந்தார். ஆங்கோரிரவிற் கண்ட கனவிலே ஒரு பெரிய அரசமரங் காணப்பட்டது. ஓரிளைஞர் அம் மரத்தினின்றுந் தரையிற் குதித்தனர். அவர்பால் வேல் முதலிய அடையாள மொன்றுங் காணப் படாமையால் இவரை என்னிறைவ னென்று வணங்கற்கு என்மனம் இசையவில்லையேயென் றெண்ணினர். உடனே அவ்விளைஞர், "அவனேயென்று என்னை வணங்கு" என்றுரைத்தனர். அது கேட்டலும் இவர் உண்மகிழ்ந்து தண்டாகாரமாகித் தரையில் வீழ்ந்து அவரை வணங்கிக் கிடந்தனர். இளைஞர், தமது கர கமண்டலத்தி லுள்ள நீரை அள்ளி இவர் தலையிற்றெளித்து "எழுக" என் றியம்பினர். அவ்வாறெழுந்த இவரை நோக்கி "நீ சென்னை செல்க" என்னுங் கட்டளையயிட்டு மறைந்தனர். எம் மூர்த்தியைக் கண்ணுறினும் எம்மிறைவனென வணங்கலும் அடியவர் கடனென அங்ஙனமுணர்ந்து கொண்ட இவர், மறுநாளே சென்னைமா நகரெய்த முயன்று எய்தினர். ஏக தேவ வழிபாடு இவர்மாட்டே இவ்வாறு நிலைப்பதாயிற்றால். அம்மாநகரெய்தியவுடன் முன் மொழிந்துள்ள வைத்தியநாத முதலியார் தெருவின் 41-வது இலக்க வீடடைந்து ஆங்குள்ள அன்பர்கள் உவகையோடுபசரிக்க வைகினர். இத்தெருவிற் கணித்தாயுள்ள வொரு தெருவில் ஏகான்ம வாதியாய் வசித்திருந்த ஒருவர், கொற்றவன்குடி உமாபதி சிவாசாரி யாரைப் பேதவாதியென இகழ்ந்தும், பட்டினத்தடிகளைக் கல்லே யாயினரெனத் தாழ்த்தியும் தம்முன்னர்க் கூறினமை கருதியே **திருப்பா** 31-ஆம் பத்தில்—

"திருநிறைந்த பார்வையினுற் றேடரிய மோக்கமதை
உருநிறைந்த வொருசாம்பா னென்பாற்கு மோர்செடிக்கும்
அருணிறைந்தன் றீந்தவரு வருளாளன் றனையொருவன்
இருணிறைந்திங் கெள்ளியதூஉ மென்கொல்லோ
வெம்பரனே.

பிணமாகிக் கழியுடம்பைப் பேரருளா லிலிங்கமெனப்
பணுந்தகையோ னுடையாவி யெப்பொருளாய்ப்
பம்புமென
எணுந்தகையில் லாவொருவ னேசறுவெண் காடரையோர்
தணிந்தகல்லா யினரெனவே தாழ்த்தலென்னே
வெம்பரனே."

என்னும் இரண்டு திருப்பாட்டுக்களின் வாயிலாக அறிவுறுத்த மாண்பு அறிஞர்கட்குக் கழிபேருவகை பயக்குமன்றோ?

"தனதனன தந்த தந்த தனதனன தந்த தந்த
தனதனன தந்த தானன"

என்னுஞ் சந்தத்திற் பாடுகவெனக் கனவிற் கூறியருளியவாறு அது பத்துவகைப் பேதமுற "அமிர்தமதி னுஞ் சிறந்த" என்றற்றொடக்கத்துக் **கந்தசாமி** யென்னுந் திருப்பத்தை ஆசிரியர் பாடினரென்க. இவ்விவரம் **திருப்பா** 81-ஆம் பத்தின் **குறிப்புரையிலும** ஆசிரியர் குறிப்பிட்டது காண்க. **திருப்பா** 88-5-ல் "உனையறிகிலறிவ ணெனையும றிவதிலை" எனக் கூறியுள்ள நம் ஆசிரியர், துறவறநிலை புக்கும், குமரகுருவை மதியா இறுமாப்புடைக் குமதிகளோடுங் கூடிநிற்க நேர்ந்த விடத்து உற்றவுறுகண் கருதியே "விலகுவர்" என்னும் அந்த 88-ஆம் பத்தைப் பாடி நின்றாரென்க. "முன்னவன் பாத மேத்தி அகநெகா தவரைக் கண்டாலம்மநா மஞ்சு மாறே" என்னுந் திருவாசகமும் இங்கே சிந்திக்கற்பாற்றே. இவ் விடயம், 88-ன் **குறிப்புரையிலும்** ஆசிரியராற் குறிப்பிடப் பட்டுளதால்.

## தலதரிசனம்

ஒருதினம் திருவொற்றியூரை யடைந்து சிவகுமார தரிசனஞ் செய்தபோது பட்டினத்தடிகள் சன்னிதியை யெய்திச் சிவமே! என விளித்து நின்று தரிசித்துக் கொண்டு, நாயனார்ச் சுவாமியெனும் பெரியாரை, அவர் வைகு கட்டிடத்தை யடைந்து கண்டனர். அப்போதவர், முக்கா

டிட்டுப் படுத்துக் கிடத்தலின் அவரை வலம்வருவலென்று இவர் வலம்வரும்போது இவரை ஒருபோதுங் கண்டிராத அவர், **கந்தரனுபூதியில்—**

" மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணு கரனே "

எனவருவது கூறினர். அது செவிகொண்ட இவர், களி கூர்ந்து கைகூப்பி வந்தனித்துவிட்டு வெளியேவந்தனர். மேல், இராயபுரம் போந்து குணங்குடியா ரடக்கத்தைத் தரிசித்து விட்டு நுவன்ற வைத்தியநாத முதலியார் தெருவையடைந் தார். பின்பு திருமயிலைபோந்து சிவகுமார தர்சனஞ் செய் தனர். சின்னுள் சென்று மயிலையை யடுத்துள்ள திருவான்மி யூரையு மெய்திச் சிவகுமார தரிசனஞ் செய்துவிட்டுச் சென்னைமா நகரையே யடைந்தார். சொற்ற விளம்பி (கி. பி. 1898) வருஷத்திற்றுனே நாற்பத்தெண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தத்திற் "சந்திரசேகரம்" என்றற் றொடக்கத்து **அட்டாட்டவிக்கிரக லீலையைப்** பாடியருளினர். இது சிறுநூற்றிரட்டென்பதிலுளது. **திருப்பா** 109-7-ல் "குழைத்தபத்துக் கூறுமா றிரண்டு முண்டு" எனவருவது பற்றி ஆசிரியர் ஒரு விரிவுரை செய்துள்ளார். கி. பி. 1899-ற் செய்யப்பட்ட அது, மிக்க பொருட் பொலிவோடுங் கூடிய கவினுடைத்து. சென்னை வாசியாயிருந்த ஒரு முதலியார் வாதிப்பின்மீதே அஃதேற்பட்டதாகும்.

## அன்னையார் குகனடி அடைதல்

மேல், தம்முடைய அன்னையார் மரித்தனரென்னுஞ் செய்தியைச் சென்னையிற் பெற்றுர். "முருகைய பிள்ளையைக் கொண்டு உத்தரகிரியைகளைச் செய்து கொள்க" எனச் சீடர்கட்கு அறிவித்துவிட்டு "என் ஆண்டவனே! செவ் வேளே! இவ்வுடம்பை ஈன்றுளுக்கு நல்லகதி கொடுக்க வேண்டும்" என்று முருகப்பெருமானை வேண்டுதல் புரிந் திருந்தார்.

## பக்தவத்சலர்க் குபதேசம்

மேல், சென்னைவாசியாய பக்தவத்சல முதலியாரென்பார், ஸ்ரீ மத்- சுவாமிகளைத் தரிசித்து நின்று ''சுவாமி! அடியேற்குத் திருவாறெழுத்தை உபதேசித்து என்னை யாட்கொள்ள வேண்டு''மென்று வந்தித்து நிற்றலையும், ''இவரையா னறிவேன், உபதேசிக்கலா'' மென்று ஸ்ரீமதி-குமாரானந்த அம்மாளுங் கூறி நிற்றலையுஞ் சுவாமிகள் கருத்தடைத்து அவர்க்கு அத்திருவாறெழுத்தை விதிமுறையாக உபதேசித் தருளினர். மேல், சுவாமிகள் காசியாத்திரை செய்து வந்த பின்னர் அம்முதலியார் விருப்புணர்ந்து காஷாய வஸ்திரமும், குகப்பிரமதாச ரென்னும் பெயருங் கொடுத்தருளினர். அவற்றை அவரும் ஏன்று கொண்டு உண்மகிழ்ந்து குமார வழிபாடு செய்திருந்தார்.

## சென்னை வாசம்--பல பதிகங்கள் பாடல்

மார்கழி மாத ஆருத்திரா தரிசனத்தின் பொருட்டும் ஆனித்திருமஞ்சன தரிசனத்தின் பொருட்டுஞ் சிதம்பரஞ் சென்று சென்னையை யடைபவராயுஞ் சுவாமிகளிருந்தனர். இக்காரியம் தம்மாட்டுப் பல முறையு நிகழ்தல் நுதலித் **திருவலங்கற்றிரட்டின்** ''முத்த மன்ன நகை'' என்றற் றொடக்கத்துத் **திருப்புலியூர்த்** திருப்பதிகத்தைப் பாடினர். (திருப்புலியூர் = சிதம்பரம்.) காலம் சார்வரி (கி. பி. 1900) வருஷம் ஆவணி மாசம் 21உ ஆம். ஆவணி மாசம் 22உ ''சொல்விலாச மருத நான்மறை'' என்றற் றொடக்கத்துத் **திருப்போரூர்த்** திருப்பதிகத்தையும், ஆவணி மாசம் 28உ ''பொன்னு ரங்கள்'' என்றற்றொடக்கத்துத் **திருத்தணிகை மலைத்** திருப்பதிகத்தையும், ஆவணி மாசம் 29உ ''சிராார் தெருளாக்கச் சேவடி'' என்றற் றொடக்கத்து **மயிலமலைத்** திருப்பதிகத்தையும், ஆவணி மாசம் 30உ ''நீருலாநெடு வேணியன்'' என்றற் றொடக்கத்துத் **திருச்செங்கோட்டுத்** திருப்பதிகத்தையும், புரட்டாதி மாசம் 3உ ''உலகவெய்மை''

என்றற் றொடக்கத்துக் **கழுகுமலைபாதி கந்தகிரிபாதி** யெனுந் திருப்பதிகத்தையும், புரட்டாதி மாசம் 8உ "மலையெலாம்" என்றற் றொடக்கத்துத் **திருவுடுப்பைத்** திருப்பதிகத்தையுஞ் சென்னையிலிருந்து கொண்டே பாடினர்.

பின்னர்த் திருவொற்றியூர் திருமயிலை யென்னுந் தலங் களுக்குப் பன்முறையும் போந்து போந்து தெய்வ தரிசனஞ் செய்து சென்னையை யடைபவராகவே யிருந்தார். பின்னர்த் திருப்போரூர் போந்து ஆண்டவனைத் தரிசித்துச் சென்னை புக்கனர். திருத்தணிகை மலைக்குஞ் சென்று குமாரபகவா னைத் தரிசித்துவிட்டுச் சென்னையையே யடைந்தார். கி.பி. 1902-ல் **திருவலங்கற்றிரட்டின்** இரண்டாங் கண்டமாகிய பல்சந்தப் பரிமளம் அச்சிடப்பட்டது. இதன் கண்ணே **புள்ளிருக்கும் வேளூர்** முத்துக்குமாரசுவாமி மீது பாடப்பட்ட வண்ணகவொத்தாழிசைக் கலிப்பாவுங் கண்ணுறலாம்.

## காசியாத்திரை--காஷாய தாரணம்

சுவாமிகள், சுபகிருது (கி. பி. 1902) வருஷம் ஆடி மாச ஆரம்பத்திற் காசியாத்திரை புரியத் தொடங்கினர். அஞ் ஞான்று கண்ணுற்ற தலங்கள் பெச்சுவாடா, கோதாவரி, விசாகப்பட்டணம், ஜகந்நாதம், கல்கத்தா, கயா முதலியன வாம். ஸ்ரீகாசிமா நகரை யடைந்து கங்கையைத் தரிசித்து மூழ்கிய பின்னர் அரித்துவாரமடைந்து நீராடினர். அயோத்தி, பிருந்தாவனம், மதுரா, கோவர்த்தனகிரி, கோகுலம், திரிவேணி சங்கமப் பிரயாகை யென்பன காணப் பெற்றுப் பெயர்த்தும் ஸ்ரீகாசிமா நகரை யடைந்தனர். அடைந்ததும் குமரகுருபர சுவாமிகள் திருமடத்தில் இவருக்கு ஆகாரமிடும்படி அங்குள்ள கெழுதகை உழுவலன்புடையார் களால் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆடி மாசம் 22உ புதவார மும் பூரநக்ஷத்திரமுங் கூடிய புண்ணிய தினத்தில் இவர் அம் மடம் புக்குக் குமரகுருபர சுவாமி சன்னிதியில் அவர் திருவுரு

வைத் தரிசித்துக்கொண்டு மேன்மாடியிலே தமக்கிடப்பட்ட உணவை யுண்டுவிட்டுக் கை கழுவிவந்து தமது மேலே போர்த்துக் கொள்ளொரு வெள்ளை வஸ்திரமானது வைக்கப் பட்ட இடத்திலில்லாமைபற்றிச் சிந்தித்து நின்றனர். அப் போது ஆங்குள்ள காஷாயதாரண வயோதிகர் பொன்னூ லிடப்பட்ட இரண்டு புதிய காஷாய வஸ்திரங்களைக் கொடு வந்து இவரரையணி உடையாக ஒன்றைச் சுற்றி யாத்து அங்க வஸ்திரமாக ஒன்றைக் கழுத்திலிட்டு வணங்கி நின்றனர். இவர் அவரை நோக்கி ''இஃதென்னை?'' என்று வினவினர். ''இது குமரகுருபரர் சுவாமிகள் மடம், அப்பெரியார் பெய ருடைச் சுவாமி! இங்கிட்ட இவ்வாடை யிரண்டனைப் பெற்றுக்கொளல் நின் கடன். என்னையறியாமலே இக் காரியம் என் மனத்துதித்தது. தள்ளேல்'' என்று அவருரைத்து நின்றார். அவ்வுரையைக் குமரகுருபரனுரை யெனவே அங்கீகரித்து அங்ஙனம் வணங்கியிருந்தார் இவர். இச்செய்கைகளும் மேலுறு பிரார்த்தனையும் விவரமாகக் **காசி யாத்திரையில்**—

''காசிக் குமரகுருபரன் செய்த கனமடத்திற்
பாசிப் பயறு கலந்தநல் லன்னமும் பாலுமுண்டங்
கேசற்று நின்ற வெனதரை யிற்கும ரேசனன்பர்
தூசிற் சிறந்தபொற் காடாய வத்திரஞ் சுற்றினரே. (42)

சுற்று மமையங் குமர குருபர சாமிசொந்தம்
உற்ற மடமிதிங் கேயிட்ட காவி யுடையிரண்டும்
பெற்றிட னின்கட னுகுங் குமர குருப்பெயரே
பெற்ற சுவாமி யெனவுரைத் தாரந்தப் பேரன்பரே. (43)

பின்னு மெனையிங் கறியா தெழுந்ததிப் பெற்றியிதை
நன்ன ரிலையெனத் தள்ளே லெனவு நவின்றவன்னூர்
சொன்ன மொழியைக் குமர குருபரன் சொல்லெனவே
என்ன திதயமு மொப்பிப் பரவச மெய்தியதே. (44)

அன்றிறை கோவணங் கட்டிவந் தெற்குய ராக்கஞ்சொலிச்
சென்றநா டொட்டுவெண் கோவணங் கொண்டு சிவப்பிறுணி
ஒன்றையே போர்த்துத் திரிந்தவெற் கிச்செவ் வுடையிரண்டும்
நன்றெனத் தந்தசெவ் வேளருள் பூர்த்தியு நல்குகவே'' (45)

என்னுஞ் செய்யுல்களால் இவர் கூறினரால்.

விசாகப்பட்டணத்திலும், ஓரிரவிலே மாரிபெய்த காலத்தே காசிக் கங்காநதிக் கரையிலும், பிறிதோரிரவிற் சோனமாரி பெய்தபோது மதுராபுரியிலும் தாமெய்திய துன்பம் அதிகமென்றும், அவ்விடங்களிலே தக்கசகாயஞ் செய்தது இறைவனருளே யென்றும் **ஸ்ரீமத் குமாரசுவாமியத்தின் இடையருது** நிற்க விழைதலில்—

''வார்வி சாகனூ ரேய்து யர்க்கணும்
மதனுய் காசிவா னதியின் மேலிராக்
கார்பெய் காலையும் வேறு மோர்நிசிக்
கணிறை சோனையின் மதுரை வீதியிற்
சூர்கொள் காலையுஞ் செய்ச காயமென்
சொலில டங்குமோ விநன மன்பிலாப்
பேர்கள் போன்மறைந் தாலுய் வேன்கொலோ
பிரச வோதிநீ ளிருவர் காதலே''

என்னுந் திருச்செய்யுளிடையே ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஆயினும் **காசியாத்திரை** 47-ல்—

''சீருஞ் சிவமுமருள் செவ்வேளின் சேவடியே
சாருங் குமரகுரு தாசனெனும்—பேருநான்
தென்பொற் றமிழறியார் தேயங் களிற்கொண்ட
இன்புக்குத் துன்புகுறை வே.

என்றொரு முடிவு கூறினர்.

காசியாத்திரை முடிந்ததன் பின்னர் ஒவ்வொரு சந்தர்ப்பநோக்கி **அந்நூலிற்றனே** ஆசிரியர் பாடிய பாடல்களுள்—

'' முறுக்கவிழு மொட்டிண்டை மூடுதடஞ் சூழுங்
குறுக்கமறு காளத்திக் கோவில்—சிறக்கவுறை
வென்றிக்கை வேலவனே வேண்டென்னை நோக்காயேல்
என்றுக்க மெவ்வா றிறும். (215)

சுழித்தோடும் பொன்முகலித் தொன்னதியின் றண்மை
செழித்தோங்குங் காளத்திச் சேயே—விழித்தீங்கு
செய்தவற் குன்றந்தை செய்தகதி யைத்தானே
எய்தெற்குஞ் செய்வா யிசை'' (216)

என்னுஞ் செய்யுள்களால் **திருக்காளத்திக்** குமார பகவானையும்,

'' பாட்டாளிக டேனுண்டு பாடுந் திருவாலங்
காட்டரனர் தந்தவிளங் காளாயென்—பாட்டுத்
தமிழ்த்தனித் தேவுன் றயவன்றி யென்னேய்
துமித்தருள்வா ருண்டோ சொலாய். (217)

கானார் திருவாலங் காடா ரயினுதா
வானார் பணிசெம் மலர்ப்பாதா—நானார்
உனக்கய லானேமற் றோராத பேயோ
எனக்கயல்போ நீநிற்ப தென்'' (218)

என்னுஞ் செய்யுள்களால் **திருவாலங்காட்டுச்** செவ்வேட் பரமனையும் பாடினமை காணலாம். இக்காளத்தித் திருக்கோயிலும் ஆலங்காட்டுத் திருக்கோயிலும் இவராற்றரிசிக்கப் பட்டவைகளே. அக் **காசியாத்திரையில்**—

'' கட்டுக் கருளறுக்குங் கந்தபக வான்றானே
எட்டுக் குடியிருக்கு மீசனவன்—மட்டில்
கருணைக்கா ளாவோர்க்குங் கம்பலையொன் றுண்டோ
அருணச்சு மைந்தா வறை''

எனவரு 262-ஆஞ் செய்யுள், **எட்டுக்குடிச்** செவ்வேள் கருணையும் இவராற் புகழப்படுவதாயவாறு காட்டிற் றென்னலாம்.

எட்டுக்குடி "எண்கண்" எனவும் படும். இச்செய்யுள் சென்னையிலிருந்துகொண்டே பாடினதாம்.

## சீவயாதனுவியாசம் பாடல்

**சீவயாதனுவியாச** மூலமாகிய 235-செய்யுளும் சொல்லிப் போந்த சுபகிருது (கி.பி. 1902) வருஷத்து ஆவணி மாசத்தில் இவராற் சென்னையிற் பாடி முடிந்ததாகும். இவரால் வசன மாகச் செய்யப்பட்டிருந்த இது, திருவனந்தபுரம் ந. சுப்பிர மணிய பிள்ளை வேண்டுகோளின்படி பின்னர்க் கவியாகப் பாடப்பட்டதென்பதை அதன் பாயிரத்தா லறியலாம். இச்சுப்பிரமணிய பிள்ளையே **பரிபூரன பஞ்சாமிர்த வண்ணம்** பாடும்படி வேண்டிக்கொண்ட பக்த சிரேஷ்டரு மாவரென்க.

## ச. மா. சண்முகம் பிள்ளைக் குபதேசம்

சென்னை இராஜாங்கத்துத் தந்திச்செய்தி உத்தி யோகஸ்தர்களு ளொருவராய்ப் பாம்பனிலிருந்த ச. மா. சண்முகம் பிள்ளை யென்பார், "திருவாறெழுத்தை யெனக் குபதேசித்தருளல் வேண்டு"மென்பதாக ஸ்ரீமத்-சுவாமி களுக்கு ஒரு விண்ணப்ப மெழுதிக் கொண்டார். சுவாமிகள், அவ்வாறெழுத்து மகாமந்திர இறைவனது கிருபையிருந்தால் அஃதாமென்று அப்பிள்ளைக்கு எழுத்து மூலமறிவித்தார்கள். பின்பு அப்பிள்ளை சென்னைமா நகரை யடைந்து ஒருநாள் முற்பகலிற் சில பழவர்க்கங்களோடு சுவாமிகள் வைகியுள்ள மேன்மாடியை யடைந்து சுவாமிகளைத் தரிசித்து வணங்கி நின்றனர். வட்டத் தட்டுகளில் அப்பழங்களிருத்தலையும் அவை கொடுவந்தாரையும் அடிகள் கண்ணுற்று, "இன்று காலைக் கனவில் அடியேற்குக் காட்டியவாறே இங்ஙனங் கண்ணுறலுற்றேன். இவன் சொல்லை யங்கீகரித்து இவனுக்கு

உபதேசிக்கத்தக்கதை யுபதேசித்திடுக என்னுங் கட்டளை இவன்பொருட் டெழுந்தது கொல்லோ?'' எனச் சிந்தித்து ''நீ யாவன்?'' என்று எதிர்நிற்கின்ற பிள்ளையை வினவினர். அவர், ''யான் இவ்வூரே; பாம்பனிலிருந்து வந்துள்ளேன்; பெயர் சண்முகம் பிள்ளை; சண்முகபிரான் திருவுளப்படி யான் அங்கீகரிக்கப் படுவேனென நம்பியுள்ளேன்; அருளுக'' என்று விடையிறுத்தனர். அது கேட்ட சுவாமிகள், இப்பொழுதென் முன்னுள்ளபடியே கனவிலே கண்ணுற்றேனென்று எல்லா விவரமுமியம்பி ''அங்கீகரித்தேன்'' என்னும் அருள்மொழி தந்து திருவாறெழுத்தையும் அவருக்குபதேசித்தருளினர். இச்சண்முகம் பிள்ளையே சில ஆண்டுகளுக்குப் பின்னர்ப் பெங்களூர் வாசியான ஒரு சண்முகம் பிள்ளையிடத்திற் சிறு நூற்றிரட்டிலுள்ள சண்முக கவசத்தைக் கொடுத்தவரும், அதன் பாராயண பலனுகக் கந்தபிரான் ச. மா. சண்முகம் பிள்ளையைப்போல நீதிமன்றத்திலே தோன்றி நின்று நியாயங் கிடைக்கும்படி செய்துவிட்டு மறைதற்கு ஒரு காரணருமாவர். விவரம், சண்முக கவசம் முடிந்த விடத்திலே வரையப்பட்ட வசனங்களுள் அறியலாம்.

## திருவனந்தபுரத்திற் கந்தசஷ்டி வைபவம்

''யான் இப்பொழுது உத்தியோக முறையிற் சம்பள மாகப் பெறு (100) நூறு ரூபாயையும் இவ்வருஷக் கந்தசஷ்டி மகாகாரியத்திற்குச் செலவு செய்யவுள்ளேன். சுவாமிகள் இங்கே வரல்வேண்டு''மென்று திருவனந்தபுரம் ந. சுப்பிர மணிய பிள்ளை தெரிவித்துக் கொண்டதற்கு இவரிணங்கி அவ்வூர்போந்து அக்காரியத்தை நடத்தினர். பாரணை நாளா கிய மறுநாள் அடியவர்கட்கு ஆகாரமளிக்குங் காரியம், அற்றைப் பொழுது அஸ்தமிக்குங்காறும் நன்கு நடப்ப தாயிற்று. காரியப்பொறுப்பிலே பிள்ளைக்கு உறவினரா யிருக்குஞ் சுந்தரலிங்கம் பிள்ளையை நோக்கி ''எத்தனை முறை

சமையல் நடந்தது?'' என இவர் வினவினர். அஞ்ஞான்று ''அன்னமொரு முறையே சமைக்கப்பட்டது; அஃது எத்துணைப் பெயர்க்கும் படைப்பான் எடுக்கவெடுக்கத் தன்னளவு குறையாமலிருந்தது. அஸ்தமித்தபின்புதான் முடிவடைந்தது. கறிபதார்த்தங்கள் மட்டுமே பன்முறையுஞ் சமைத்துக் கொள்ள நேர்ந்தன'' என்று அவரிறுத்த விடை பலருக்கும் வியப்பு விளைப்பதாயிற்று. கிளந்து போந்த ந. சுப்பிரமணியம் பிள்ளையாகிய திருவாளர், திருவாறெழுத் துபதேசிக்கப்பெற்ற இவருடைய சீடர்களுளொருவரே. சிவயாதனுவியாசப் பாயிரத்திற்காணப் படுபவருமிவரே. இப்பிள்ளை தம்முடைய இளைய மகனுக்குக் ''குமரகுருதாசன்'' என இட்ட பெயர் தம் குருவின் பெயராகலின் அஃதுமவருடைய குருபக்தியை யுணர்த்துவ தொன்றாயிற்றென்னலாம். சில வாரங்களின்மேல் இவ்வாசிரியர் சென்னைமாநகரமே போந்தார்.

## சுத்தாத்வைத நிர்ணய வெளியீடு

வைணவர் சொல்லிக்கொள்ளும் விசிட்டாத்வைதம் போலவே சைவர் சொல்லிக் கொள்ளுஞ் சுத்தாத்வைதமும் வேதத்திற் கூறப்படாதவொன்றுமென்று ஏகான்மவாதிகளியம்புதலைப் பல்லாண்டுக ளொப்புநராயிருந்த சைவரும் பிறரும் அதிசயிக்கும்படியாகவே (108) நூற்றெட்டுபநிடதங்களைப் பன்முறையும் படித்துணர்ந்த இவ்வாசிரியர், **மண்டல ப்ராஹ்மணோபநிஷத்**திலிருந்து அந்தப் பிரயோகத்தை யெடுத்துக் காட்டினமையே பிரதமமென்பதை இந்நாடறியும். ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகளது **சுத்தாத்வைதநிர்ணயம்** என்னு நூலுங் கருதிக்கொள்ளத்தக்கதே. வேத மஹா வாக்கியங்கள் நான்கும் சைவசித்தாந்தப்பொருள் பயக்கின்றனவென்று காட்டப்படாது புறங்கிடத்தல் கருதி, அவற்றிற்கு அச்சித்தாந்தப்பொருள் கண்டவாறெல்லாம் **திருப்பா,**

வேதவியாச மென்பனவற்றிற் பரக்கக் காணலாம். பேசாது கிடந்த பிள்ளையார் சுழிக்குமன்றோ அவ்வியாசத்திற் பொருள் விதித்தார்! இன்னும் எவர்க்கும் புலப்படாமல் அரிது பட்டுக் கிடந்த இனையன போன்ற வியப்பிற்குரியன பலவுளவென் பதையும் இவராற்றீட்டப்பட்ட நூலுரைகளிலும் வசனங் களிலுங் கண்ணுறலாம்.

## உடற்குற்ற நோய்சில உமைபாலன் நீக்கல்

தேசிகர், பொன்னேரியென்னுமூரிற் கணித்தான **திருப் பாலைவன**மென்னுந் தலத்தையடைந்து அங்குள்ள சிவாலயத் திற் சுவகுமார தரிசனஞ் செய்த ஞான்று—

"வேலை யுடுத்த விபுலைவாழ் நர்க்கு விவேகநெறி
நூலை வகுத்தத னுட்பமுங் காட்டியந் நோன்மைவழிக்
காலை யளித்தருண் முக்கண்ண ஞளுங் கனிவோடுவாழ்
பாலை வனத்திற் குமரனை நன்கு பணிகுதுமே"

என்னுங் கட்டளைக்கலித்துறையைப் பாடியருளினர். பின்றைச் சென்னை சேர்ந்து வைகினர். அடிகள் தம் தொடை யிலும் அரையிலும் இரண்டு கட்டிகள் தோன்றி வாதை புரிந்த வாற்றைச்

"சடைக்கற்றை தாங்குவ்விச் சங்கர ஞர்தந்த தங்கவயிற்
படைக்கையெந் தாயறி யாமையி ஞன்செய்த பண்டைவினை
தொடைக்கட்டி யோடரைக் கட்டியு மாநனி தோன்றியென்னை
நடக்கவொட் டாதுசெய் கின்றது சென்னை நகர்தனிலே"

என்னுங் கட்டளைக்கலித்துறையால் வெளியிட்டனர். இறை வன் ஒரு சிறுபிள்ளையாகத் தோன்றி, கட்டிநைந்துபோம்படி மருந்துபூசிச் செல்பவனுயினன். இக்காரியம் அவ்வீட்டிலுறை தரு ஜகதம்பாளென்னுமொரு பெண்மணிக்குக் கனவின்

வாயிலாகக் காட்டின னிறைவன். அப்பொழுதே அக்கட்டி யுடைந்தது. வாதையு நீங்கிற்று. மற்ெறுருஞான்றுற்ற காதுநோயால் இவர் வருந்தலாயினர். மேலுமெய்துற்ற வைசூரியால் ஆகுலமடைந்தனர். இவ்வாறுற்ற துன்பங் களும் ஆண்டவன் கிருபையால் ஒழிவடைந்தன. இவைகள், **ஸ்ரீமத்-குமாரசுவாமியத்தில்** இடையருதுநிற்க விழைதலில்—

"................ சென்னேசேர்
வாசி யானகா லூரு மீதுகோண்
மருவு கட்டிநை வுறந லற்புறை
பூசி நின்றவோர் பிள்ளேயே யிங்ன்
புரிவி லார்கள்போன் மறைவ தேதரோ"

"மற்ெறுர் காலேவெங் காது நோயினே
மருவி வாடினே னுறுவை சூரியால்
அற்ற மெய்தினே னங்கு முன்றயா
வணைந்த ளித்ததே"

என அடிகளே கூறியவாற்ருனு மறியக்கிடக்கின்றன.

## பத்துப் பிரபந்தம் பாடல் --
## தங்க ஆனந்தக்களிப்பு விளக்கம்

ஸ்ரீமத்-சுவாமிகள் பாடியருளிய சஸ்திரபந்தம், மயூர பந்தம், (அந்தாதித் தொடைக்) கமலபந்தம், பிறிதுபடு துவிதபங்கி, பிறிதுபடு திரிபங்கி, பிறிதுபடுபாட்டுப் பிரபந்தம், (ஐந்தந்தாதி யெனும்) பகுபடுபஞ்சகம், சஷ்டி வகுப்பு, தங்க ஆனந்தக்களிப்பு, அனவரத பாராயணுஷ்டக மென்பனவே **பத்துப்பிரபந்த**மெனுமொரு புத்தகமாயின. சஷ்டி வகுப்பு 32-சந்தபேத முடைத்தாகலானும், தங்க ஆனந்தக்களிப்பு இருதிறப் பொருளுடைத்தாகலானும், அனவரத பாராயணுஷ்டகம் வலஞ்சுற்றிப் பார்க்கினும்

இடஞ்சுற்றிப் பார்க்கினும் ஒருபடித்தாகவே நிகழ் ஆறறை யாகலானும் பிரபந்தம் பத்தும் மிறைக்கவிகளே ஆம்.

| | | |
|---|---|---|
| சிவன் | முருகன் | சிவன் |
| உமை | விநாயகன் | உமை |

ஆறறை யென்பது ஈங்கு வரைந்துள்ளதே. சஷ்டி வகுப்பு சோபகிருதுஞூ (கி. பி. 1903) ஐப்பசி மீ பாடப்பட்டதாகும். தங்க ஆனந்தக்களிப்பு உலக வாழ்வாயுள்ள பொன்னுக்கும் பரமவாழ்வாயுள்ள சுப்பிரமணியப் பிரமத்துக்குக்கும் பொரு ளாமாறு பாடப்பட்ட இரட்டுறமொழிதலே, 43-தங்கமும் நாற்பத்து முக்கோணத் தியங்க வுள்ளன. பொன்னுக்கும் பொருளாமாற்றிலே :—சுப்பிரமணியம் = அழகிய பிரகாசப் பிழம்பு. தெய்வத்தங்கம்=மேலான பொன். கரம்தங்கல் = கையிலே மோதிரம் முதலியனவாகத் தங்குதல். வேதத்தி லிருத்தல் = ஹிரண்ய பாஹு முதலியனவாகக் காணப்படல். நாதத்தின் மேலாதல் = ஒலிதரத்தக்க உலோகப் பொருள் களுள் ஒலி தாராது மேம்பட்டிருத்தல். அஞ்சனத் தெட் டாமை=மேம்பட்ட பொற்குவைகளைக் காத்திருக்கும் முனியின் காப்பிற் புதையலாக விருத்தல். எல்லாம் மங்கல் = பொன்னுகிய தன்னைப் போற்ரு நிலவாழ்வு கீழாதல். அளவைக் கடங்காமை = நிலமெங்கும் மண்ணோடு கலந்திருக்கு மொரு நீர்மை. உருகாமை = உருக்கலிற் கழிவு காட்டாமை. களவு=பொற்கொல்லர் இரகசியம். விழிக்கிதமாயவிர் தெய்வயானை=கண்ணுக் கினிமையாய் மிளிருந் தெய்வச் சிவிகை; பாரணம் பாரணையென ஆயவாறு யானம் யானையென ஆயதெனலாம். ஏனல்=தினைப்புனம்; இது குறிஞ்சிநிலத்தூர் சார்தலிற் குறும்பொறையெனப்படும். குறும்பொறை காடெனவும் படும். படவே "ஏனலிலோர் கொடிதான் படர்தல்" என்பது ஆலமரமல்லாத காட்டுமரம்

செடிகளினின்றிரங்கு விழுதெனுங்கொடி படர்ந்து கொண் டிருந்தலெனும் பொருள் பயக்கும். ஞானவிண்ணுதல்= அறிவுக்குறிய பொன்னுடாயிருத்தல். திருப்புகழோன் கண்ட தங்கம்=புகழுடைத் திருவணுகிய குபேரன் கண்டு கொண்ட சங்கநிதி பதுமநிதி யெனும் பொன் எனக் கோடல் வேண்டும்.

மாற்று—5-மாற்று முதல் 1008-மாற்றுவரை கொள்ளப் படு பொன்னின் மாற்றிற்கும், சீவன் சிவமாகு மாற்றிற்குங் கொள்ளக்கிடப்பது. ஏனையவை வெளிப்படை.

இப்பொருள், புதுப்பாக்கத் துறைதரு குமார பக்தர்கள் கேட்டு உவகையுறுமாறு சுவாமிகள் நாவானவின்றதேயாம் இவ்வரும் பொருள் மறைந்து போகாமே இங்ஙன மெழுதப் படுவதாயிற்று.

## உத்ருத்ராக்க கண்டிகை யணிதல்

இவ்வானந்தக் களிப்பைச் சிதம்பரத்திலே ஒரு சைவத் திருவாளர் முன் படித்துக் காட்டும்போதுதான் இறைவ னருள், அவ்வீட்டுக்குடையார் வைத்திருந்த புதிய ஒருருத்தி ராக்ஷ கண்டிகையை ஆசிரியர் கழுத்திலிடும்படி யருள் புரிந்து "இனி எஞ்சியுளதும்பாடு" என்றருளியதாகும். அவ்வாறே பாடிமுடித்த ஆசிரியர், அக்கண்டிகை யொன்று மட்டுமே அணிபவராயினர். இவ்வருட் செயல்பற்றி ஆசிரியர் நவின்றதுண்டோ எனின், உண்டென்க. என்னை? **ஸ்ரீமத் குமாரசுவாமி யத்துத்** திருவருட்செயன் ஞாபகத்தில்,

"தங்க மார்சுகக் களிப்பினை யெடுத்தே
சாற்று ஞான்றுசி தம்பரத் திடையோர்
துங்க நாரரு ணின்றிதை யணிந்தே
சொல்க வென்றுகண் மணிவட மெனக்கீ
செங்கை வேலவ"

எள்ளுராகலின். துங்கநாரர் = தூய அன்பர்; அவர் பெயர் பொன்னுச்சுவாமிப்பிள்ளை. வீட்டுக்குடையார் பெயர் சிவ சிதம்பரம்பிள்ளை.

## சித்திரகவிகளி னருமை

சித்திரத்தினுட்பல சித்திரந் தோன்ற இலங்குகின்ற கமலபந்தமெனும் விசித்திரகவி சிதம்பரத்தில் ஒன்றேகாற் கடிகையுள்ளே சித்திரமமைத்துப் பாடப்பட்டதாகும். மோனைநயமுடைக் கலிவிருத்தம் வஞ்சிவிருத்தம் வஞ்சித் துறையென நிற்கும் பிறிதுபடுபாட்டு, மாலைமாற்று, ஏகபாத மாலைமாற்று, கோமூத்திரி, நான்காரைச்சக்கரம், காதை கரப்பு என்பனவே சித்திரத்தினுட் பல சித்திரமாம். இவ்வித பந்தம் ஒரு மனுடர் மனமுயற்சியினின் றெழத்தக்கது தானோ? இதனை யெச்செயலெனக் கூறலாமென்றற் கேற்புடை விடை விவேகிகள் நாவினின்றே பிறக்கவேண்டும். வட மொழியிலேனும் தென்மொழியிலேனும் தகைமை வாய்ந்த இப்பத்துப் பிரபந்தம் போன்றவொரு புத்தகத்தைக் கண் ணுற்றுரையுங் காண்டற்குக் காதல் கூரவேண்டுமென்பதூஉம் மிகையாகாது.

## விதேகமுத்தியில் வேட்கையும் முயற்சியும் - செவ்வேளருளால் மீண்டும் சென்னை சேரல்

ஆசிரியர், தேகாதி பிரபஞ்சவுவர்ப்புருத்தல் காரண மாகச் சீவன்முத்தி தசையைக் கடக்க வெண்ணினவராய்ச் சென்னையைவிட்டுத் திருவொற்றியூரையடைந்தார் ஓரிரா. வைகறையில் அவ்வூர் வரைந்து கத்திவாக்கம் வழியாகச் சமுத்திரதீரங் குறுகி, ஆங்கோடு நீரைக் கடந்து நிலனெய்தி,

அங்கைநீரு மருந்தலின்றி நெடுந்தூர நடந்து போந்து, பொழுது அஸ்தமிக்கும் ஆமையத்திற் பழவேற்காட்டை யடைந்து, அவணுள்ள சிவாலயத்திலே தெய்வ வுருவைத் தரிசித்துத் திருக்கோயில் வலம் வந்து போந்து, ஆங்கொரு வீட்டுத் திண்ணையின் மூலையின் முக்காடிட்டுச் சாய்ந்திருந் தார். அவ்வீட்டிற்குடையார் இரவு ஏழரை நாழிகைக் குட்பட்ட காலத்தே வீடுபுக்கு வெளியெய்து'ச சாய்ந்திருப் பவர் யார் என வினவினார். இவர் அயலூரரென்றார். உடனே யொரு தீபங்கொணர்ந்து கண்ணுற்று அஞ்சலி செய்து நின்று, ''அடிகளே! இஃதெனதில்லம், என்னுடனிருந்து உணவு கொள்ள வாருங்க''ளென்று பரிவோடு மழைத்தார். இவர், ''அன்பிற் பெரியாய்! அழைப்பே பெருந்திருத்தியைப் பெரி துஞ் செய்வதாயிற்று. வாதியேல்: வருந்தேல்! நீ யுண்டு சயனித்துக் கொள்: விடிந்தாற் கவனிக்கலா''மென்றார். இம்மொழிகளைச் செவிக்கொண்ட அவரும் வீட்டினுட் செல்வாராயினர். இவர் விடிவதற்குள் அத்திண்ணையை நீங்கி ஊருக்கு அண்மைக் கண்ணதாய ஒரு பெருந் தடாகக் கரையை யெய்திப் பஞ்சசுத்தி செய்துகொண்டு தம்முடைய கடவுள் வழிபாட்டை முடித்து ஒரு புளியமரத் தடியினின்று கொண்டு ''முருகா'' என்றுரத்த சத்தமிட்டனர். ஆங்கொரு சாரார்ந்த மரச்செறிவோடுங் கூடிய காட்டினிடைத் தங் கடவுளைத் தியானித்திருந்தார். பசி வாதனையாலே அவ ணுள்ள செந்நிறக் கள்ளிப் பழங்களைப் பறித்துத் தின்றனர். அவை சிவப்பாகவே கழிந்து போதலையுங் கண்டனர். ஆயிடைப் பெயர்த்துந் தெய்வத் தியான நிட்டையி லிருந் தார். போது அஸ்தமித்தல் கண்டு தடாகத்தை யெய்திப் பஞ்சசுத்தி செய்துகொண்டு கடவுள் வழிபாடென்பதை முடித்துவிட்டு அத்தடாகப் படியொன்றிற் படுத்திருந்தார். படுத்திருத்தலை வயோதிக சைவரொருவர் கண்ணுற்றார். அவர்; அம்பர்ப் பிரதிஷ்டிக்கப் பட்டுள்ள சிவலிங்கத்தைப் பூஜிப்பவராகளின் உழுவலன்புடையராய் ''நீரெத்திறத் தவரோ! சிவனடியவராய்க் காணப்படுகிறீர்! முதிர்வ

துடையவராயு மிருக்கிறீர்: இவ்விரவிற் கடுங்காற்றும் கடும் பணியும் வீசுகின்ற இவ்விடத்திற் படுத்திருத்தல் என் மன திற்குத் துன்பம் விளைக்கின்றது! தாங்களெழ வேண்டும்: எழாவிடின் யான் இப்புடை விட்டுப் போகேன்'' என்று கூறினர். அவரன்பு மொழியெல்லாமுணர்ந்த ஸ்ரீமத்-சுவாமிகள் எழுந்திருந்து, ''ஐயா! இங்ஙனம் படுத்துக் கிடக்கவே என்மன மிசைந்துளது; நுமக்குக் கவலை வேண்டாமே'' யென்று கூறினர். அவர். ''என் வேண்டுகோளை யங்கீகரித்து என்னுடன் வாருங்கள்; இச்சத்திரத்துத் திண்ணையிற் சயனித்துக்கொண்டபின் எனதிருக்கையை யானடைதல் திருப்தியாம். அன்றெனின் அதிருப்தி யேற்படுமாகலின் என் சொல்லை யங்கீகரிப்பது கிருபைக்குக் கட''னென்று அஞ்சலித்து நின்றார். உடனே சுவாமிகள், அவருடன் போய் அத்திண்ணையை யடைந்தார். அடைதலுமவர், அச் சத்திரத்துக் கதவைத் தட்டினர். உள்ளிருந்து மூவர் வெளிவந்தனர். அவர்களை நோக்கி, ''இப்பெரியாரை யெவ்வாற்றானுங் கவனிக்கவேண்டும். உள்ளே வருமாறு செய்து கொண்மின்'' என்று கூறிவிட்டு அவரிருப்பிட மெய்தினர். அம்மூவருள் இருவர் சத்திரத்தில் வசிக்கும் அந்தனராவர். ஒருவர் தடாகத்து அக்கரையில் வசிக்கும் வைசியராவர். இன்னோர் மிகுந்த அன்பு காட்டிச் சுவாமிகளை யுள்ளே யழைத்துக் கொண்ட பின்னர்த் ''தாங்கள் உணவுட் கொண்டதுண்டா'' என வினவினர். சுவாமிகள் அது வேண்டியதின் றென்றார். எப்போது உணவு கொண்டதென அவர்கள் கேட்டனர். சுவாமிகள் பேசாதிருந்தனர். அவர்கள் வாதாடிப் பட்டினிதானென்பதை யுணர்ந்து கொண்டபின் வைசியர், ''பெரியீர்! எனதிருக்கை அடுத்திருக்கிறது. அன்னத்திற் பால் விட்டுப் பிசைந்து சிறிதளிப்பேன்: உட்கொள்ள வரல் வேண்டும்: என்னைத் தள்ளவேண்டா''மென்று பெரிதும் வேண்டி நின்றார். இவை யாவும் ஈசன் செயலென்றெண்ணினவராய சுவாமிகள், அவரது இல்லம் போந்து அவ்வுணவிற் சிறுவரையுட் கொண்ட பின்னர் அவரோடு அச்சத்திரத்தை யடைந்து அங்குப் படுத்திருந்தார். சூரியோதயமானவுடன்

வைசியரோடு பழவேற்காட்டுச்சிவாலய அர்ச்சகர் சுவாமிகள் காரியத்தைக் கலந்து பேசிப் பச்சரிசியும் பச்சைப் பயறுந் தருவித்துச் சத்திரத்திற் சமைக்கும்படி செய்து சுவாமிகட்கு உணவூட்டியபின் சாஸ்திர சம்பாஷணை நிகழ்தலை யுணர்ந் திருந்தார்கள். மேல் அவர்கள், "தாங்களிங்கேயே யிருங்கள், பணிபுரிவோ"மென்று பெரு வேண்டுதல் செய்தார்கள். அங்ஙனம், "யான்கொண்ட எண்ணம் இங்ஙனமிருக்க வொட்டாதாகலின் என்னைத் **திருப்பாலைவனஞ்** செல்லுமாறு விடுதல் நுங்கள் கடன்மை"யென்று கழறி, அவர்களை பின் ருெடர்தலை அன்பு காட்டி நிறுத்தி, நடந்து, சூரியன் அஸ்த மிக்கு ஞான்று அப்பாலை வனத்தை யடைந்து, கோயில் புக்குக் குகேசதரிசனஞ் செய்துகொண்டு எதிரிலுள்ள மண்டபக்கண் அமர்ந்திருந்தார் அடிகள். அங்கே யிவரைக் கண்ணுற்ற ஓரன்பர், "தாங்கள் சின்னுட்கட்கு முன்னரும் இங்கு வந்து போயதுண்டன்ருே. இப்பொழுது அடியே னளிக்கும் ஆவின்பாலை யுட்கொள்ளவேண்டு"மென்று பேரன் போடளித்த அப்பாலை யருந்தி ஆவயின் மாசிப்பனிமல்கிக் குளிர்மை தரலையுஞ் சகித்துத் தனித்திருந்த இவர், வைகறை நேரத்தில் அவ்விடம் விட்டுப் பொன்னேரி யென்னுமூருக்குப் போய், அதர் வழியாக ஐந்து கடிகைக்குட்பட்ட காலத்தில் அவ்வூரையடைந்து, காலைப் பூசையை முடித்துக்கொண்டு தெற்கு நோக்கி நடந்து, பகற்பன் மூன்று நாழிகையா மமையம் **ஆண்டார்குப்ப** மென்னுங் கேத்திரமடைந்தார். அடைதலுங் குமாராலயத்தைக் கண்ணுற்றுக் கைகூப்பி நின்ருர். திருக்கதவஞ் சார்த்தப்பட்டிருந்தமையின் திருக் கோயிலைப் பிரதக்ஷிணஞ் செய்துகொண்டு மீண்டு, ஆண்டுள்ள ஒரு சத்திரத்துட்புக்கு ஒரு மூலையில் மனமொருங்கி நிற்குந் தியான யோகத்தமர்ந்திருந்தார். பொழுது அஸ்தமிக்கு மமையம் அந்நிலை நீங்கி மாலைக் கடன் முடிந்து அவ்வால யத்தை நோக்கினர். அஞ்ஞான்றுங் கபாடபந்தன நீங்கா மையின் என் செய்வலெனத் திரும்பி வருபவராயினர். இப்படி யிருமுறையும் இவர் வந்து போதலை நோக்கிய ஓரந்தணப் புண்ணியவதி, அருச்சக புத்திரரான சிறுவரை விளித்து நீ

அவரைக் கூட்டிக்கொண்டு ஆலயஞ்சென்று அவர் தரிசிக்கு மாறு செய்க என்றலும் அச்சிறுவர், அவ்வாறே செய்து திருஅபிடேகத்தினிடையே திருநீறுமளித்தனர். அதனைப் பிரமப்பிள்ளையே கொடுக்கின்றதென இரண்டு கரமுமேந்திப் பெற்று உடம்பிலே திமிர்ந்து மகிழ்ந்து வணங்கி, "அடியேனைக் காத்தருள் களைகண்ணே! கருணை நிதியே! என் கடவுளே! அடிமை தேகவியோகம் எஞ்ஞான்று? யாண்டு? வருந்துகின்றேனே" யென்று வீழ்ந்து வணங்கி யெழுந்து அச்சத்திரவாயிலை யடைந்தனர். அஞ்ஞான்று இரவு மூன்று கடிகையென்னலாம். சத்திரக்கதவு தாளிட்டிருந்தமையின் இவர் வெளியிலேயே நிற்க நேர்ந்தது. அப்போது வீதி வழியே போம் அக்கிராமாதிகாரி, "நிற்குநர் யார்?" என்றனர். இவரொன்றுங் கூறினரல்லர். அவரொரு தீபங் கொடுவரச் செய்து இவரை நோக்கிக் கைகூப்பி நின்று "ஐயா! நீர் யாவர்? அயலூரென்னிற் பாம்பன் சுவாமிக ளென்கிறார்களே அவரோ?" எனக்கடாவுங் கடாவுக்குப் புன்னகை புரிந்து, "நீயிர் யாவர்?" என்றிவர் கேட்டமை யின் அவர் அவரேயென நிச்சயித்து வந்தித்து, உழுவல் பிறங்க அழைத்துச் சென்று, அன்னமும் பாலும் பொருந்த இனிது பிசைந்திலைக் கலத்திட்டு உண்ணும்படி செய்து சம்பாஷித்து இனிது மகிழ்ந்தார்.

மேன் மிழற்றியபடி கள்ளிப்பழ முண்டதும், பின்னை நிகழ்ந்தனவும் அறிந்துகொளற்குக் **குமரவேள் பதிற்றுப்பத்தந் தாதியில்**—

> "கொள்ளச் சயிலா கள்ளிப் பழமுங்
> கொண்டேன் பசித்தோர் நாள்"

எனவும், **ஸ்ரீமத் - குமாரசுவாமியத்தில்** இடையறுது நிற்க விழைதலில்—

[3] "யாக்கை யேபனிப் பென்று சென்னைவிட்
டெறுழொ டேகியொல் குறுமொர் கானிலுன்
நோக்கி ஞளிரண் டொன்று காறுழு
ணுகர்வில் வெப்புமோர் நிகழொர் குப்பமே
பார்க்க வுற்றபோ தூணில் புன்கணும்
படிய வேவனை கடவு ளேயெனைக்
காக்க வென்னெடும் போத ருந்தனிக்
களைக ணேயிநா ளுளைவ தேதரோ"

எனவும் சுவாமிகள் கூறிய வாய்மைகளு முள்ளனவே. ஒல்குறு மோர்கான் = பழவேற்காடு. ஒல்குறல் சாம்ப லெனப்படுதலிற் பழமையென்னும் பொருண்மைத்து. ஓர் குப்பம் = ஆண்டார் குப்பம். கிராமாதிகாரி பெயர் நாகரத்தின முதலியாரென்ப. அவர், சத்திரத்துத் திண்ணையி லிரா நின்ற சுவாமிகளை விடிந்தவுடன் "பொன்னேரி போக லாம் வாருங்க" ளென்றழைத்தார். அதற்குடன்பட்ட சுவாமிகள், ஆண்டார் குப்பத்துக் குமாரபகவானைச் சிந்தித்து நின்று விடைபெறக் கடவேனென்று விடைபெற்றவராகி அவரோடு பொன்னேரியை யடைந்தனர். அவர், திருவொற்றியூர் மகிழடி சேவையைத் தரிசிக்கலாமேயென்று புகைபண்டியி லிவரையேற்றித் தாமுமுடனிருந்து கொள்பவ ரானூர். மேலுமவர், திருவொற்றியூரில் அடிகளிறங்கினமை கருதி, யான் சென்னை சென்று வருவலென்றோதி அப்பண்டியி லிருந்தவாறே சென்று, ஆங்குச் சில நண்பினர்க்கு நிகழ்ந்த வாறெல்லாம் அறிவிக்கும் ஓரருளாளரானூர். சுவாமிகள் திருக்கோயிலடைந்து சிவகுமார தரிசனஞ் செய்துவிட்டு இராப்போ தொழிந்தவுடன் அப்பர் சுவாமிகள் மடத்து வெளித்திண்ணை மூலையிலமர்ந்து, தெய்வ சிந்தனையிற் சித்தத் தைச் செலுத்தியிருந்தார். பகற்பதினைந்து நாழிகை யாகு ஞான்று ஓரந்தண மாதுமணி, ஒரு பாத்திரத்தின்கட் பாலும் பக்கலிற் பழமும் வைத்து நிற்றலைக் கண்விழித்துக் கண்டு, இம்மாது இம்மடத்திலிருக்கும் புண்ணியரூபியேயென

லுணர்ந்து, பரிவை மெச்சி, அவற்றை யுண்ணுமளவா யுண்ட பின்றை விழிமூடித் தியான நிட்டையிலிருந்தார். மாலைப் போதாதலும் அந்நிலை நீங்கி ஆலயம்புக்குப் பரமதரிசனஞ் செய்து வெளிவருஞான்று சென்னைக்கண்ணிருந்து வந்த அன்பர்கள் பார்த்துப் பாதப்போது வணங்கிச் சென்னையை யடையத் திருவுளஞ் செய்ய வேண்டுமென்றனர். மகிழடி சேவையானபின் வருவலென்றும், வரினும் ஆண்டுத் தனித் திருப்பவ னுவேனென்றுஞ் சாற்றி, அச்சேவையின்மீது சென்னைமா நகரையடைந்தார். வைத்தியநாத முதலியார் தெருவின் 35 வது இல்லத்து மேல்வீட்டிலே தனித்திருந்து சிவநிட்டை செய்குநராயினர்.

## முத்தகுமாரர் மரணம்

இந்நிட்டை நிகழ்ந்துவரு நாளில் தம்முடைய மூத்த குமாரர் முருகைய பிள்ளை மரணமாயின ரென்பதை நிஷ்டை வாயிலாகவே அறிந்த இவர், உடனே தம்மனங் கவன்று அசைதலால் அந்நள்ளிரவில் வெளியே வந்து ஒரு குறுஞ்சுவர் மீது வலக்கையைப் போட்டுக்கொண்டு அதன்கட் சாய்ந்தபடி யாக நின்றனர். மனத்தை நோக்கி "நினக்கு யாது கவலை? அவன் வந்த காரியந்தீர்ந்து சென்றுவிட்டனன். நீ இறைவனை நாடியிருக்க வருதி" என்று அதனைத் தேற்றிக் கொண்டு உட்புகுந்து முன்போல நிட்டையிலமர்ந்திருந்தனர். மறுநா ளிரவு ஐந்துநாழிகை யாதலும் அவ்வீட்டிற் குடையராய் பாலசுப்பிரமணிய முதலியார் **B.A.**, அவர்கள் மேல்வீட்டிற் போந்து, தீபமின்மையால் வெளியி னின்றுகொண்டே "சுவாமி! சுவாமி!!" என உரத்த சத்தமிட்டனர். இவர், "யார்?" என்று வினவினர். "யான் பாலசுப்பிரமணியன்; ஒரு தந்தி செய்தி வந்திருக்கிறது; படித்துப்பார்க்க வரல் வேண்டும்" என அன்னர் கூறலும், இவர் வெளிவந்து "மகன் இறந்த செய்தியே; படித்துப்பார்" என்றார்.

பந்திப்பை யுடைத்துப் பார்த்து "அவ்விதச் செய்தியே; பாம்பனிலிருந்து வந்துளது" என அம் முதலியார் கூறினர். அதுகேட்ட பலரும் வியசனித்தார்கள். தந்தி யனுப்பிக் கொண்ட சீடருக்குச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்க வென்பதைக் கடிதமூல மறிவித்துவிட்டு முன்போலக் கடவு ளுட்டத்தமர்ந்திருந்தார் சுவாமிகள். சில வருடங்கள் சென்று இளைய குமாரர் குமரகுருதாச பிள்ளை மரணச்செய்தி யையுஞ் சென்னையிற் றெரிந்தே யிருப்பவராயினர் இவரென்க.

## குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி பாடல்

நிட்டை ஏழு திங்கள்காறும் நிகழ்ந்ததென்ன வேண்டும். அது நிகழ்ஞான்றே **குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி**யாய (100) நூறு செய்யுளும் பத்து வகை ஆசிரிய விருத்தங்களால் ஆசிரியராற் பாடப்பட்டனவாம். கல்லும் உருகுமாறு கரைந்து கரைந்து பாடப்பட்டதாயுள்ள இதனை நோக்க, ஆசிரியர் தங்கண்ணீர் வடியவடியக் கலுழ்ந்து நின்று பாடியுளதென்பது வெள்ளிடைமலையென வேற்படுகின்றது. என்னை? ஒல்லும் உவமானச் சுவையோடு உவகைச் சுவையும் ஓசைச்சுவையும் அளாய அருண் மணங்கமழ் சரணாரவிந்த சண்முகசிவ பக்திரச பௌவமாய்ப் பரமசுவானுபவப் பிழம்பாய்ப் பிறங்குகின்ற தாகலின், இதனைப் படிப்பவர் தண்ணெனக் குளிர் கண்ணீர் பிலிற்றிக் கடவுள் வழிபாட்டைக் கருதாது புறம்போதற்கு மிடனுண்டோ? கி. பி. 1905-ல் இவ்வந்தாதி அச்சிடப்படுவ தாயிற்று.

## சேந்தன் செந்தமிழ்

மேல், அமைதியைம்ப தென்னுஞ் **சேந்தன் செந்தமிழை** ஆசிரியர் பாடினரென்க. சேந்தன் = செவ்வேட்பரமன்.

வடசொற்புகாது பாடப்பட்ட தமிழ் நூலொன்றுமின்றென்னுமொரு குறைவை இஃதொழிக்கத் தோன்றியதாம். பின்னே காட்டப்படு **புலன்வனப்பால்** இஃதினிது புலனும். செவ்வேண் மார்க்கஞான தீவிர தர போதகப் பொருண்மைத்தாம்.

## சிறுநூற்றிரட்டு

ஸ்ரீமத் - சுவாமிகள் செப்பியருளிய ஞானவாக்கியம், கந்தகோட்ட மும்மணிக்கோவை, வடதிருமுல்லை வாயிற் குகபரர் வண்ணம், நவவீரர் நவரத்தினக் கலிவிருத்த மென்பனவுஞ் சேர்ந்த **சிறுநூற்றிரட்டு** கி.பி. 1905-ல் அச்சிடப்பட்டதாகும். போந்த அமைதியைம்ப தென்னுஞ் சேந்தன் செந்தமிழ் கி. பி. 1906-ல் அச்சிடப்பட்டதாகும். அம் மும்மணிக்கோவை வண்ணக்களஞ்சியம், காஞ்சி - நாகலிங்க முதலியார் வேண்டுகோளின்படி அருளிச் செய்யப்பட்டது. அவ்வண்ணம் வண்ணச்சந்தவளமெலா முணர்ந்தவரும், சென்னையில் வசித்த தமிழ்ப்பண்டிதருமான க. வ. திருவேங்கட நாயுடு வெனும் பெயரிய சிவநேசச் செல்வரது வேண்டுகோளங்கீகரித்துத் 'தைய, தனன, தத்த, தந்தத்த, தானன, தன்னதந்த, தந்ததான, தான, தனஞ, தன தன, தானஞ, தன்ஞன' என்னுஞ் சந்தங்களுற அருளிச்செய்யப்பட்டது.

## பின்னத்தூரில் நீட்டை கூடல்--
## 'நாலாயிரப் பிரபந்த விசாரம்' எழுத நேர்ந்தமை

மேல், சென்னைமா நகரைவிட்டுச் சிதம்பர மகா க்ஷேத்திரத்தை யண்ணிய ஆசிரியர், இக்க்ஷேத்திர எல்லைப் பாட்டிலே கீழ்த்திசையிலே மாணிக்கவாசக சுவாமிகள்

ஊமைப்பெண்ணைப் பேசும்படி செய்தருளியது ஈதெனத் தெரிந்துகொண்ட தலமாயுள்ள பின்னத்தூரை யடைந்து சிவநிட்டை சாதிப்பான் ஆங்கெழுந்தருளினர். அஞ்ஞான்று அவ்வூறிற் கிலமாய சிவாலயத்தைக் கட்டி முடிக்கும் முதன்மை பெறீஇயுள்ள வ. இரத்தினசாமிப் பிள்ளையெனுஞ் சிவநேயச் செல்வர் ஆசிரியரைத் தரிசித்து நின்று, "இவ்வூர் வாசிகளான சில வைணவர்கள் எம்மரபினரான சைவர்களுட் சிலர்க்கும் வேறு சிலர்க்குஞ் சிவபெருமானையுஞ் சிவனடியார் களையுஞ் சிவசின்னங்களையும் சிவாலயத்தையும் நாளடைவில் இழித்துக் கூறுமாற்றானே தஞ்சமயமே சிறந்ததெனப் போதித்து அவர்களை வைணவ மதத்துட்படுத்தி வருகின்றார் கள். அவ்விடயத்திற்கு ஆழ்வார் பாடலாகிய நாலாயிரப் பிரபந்தத்தையும் வைணவருண்டுசெய்த அன்னவர் சரித்திரம் முதலிய புத்தகங்களையுமே ஆதரவாகக் கொண்டுளா" ரென்றியம்புதல் கணித்த ஆசிரியர், உரிய நியாயங்களைப் போதித்து வரலாயினர். வரும்போது அவ்வூர் வைணவருட் சிலரும் வேற்றூர் வைணவருட் சிலரும் கி. பி. 1904-ஆம்ஞூ டிசம்பர்மீ 23உ முதல் மும்முறை கலாய்த்து வாதிக்கத் துணிந்தனர். அஞ்ஞான்று இரத்தினசாமிப் பிள்ளை, வெற்றி தோல்வி விஷயமாக யாதோருடன்படிக்கை யெழுதி ரிஜிஸ்தர் செய்து கொண்டுதான் வாதத்திற் பிரவேசிக்க வேண்டு மென்று அதற்குரிய இலிகித மொன்றெழுதி அவ்வாதிகட்குக் காட்டினார். அதனைப் படித்துப்பார்த்த அன்னவர் யாது கருதியோ இவ்விஷயத்தில் எங்களுக்கு வாதமில்லையென்று கூறி வாளாவிருந்து விட்டனர். அந்த இலிகிதம்—

"....................ரூபாய் முத்திரைக் காகிதம்.
....................ம், ....................ம் செய்து கொண்ட
உடன்படிக்கை

"சைவர்"கள் தங்கள் அவயவங்களிற் பஸ்மங் கொண்டு தரித்து வருகிற ☰ இவ்வித புண்டரம் வேதத்திலுண்டென்பதை அந்த வேதவாயிலாகச்

சைவருளொருவனுகிய நான் ஒப்புவிக்கத் தவறினுல், அவ்வித புண்டரத்தை நானும் இவ்வாதத்திற்கு ஏற் படுஞ் சபையில் வாதிக்க நிற்பவர்களும் மறுபடியும் அணியாமல் இழந்துவிடக் கடவோமாக. வைணவர் வணங்குந் தெய்வத்திற்குப் பதினன்கு வித்தையிற் சேர்ந்த வேதம் முதலிய நூல்களிற் பஸ்மதாரண முண்டென்று காட்டும்படி செய்வேனுக. சிவம், பிரம விஷ்ணு ருத்ரர்களின் மேம்பட்ட "சதுர்த்தம்" அதாவது நான்காவது தெய்வமென்று வேதத்திற் பல வாக்கியங்களெடுத்துக்காட்டி அந்தச் சிவத்திற் குப் பரத்துவம் ஸ்தாபிக்கும்படி செய்வேனுக.

"வைணவர்கள்" தங்கள் அவயவங்களில் வெள்ளை மண்ணும் மஞ்சட் பொடியுங் கொண்டு தரித்துவருகிற இவ்வித புண்டரம் வேதத்தி லுண்டென் பதை அந்த வேதவாயிலாக வைணவரு ளொருவனுகிய நான் ஒப்பு விக்கத் தவறினுல் அவ்வித புண்டரத்தை நானும் இவ்வாதத்திற் கேற்படுஞ் சபையில் வாதிக்க நிற்ப வர்களும் மறுபடியும் அணியாமல் இழந்துவிடக் கடவோமாக. சைவர்கள் வணங்குஞ் சிவனுக்கு பேற்படி வேதம் முதலிய வித்தைகளில் இங்குக் காட்டிய ஊர்த்துவ புண்டரதாரண முண்டென்று காட்டும்படி செய்வேனுக. விஷ்ணு, பிரம விஷ்ணு ருத்ரர்களில் மேம்பட்ட "சதுர்த்தம்" அதாவது நான்காவது தெய்வமென்று வேதத்திற் பலவாக்கி யங்களெடுத்துக் காட்டி விஷ்ணுவுக்குப் பரத்துவம் ஸ்தாபிக்கும்படி செய்வேனுக. இவ்வித ஏற்பாட்டில் யார் தவறினுலும் (நிபந்தனை.....................——) இவ் விஷய வாதத்திற்குச் சிதம்பர க்ஷேத்திரத்திலாவது சென்னையிலாவது நிகழும் குரோதிஞு தைமீ........உ கூட்டப்படுஞ் சபைக்கு இருதிறத்துக்குமுரிய வட மொழி தென்மொழி வித்துவான்களை ஆஜர்செய்து

கொள்ள எவ்வித காரணத்தால் யார் தவறினாலும் அவர், ஆஜரான வித்துவான்களில் அக்கிராசனாதிபதியாயிருக்கு மொருவர் தீர்மானப்படி நடக்க வேண்டும். நடவாவிடின், அங்ஙனமே நம்மில் அநுகூல தீர்மானம் பெற்றவர்க்கு அவ்வித தீர்மானம் பெறாதவர் நூறு ரூபாய் உடனே செலுத்தி இரசீது பெற்றுக்கொள்ளவேண்டும்.

30-12-04. { சைவரு ளொருவனாகிய.... ...... ........... / வைணவரு ளொருவனாகிய.... ..... . .... ........

பின்னத்தூர் விசுவாவசுஹூ புரட்டாசிமீ 11உ { பி. வ. இரத்தினசாமிப் பிள்ளை''

என்னும் இதுவே. அப்பிள்ளை, ''அந்நாலாயிரப் பிரபந்தத்தே சிவபரமாக வமைந்துள்ள தருமங்களையும், அவை பற்றி யெழுஞ் சங்கை நிவர்த்தி வாயிலாக நிறுவுஞ் சைவஸ்தாபனங்களையும் போதிக்கும் வழியே ஒரு நூல் வசன வடிவிற் சுருங்கவமைத்தருளினால் என்போன்ற சைவர்கட்கும் ஏனையோர்க்கும் பேருபகாரமா யிருக்கு''மென்ற வேண்டுகோள் இனிதாமென அங்கீகரித்த சுவாமிகள், அப்பிரபந்தத்திலாய்ந் தெடுத்தவற்றை எட்டதிகாரமாக வைத்து உறுதிப் படுத்துதலின் **நாலாயிரப்பிரபந்த விசார**மென்னு நூலை யியற்றியருளினர். இவ்விவரமெல்லாம் அவ்விசாரப் பதிப்புரை முகவுரை யென்பவற்றின் கண் அறியலாம். அந் நாலாயிரப் பிரபந்த விசாரம் கி. பி. 1905-ஆம் வருஷத்தில் அச்சிடப்படுவதாயிற்று.

## பின்னத்தூரின் பண்டைப் பெருமை விளக்கம்

மேலே உடன்படிக்கையிற் குறிப்பிட்டலாய குரோதி வருஷத்துத் தைமாசத்திற்குப் பிறகு அவ்விரத்தினசாமிப் பிள்ளை, சுவாமிகள் சொல்லும் வண்ணம் இத்தலம் ஊமைப்

பெண்ணைப் பேசும்படி செய்ததுதானே வென்பதை நன்கறியும் பொருட்டுத் திருமலைராயன் பட்டணத்தை யடைந்து (குரோதிஸு மாசிமீ 9உ சோமவாரத்திலே) தெய்வத்தை வினவிச் சொல்கின்ற அரங்கசாமிப் பிள்ளை யவர்களைக் கண்ணுற்று, யாதுங்கூறுதிருந்து கொண்டே எனக்குத் தெரிவிக்க வேண்டுவதைத் தெரிவிக்க வேண்டுமென்று தெரிவித்துக்கொண்டனர். உடனே அச்சோதிடர், அடியிற் கண்டபடி ஒரு காகிதத் துண்டிலெழுதிப் பிள்ளைக்கு நல்கினர். அக்காகிதம்—

> ''உ. இரத்தினசாமி. ஆலய சிந்தை. சீரணஸ் தலம். புதுத் திருப்பணி. குளம் வடக்கில் விக்கிரகப் புதையல். பின் அகப்படும். திருவாதவூரார் ஈழ தேசப் பெண்ணைப் பேசுவித்த மகாத்மியம். பின்னஞ் செய்ததாற் பின்னத்தூர் என வழங்கல்.''

என வரையப்பட்டுளதே. இதனுல் சுவாமிகளது திருவாக்கைப் பிள்ளை முதலினேர் பெரிதும் மதித்து மகிழ்ந்தார்கள்.

## சைவ சமய சரபம் வெளிவந்த காரணம்

இதற்குப்பின் வியவகார விளைவு கருதிய ஒரு சைவர் **சிவபாதத்துவப் பிரபல சாஸ்திரப் பிரகடன** மென ,வொரு பத்திரிகையை வெளியிட்டதற்கு மறுப்புப் போலக் கூறிக்கொள்வதாய், பெருந் துர்ப்பாஷைகள் நிறைக்கப்பட்டதாய், 1-9-06 என்னுங்கால மிடப்பட்டதாய், அச்சுக் கூடத்துப் பெயர் முதலியன இல்லாததாய், வாயீர்வாளெனப் படுவதாய் வெளியிட்டவொரு சிறு புத்தகத்தின் இறுதிக்கண், நும் பெயரிட்டு,

> ''பத்திரிகை முதலியவைகளை யினிப்ரசுரித்தால் அதுகளுக்கு மாத்ரம் யாமும் எம்மவருங் கணிசமான மறுப்பிட்டு வாய் மாளப் பண்ணுவோம்''

என்னுஞ் சொற்களை யெழுதியவிடத்தே சுவாமிகள் பெயரையு மேய்த்து அவரை யெழுதும்படி அவ்வைணவர் தூண்டி நின்றமையாற் சுவாமிகள், ஆலோசித்து அவர் செய்கை யடங்குமாறுகவும், சைவ தூஷண பரிகாரமாகவும், சைவ தருமமாகவும் **சைவ சமய சரபம்** என்னுமொரு நூலை 65 அத்தியாயங்களால் இயற்றியருளினர். இதன் முன்னுரை யிலே "தம்மாசிரிய ராற்றலுக் கேற்ப வரையலுற்ற அது நியாயமே யெனப் புகறல் இஞ்ஞான்று வெளிப்பட்டதனுல்" எனவருதலும் **அவ்வாயீர்வா** ளென்பதைக் குறித்து நிற்பதா யிற்று. இச்**சரபமும் அவ்வாயீர்வா** ளென்பதும் கோர்ட்டு வழக்கில் எக்சிபிட்டுகளாகிப் பெறப்பட்டனவாயுள்ளன. **சரபம்** கி.பி. 1908-ஆம் வருஷத்தில் அச்சிடப்படுவதாயிற்று.

## சில வைணவர்மீது வழக்குத் தொடரல்

இது கண்ணுற்ற வைணவர்கள், அவர்கள் இலிங்கப்படி கண்டனமொன்று மெழுதாமலும், மேலே போந்த உடன் படிக்கை வழிநின்று நியாயம் பெறுதலு மிருந்துகொண்டு, சிதம்பரத்திலும் பின்னத்தூரிலுஞ் சைவ தூஷணப் பிரசங் கங்களும் பலநிறத் துண்டுப் பத்திரிகைகளும் வெளியிட்ட போது சைவர்கள் நியாயவாயிலாகவே வெளியிட்ட அறிவிப் பொன்று வெளிப் போந்தவுடன், சிவநிந்தை, சிவசக்தி நிந்தை, சிவனடியார் நிந்தை, சிவசாஸ்திர நிந்தை யென்பன வற்றையும், எவரும் அருவருக்கத்தக்க ஆபாசக் கீழுரைகளை யும் பரப்பிக்கொண்டு உலாவித் திரியும்படியான பெரும் பத்ரிகை யொன்று அச்சிடப்பட்டு வெளிவந்தது. அதனடிப் புடை 1908-ஆம் வருஷம் செப்டெம்பர் மீ 28௳ எனுங்காலமுங் குறிப்பிடப்படுவதாயிற்று. இதனைக் கண்ணுற்ற ஸ்ரீமத்- சுவாமிகள், இனி யாவதென்னை! நியாயத்தலத்தில் நியாயம் பெறுவதே கடன்மை யென்றெண்ணி அதனை யச்சிட்ட இராமாநுஜ ரெட்டியார், பிளீடர் - திருவேங்கட முதலியார்

முதலிய ஏழு பெயர்கள் மீது தென்னாற்காடு ஜில்லா மாஜிஸ்திரேட் கனம் (Knapp) நாப் அவர்கள் முன்னிலையில் நவம்பர்மீ 7உ பிரியாது செய்து கொண்டார். சோதனை வாரண்டுகள்மூல மெடுக்கப்பட்ட அவ்வச்சுப் பத்திரிகைக் கட்டு முதலிய சாமான்களோடு மேற்படி பிரியாது திருக்கோவலூர் முதலாவது வகுப்பு சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டு விசாரணைக்கு அனுப்பப்பட்டது. அக்கோர்ட்டு 1908-ஆம் வருஷத்து C. C. No. 112-ல் இவ்வழக்குப் பதிவாயிற்று.

## எதிர் வழக்குகள் எழல்

அக்கோர்ட்டாராகிய கனம் P. குன்சாயன் சாகேப் பகதூர் அவர்கள், பல மாசங்களாக இருபக்கத்துச் சாக்ஷிகளையும் விசாரித்து வருஞான்று, சைவ சமய சரபமெனும் புத்தகத்திலே தமக்கும் மற்ற வைணவர்களுக்கும் மதசம்பந்தமான அவதூறுகளிருக்கின்றன வென்று 50, 60- வகையான விஷயங்களை யெடுத்துப் பிரத்தியேகமாக இங்கிலிஷில் மொழிபெயர்த்துக் கொடுத்து ஸ்ரீமத் - சுவாமிகளவர்கள், திருவனந்தபுரம்-ந. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், சிதம்பரம்-சப்ரிஜிஸ்டரார் சிவஞான முதலியாரவர்கள் ஆகிய இம்மூவர் மீது ஒரு வழக்கும், மேற்படி புத்தக விஷயமாய் இ.பி. கோடு 153-வது பிரிவு என்னுங் குற்றத்துக்குப் பிரியாது செய்து கொள்ள சாங்கிஷன் கொடுக்கவேண்டுமென்று கனந்தங்கிய சென்னைக் கவர்ண்மென்டாரவர்கள் ஆபீசில் ஒரு மனுவும் போந்த 112-வது நம்பர் வழக்கில் 7-ஆம் எதிரியாகிய இராமாநுஜ தாஸரென்பாராற் கொண்டு வரப்பட்டன. வழக்கு 1903-ஆம்ஸ் டிசம்பர்மீ 15உ கொண்டு வந்ததாயுள்ளது. இவையேயுமன்றி 1909-ஆம்ஸ் சூன்மீ 11உயில் அந்த 112-வது நம்பர் வழக்கில் 6-ஆம் எதிரியாகிய ச. பு. குருசாமிநாயுடெனபாரால் சிதம்பரம்-முத்துக்கிருஷ்ண ஐயர் முதலிய24-பெயர்கண்மீது ஒரு அவதூறு வழக்குஞ் சைவர்கள்

வெளியிட்ட பத்திரிகை விஷயமாய்க் கொண்டு வரப்பட்டது. இதன்கண் ஸ்ரீமத்-சுவாமிகளும் ஒரெதிரியாகவே சேர்க்கப் பட்டிருந்தார்கள். இவ்வழக்குகள் அந்த 112-வது நம்பர் வழக்கு முடிவான பின்னேதான் விசாரணைக் கெடுத்துக் கொள்ளப்படுமென்னும் அதிகாரத் தலைவர் அபிப்பிராயப்படி சும்மா கிடந்துவிட்டன.

## வழக்கில் சுவாமிகட்கு வெற்றி

கிளர்ந்து போந்த சாகேப் பகதூரவர்கள், கி.பி. 1909-ஆம் வருஷம் அக்டோபர்மீ 4௳ வைணவராயுள்ள 'ஏழு எதிரி களுக்கும் அபராதம் ரூபாய் 950-ம் செலவும் விதித்தார்கள். இந்த அபராத விவரம் 1909-ஆம்ஷு அக்டோபர் மீ 22௳ பிரசுரமான **நாகை நீலலோசனி** யெனும் வர்த்தமான பத்திரி கையில் 'மத தூஷணைக்குத் தண்டனை'யெனக் குறிப்பிட்ட இடத்தில்—

"நமது முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை யும், சிவனடியார்களையும், சிதம்பரத்தில் சதா தூடணஞ் செய்துவந்த அடியிற்கண்ட வைணவர்க ளின்பேரில் பாம்பன் ஸ்ரீமத்குமாரகுருதாசசுவாமிகள் எடுத்த வழக்கின்முடிபு. 1909-ஷு அக்டோபர்மீ 4௳ திங்கட்கிழமை பகல் 12-மணிக்குத் திருக்கோவலூ ரில் மாஜிஸ்திரேட்டார் செய்த தீர்ப்பு. சிவநிந்தை அடியார் நிந்தையடங்கிய பத்திரத்தை அச்சிடுவித்த சிதம்பரத்து அச்சாபீசருக்கு அபராதம் ரூபாய் 200, சிவநிந்தை அடியார் நிந்தை செய்தவர்களில் மகா-ா-ா-ஸ்ரீ வக்கீல் திருவேங்கட முதலியாருக்கு ரூபாய் 150, குநசாமி நாயுடுக்கு ரூபாய் 150, இராமாநுஜ தாஸருக்கு 150, கேசவ பிள்ளைக்கு 100, வாசுதேவ பிள்ளைக்கு 100, பார்த்தசாரதி

பிள்ளைக்கு 100, ஆக ரூபாய் 950. இவர்கள் ஷ தொகையை ஷ மாதம்13உ க்குள்ளாகக் கட்டத் தவறின் காவலில் வைக்கப்படுவார்களாம்''

என விளக்கினமை பலருமறிந்த செய்கையே. இத்தீர்மானத்தின் மேல் கனந்தங்கிய தென்னாற்காடு டிஸ்ட்ரிக்ட் செஷன்ஸ் கோர்ட்டார் முன்பாக எல்லா எதிரிகளும் அப்பீல் செய்து கொண்டார்கள். அவர்களுள் கேசவ பிள்ளை அபராதம் ரூபாய் 100-ம், வாசுதேவ பிள்ளை அபராதம் ரூபாய் 100-ம் ருஜுப்போதாதென்ற விதமான அபிப்பிராயத்தினல் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்றும், மற்றையெதிரிகளுக்கு விதிக்கப்பட்ட அபராதங்களை உறுதிப்படுத்துகிறேனென்றும் அவ்வப்பீல் கோர்ட்டார் தீர்மானித்தார்கள். விசாரணை காலத்திற் சுவாமிகளேனும் சுவாமிகள் வக்கீலேனும் கோர்ட்டில் இல்லாதிருந்தும் இத்தீர்மானம் பிறப்பதாயிற்று.

கூறிப்போந்த இராமாநுஜ தாஸர் வாதியாகக் கொடுவந்த வழக்குகளுள் ஒன்று சாங்கிஷன் பெறத்தக்கது அல்லவென்பதாகக் கவர்ண்மென்றாரால் தள்ளிவிடப்பட்டது. இதனைக் காட்டக்கூடிய கவர்ண்மென்று ஆர்டர் ஒன்று சுவாமிகள் பெற்றிருக்கிறார்கள். மற்றொரு வழக்கு, திருக்கோவலூர் சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டு 1909-ஆம் வருஷத்து C.C. No. 5-ற் பதிவாகி வாதி விசாரிக்கப்பட்ட பின்னரே 6-12-1909-ற் கோர்ட்டாராலே தள்ளிவிடப்பட்டது.

கூறிப்போந்த குருசாமி நாயுடென்பார் வாதியாக 24-பெயர் கண்மீது கொடுவந்த வழக்கு, சிதம்பரம் சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டு 1910-ம் வருஷத்து C. C. No. 72-ற் பதிவாயிற்று. இவ்வமையம் இக்கோர்ட்டுக்கு மாற்றப்பட்டு வந்த டிப்டி மாஜிஸ்திரேட்டு பல்லோருள்ளும் கனம்: இராக

வாசாரியாரவர்களே இரு பக்கத்துச் சாக்ஷிகளேயும் விசாரணை செய்து தமக்கு முன்னிருந்த மாஜிஸ்திரேட்டாலும் தம்மாலும் இவர்கண்மீது யாதொரு ருஜுவு மேற்படவில்லையென்று விடுதலை செய்யப்பட்ட 13-பெயர்கள் நீங்கலாக ஏனைப் 11-பெயர்கண் மீதே வழக்கை வைத்துக்கொண்டு வாதி பக்கத்துக்கு வக்கீலாக நின்ற சென்னை ஹைகோர்ட்டு வக்கீல் நரசிம்ம ஆசாரியவர்களும் எதிரிகள் பக்கத்துக்கு வக்கீலாக நின்ற ஹைகோர்ட்டு வக்கீல் V. விசுவநாத சாஸ்திரியாரவர்களும் பேசிய ஆர்க்கியுமென்றுகளையும் லாரிப்போர்ட்டுகளேயுங் கேட்ட பின்பு எதிரிகள் குற்றமுடையாரல்லர்; அவர்கள் செய்தது நியாயமென்பதாக 1911-ஆம்ஹு அக்டோபர்மீ 31உ மஞ்சக்குப்பத்தில் வாதி வழக்கைத்தள்ளி விட்டார்கள். அந்தப் 11-எதிரிகள் பெயர்கள்—

1. சிதம்பரம் - முத்துக்கிருஷ்ண ஐயர்,
2. ஐயாக்கண்ணு ஓதுவார்,
3. திருவாதிரை மடம் டிரஸ்டி சதாசிவம் பிள்ளே,
4. வக்கீல் குமாஸ்தா இராமாநுஜம்,
5. பின்னத்தூர் - இரத்தினசாமிப் பிள்ளே,
6. ஜகந்நாத பிள்ளே,
7. சங்கரப் பிள்ளே,
8. கனகசபைப் பிள்ளே,
9. குமாரஸ்வாமிப் படையாச்சி,
10. பாம்பன் - குமரகுருதாச சுவாமிகள்,
11. சண்முகவிலாசம் பிரஸ் சதாசிவம் பிள்ளே,

என்பனவே. மாஜிஸ்திரேட் கனம்: C. R. இராகவாசாரியாரவர்கள் வைஷ்ணவ மதஸ்தராயிருந்தும் நியாய நெறிநின்று நியாயங் கொடுத்தமை பெரும் புகழ்மைக்குரியதே. இத் தீர்மானம் இங்கிலிஷிலே பல பக்கங்களேக்கொண்ட பெரிதாயிருத்தலின் இதனையும், போந்த 112-வது நம்பர் தீர்மானத்தையும், அப்பீல் முடிபுகளேயும், போந்த 5-வது நம்பர் வழக்கின் தீர்ப்பையும் இங்கு வெளியிட இடமில்லை. இவ் வழக்கு

களின் நிகழ்ச்சி கூடலூர் மஞ்சக்குப்பம், திருவண்ணுமலை திருக்கோவலூர், கள்ளக்குறிச்சி, உழுந்தூர்ப்பேட்டை, சோமாசி பாளையம், திருவெண்ணெய் நல்லூர், சிதம்பரம், திட்டைகுடி, விக்கிரவாண்டி, புளியங்குடி முகாங்களிலேற் பட்டமையின் சென்னை முதலிய இடங்களுக்குப் போதலும் வருதலும் புரிதலின் ஸ்ரீமத் - சுவாமிகளுக்குச் சம்பவித்த அலைச்சல் முதலிய சிரமம் எத்துணைப் பெரிதென்னலாம்! 1904-ஆம் ஞு டிசம்பர்மீ முதல் 1911-ஆம் ஞு அக்டோபர்மீ வரையிலும் வைணவர் போராட்டமானது நிகழ்ந்தமை சாணப்படுதலாற் சுவாமிக ளெடுத்துக்கொண்ட தருமார்த்த கஷ்டம் ஏழாண்டென்று சொல்லவேண்டும். இதனை, தம்மைச் சைவரெனச் சாற்றிக்கொண்டு திரிவாருள் மிகச் சிலரே உணர்ந்தவராவர். நல்ல தருமந்தெரிந்தார்க்கு இங்ஙனம் **விரித்துரைக்க** வேண்டுவ தொன்றுமின்று. கோர்ட்டு முகாம் பலவற்றுக்குஞ் சுவாமிகள் சென்றுமீடலில் இரவுபகலாகத் துணை நின்றவர், பின்னத்தூர்-பொ. நடராஜப்பிள்ளை யென்பது சுவாமிகள் குறிப்புக்களிற் காணப் படுகின்றது. இவரதன்பும், மற்றும் இயன்ற வுதவிபுரிந்த சைவத் திருவாளர்கள் அன்பும் யாண்டு மென்ஞான்றும் போற்றத்தக்கனவே.

## மாற்றாரிழைத்த தீங்கினின்றும் சுவாமிகளை மயிலிறைவன் காத்தருளினமை

காட்டுமன்னார் குடியிலுள்ள வைணவர்களுள் ஒரு சிலர், வைணவரை யெதிர்க்குங் குருவாகிய அவரை நாம் கொன்று மகிழலாமேயென்னுங் கருத்தாற்கூட்டங்கூடிப்பேசினதூஉம், சிதம்பரத்திலும், பின்னத்தூரிலுமுள்ள வைணவர்களுள் ஒரு சிலர் அவரைக் கொல்லுமுபாயம் இஃதாமென் றெண்ணிக் கொடிய சூனியகருமம் புரியுமாறு செய்ததூஉம் பலியா தொழியும்படி தம்பிரா னருள்பாலித்தமையும், வழக்குகள்

நடைபெறு காலந்தோறுங் கோர்ட்டுகளில் தமக்கொரு வருத்தமுமின்றித் தங்கடவுளின் கருணை தவிசு தந்தருளின மையும் ஆசிரியரே கூறியுள்ளார். ஸ்ரீமத்-குமாரசுவாமியத்தி ன இடையருது நிற்க விழைதலில்—

''காட்டு மன்னனு ருருய் வைணவர்
கடிதி னென்னையே கொலைசெய் யெண்ணமே
கூட்டி னரதுந் தில்லை பின்னைவாழ்
குடில நாமர்கள் கொடிய சூனியம்
ஊட்டி னர்கொலற் கேயஃ துங்கெடுத்
துவகை செற்றுலா மவர்வ ழக்கெலாம்
ஓட்டி யேயெனக் கீந்த வென்றியிவ்
வுலகு கூறுமே யலகில் வேன்முதால்.

அவ்வ ழக்கெலா மாந்தொ றும்விசா
ரணையி லெற்குமோர் தவிச ளித்துநேர்
எவ்வ ருத்தமும் பொன்ற வாண்டவா''

என வருமாற்ருற் கூறியது காணலாம். இவற்றிற்கு வேருன பின்னத்தூரார் செய்கைவாய்ப்பொன்றனை ஸ்ரீமத் - குமார சுவாமியத்துத் திருவருட் செயன் ஞாபகத்தில்—

''பின்னை தனிற்பகை நாரணப் பெயரான்
பெரிது மிகழ்ந்தெனைத் தன்மத தருக்கந்
துன்ன வழைத்தனன் யானுமவ் வாறே
துணிந்த போதவன் மறைந்துபொல் லாங்கு
முன்னி யுகுத்தனன் யாரிடம் பிழைதான்
முளைத்த தோவவன் வாயிலிம் மணல்வீழ்
கென்ன வெடுத்தகைம் மணல்விடுத் தேனவ்
வெதிரி மாண்டதிவ் வுலகமு மறிமே''

என்னுஞ் செய்யுளிற் காணலாம். இருக்குமிடத்தே ஆண்டு தோறு நிகழ் ஸ்ரீ கந்தசஷ்டிவிரத மகாபூஜையை அப் பின்னத் தூரிலும் அடிகள் பல்லாண்டு உஞற்றினரென்ப தறியக்கிடக் கின்றது. அது, மேலைத் திருவருட்செயன் ஞாபகத்தில்—

''செங்கை வேலவ பின்னையி லடியேன்
செய்த கந்தசட் டியிலெதிர் வழக்குப்
பங்க மாமடை வாய்செய மெனவே
பணித்த வாய்மையு நான்மறப் பேனே''

என வருதலானு முறுதிப்படுகின்றது.

## மற்றுமோர் சற்சீடர் சேரல்--
## சுவாமிகள் சென்னை விஜயம்

சிதம்பரத்திற் கண்ணங்குடிச் சண்முகம் பிள்ளை யெனும் பெயரிய கல்வியறிவும் முதிர்வயது முடையாரொருவர் அடிகள் பாலெய்தித் திருவாறெழுத்தை அடியேற்குபதேசித் தருள்க வென்ற பெருவேண்டுகோளை அடிகளங்கீகரித்து அதனை விதி முறையாக வுபதேசித்தருளினர். அவரும் அவ்வழிபாட்டிற் சிறந்து நிற்பவரேயாயினர். கிளந்து போந்த 72-ஆவது நம்பர் வழக்கில் எதிரிகளான 23-பெயர்களும் ஸ்ரீமத் - சுவாமிகளுடைய சீடர்களேயென்று வாதி குருசாமி நாயுடு வாக்குமூலமும், கோர்ட்டாரவர்கள் தீர்மானமு மேற்பட் டிருத்தலின் அவ்விடத்துச் சீடர்கள் இன்னரின்னரென்று தனியே விவரித்தல் அவசியமில்லை. இராமாநுஜ மதஸ்தர் களாகிய எதிரிகள் வியவகாரமெல்லாம் நின்று விட்டமை யால் ஆசிரியர், 2—1—1914-ல் திருக்கோவலூரை யடைந்து சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டாரவர்களிடஞ் சென்று, தமது பக்க அனுகூலத்தின் பொருட்டு எக்சிபிட்டு களாகக் கொடுக்கப்பட்டிருந்த புத்தகங்கள், பத்திரிகைகண் முதலியனவற்றைத் திரும்பப் பெற்றுக்கொண்டு சென்னைமா நகரம் புக்கனர்.

## சம்பந்த முதலியார், சின்னசுவாமி சோதிஷர் முதலியோர் சீடராதல்

கிளந்து போந்த 5-வது நம்பர் வழக்குத் திருக்கோவலூரின்கண் 6—12—1909-ல் முடிவடைந்த பிற்றை ஞான்று ஆசிரியர் சென்னை சென்று வைகியதுண்டு. அஞ்ஞான்று திருவல்லிக்கேணி வாசியாய பு. சம்பந்த முதலியாரவர்கள் அடிகளைத் தமதில்லத்தில் அமுதுண்ண வரல் வேண்டு மென்று வேண்டுதல் செய்தா ரென்பதூஉம், அவ்வண்ணமே அவரில்ல மெய்தி யுண்டியுண்டு ஷெரிதும் மகிழ்ந்து புகழ்ந்தா ரென்பதூஉம்—

'' வெம்பந்த நீத்தருள் வேலா யுதனை விரும்பெனக்குச்
செம்பந்த ரிட்டு மிடாதும் வடதிசை தென்றிசைக்கண்
அம்பந்த மாக வளித்த வுணவல்லிக் கேணியில்வாழ்
சம்பந்த னில்லத்தி லிட்டவுண் டிக்குச் சமமல்லவே.''

என்னும் பாடலாலறியக் கிடக்கின்றன. இப்பாடல் **ஸ்ரீமத் - குமாரசுவாமியத்திலே** மணிமஞ்சரியிலே நிலவி நிற்கின்றது. உணவுண்டலும் பாடலும் 4—3—1910-ல் நிகழ்ந்தன. இதற்குமேல் அம்முதலியாரவர்களும், அவ்வூர் பு. சின்னஸ்வாமிப் பிள்ளை, இராஜாபாதர் முதலியார் ஆகிய இரு சைவத் திருவாளரும் ஆசிரியர் முன்னரெய்தி 'யாங்கள் ஈடேறும்பொருட்டு எங்களுக்குத் திருவாறெழுத்தை உபதேசித்தருளல் வேண்டு' மெனப் பெருவேண்டுகோள் புரிந்தார்கள். ஆசிரியரும் அன்னணமே செய்தருளினர். அவர்களும் அச்செந்நெறி நிற்குநராயினர். இம்மூவருள் சின்னசுவாமிப் பிள்ளை யவர்கள் விருப்பம் சோதிடஞ் சொல்வதை அவாவி நின்றதாகலின் இறைவன், அந்நிசியிலே அவர் நித்திரையில் நம் சுவாமிகளைப் போலத் தோன்றி, ''நாளை நீ பெற்றுக்கொள்ளுந் தீக்ஷையைக் குரு ஓரையில் வைத்துக் கொள்'' என்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தமையால்

அவ்வோரையிலே அவர்க்கது செய்யப்பட்டதாகும். சோதிடம் நாளுக்கு நாளதிகரித்து விளங்குவதாயிற்று. இவருக்கு ஆசிரியர்மாட்டுள்ள திடபக்தி பலராலும் பாராட்டப்படுவ தொன்றும். இவர் சுப்பிரமணிய தாசரெனவுஞ் சொல்லப்படுகிறுர்.

## பெருமிறைக் கவியுரை

திருப்பாவென்னும் பெரு நூலிலே " தானேக்கும் ஆனேக்கும் பூனேக்கு நடுச்சார் " என்னுமடியினே முதற்கட் கொண்டுள்ள மா விசித்திர கவிக்கு எவ்விற்பன்னரும் உரைகாண்டல் இயலாதென்பது நுதலிய ஆசிரியர், கி. பி. 1913-ஆம் ஆண்டிலே சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், விழுமியது பயத்தலென்னும் அழகு முதலியன போதரத் தாமே உரை வரைந்தார். அது 14 - விசேட அலங்காரங்களேக் கொண்ட கவினுடைத்து. அதன் பெயர் **பெருமிறைக்கவியுரை** யெனப்படுவதாயிற்று.

## தென் தல யாத்திரை

மேல், திருவாலவாய் முதலிய தலங்களுக்குத் தேசிகர் சென்றிருந்தார். அக்காலம் அவர் திருநெல்வேலி ஜில்லா சிவகிரியிற் சிவபக்தியிற் சிறந்து விளங்கா நின்ற ஒருவர் வேண்டுகோளே யங்கீகரித்து அவருபசரிப்பில் அச்சிவகிரியிற் சின்னுள் வசித்திருந்தார். இவ்வாசம் கி. பி. 1914-ஆம் ஆண்டென்னலாம். ஆங்கிலங்கு குமாராலயத்திற் குமார மூர்த்தியைத் தரிசித்து உவகையுற்றனர். பின்றை அவ்வூரை விட்டுச் சங்கர நாராயணர் கோயில், கழுகுமலே யென்னுந் திருத்தலங்களே யடைந்து சிவகுமார தரிசனம் கிடைக்கப்பெற்றுக்

செய்துகொண்டு, கோயிற்பட்டி வழியாகத் திருவல்லிக் கேணியை யடைந்தனர். அடைதலும் இடக்காலிலொரு சிறு கட்டியும் தொடையிலொரு பெருங் கட்டியுந் தோன்றி அடிகளை வருத்துவனவாயின. அவற்றைக் குணப்படுத்தும் பொருட்டுப் புதுப்பாக்க மென்னுங் குமாரபுரத்திலே காற் றோட்டமுள்ள ஒரு மேன்மாடியை யடைந்தனர். ஆங்கவை குணமாயின. அச்செவ்வி தொடக்கமாக அவ்வூரிலேயே தங்கினர். சிவகிரிபோந்து மீண்டவாறும், கட்டிகள் தோன்றியவாறும், அவை யொழிந்தவாறும் அடிகளுங் கூறினரோ எனின்,—கூறினரென்க. என்னை? **ஸ்ரீமத்-குமாரசுவாமியத்தே** இடையறுது நிற்கவிழைதலில்—

"அன்பர் வாழ்சிவக் குன்றி ருந்துமா
லணவு நன்னரே பெருகு சென்னையே
இன்பொ டார்தலுந் தாள்கு றங்கிலே
யிரணம் விஞ்சுமா பிளவை கண்டுநான்
துன்பு கூருநா ளுண்ம கிழ்ந்துளோர்
துயரு மாறினி தருளி னுயிங்ன்
அன்பி லார்கள்போ னிற்றல் யாணரோ
வருணை நாதனோர் மருவும் வேதனே."

என்றாராகலின். அவ்வொருவர் யாவர் என யான் விசாரித்த ஞான்று சிவகிரிக் கணக்கு ஐயாச்சுவாமிப் பிள்ளை யெனும் பெயரிய திருவாளரென்பது புலப்படுவதாயிற்று.

## சிவசூரியப் பிரகாசம்

முன்னரேயே ஸ்ரீமத்-சுவாமிகள், தமது பரங்கரை நாவான் மொழிந்தருளிய **பரிபூரணனந்தபோதத்திற்கு** ஏற்பட்ட **சிவசூரியப் பிரகாச** மென்னும் உரையில் வடமொழி வேதம் முதலியமேற்கோள்களோடுங் கூடிய **விசேட வுரையை ஆனந்த**

(கி. பி. 1914) வருஷத்தில் கட்டிகளின் இரணம் ஆறியவுடனே புதுப்பாக்கத்தில் இயற்றியருளின ரென்னலாம். கி.பி. 1914-ம் ஆண்டிலேயே அச்சிடப்படுவதாயிற்று.

## மேலுஞ் சீடர் சேர்தல்

கட்டிகளால் வருத்தமுற்ற செவ்வி தம்மால் இயன்ற வுதவியைச் செய்தவர்களுள் கா. இராஜமுத்துப்பிள்ளை, திருவல்லிக்கேணி - தா. வேங்கடாசல முதலியார், தே. குருசாமி முதலியார், மீனாக்ஷிசுந்தர முதலியார், மயிலைக் கந்தசாமி முதலியார் ஆகிய இவர்களை நோக்கி, 'நுங்கட்கு யான் யாது செய்தல் வேண்டும்'? என்று ஆசிரியர் பரிவோடும் வினவினர். அப்பொழுது, 'அடியேங்கள் உய்தி பெறுமாறு திருவாறெழுத்தை உபதேசித்தருளல் வேண்டு' மென்ற வேண்டுகோட் கிணங்கி அவ்வண்ணமே ஆற்றியருளினர். அன்னோரும் அச்செந்நெறி நிற்குநராயினர். புதுப்பாக்கம் கணபதி நாயகர் சூக்கும பஞ்சாக்கரத்தைப் பெற்றவராயினார். வேறு சிலரும் தத்தம் பக்குவத்திற்கேற்ப அவ்வுபதேசம் பெற்றவராக வெண்ணப்படுவர். இவர் போன்றார் சென்னைக்கு வேறான ஊர்களிலு மிருப்பரென்பதும் நிச்சயிக்கற்பாற்றே. மேலே போந்த தா. வேங்கடாசல முதலியாரும், மயிலைக் கந்தசாமி முதலியாரும் திருவொற்றியூரிலுள்ள தங்கள் சத்திரத்திற் பிரமோற்சவ காலத்தில் அடியார்கட்கு அன்னம் படைத்து மகிழுந் திருவுடையராயுமுளர்.

## ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபைக் கால் நிலைபெறுத்தல்

1915-ஆம் ஞு ஜனவரிமீ 31உ சுவாமிகள் இராயப்பேட்டைப் பாலசுப்பிரமணிய பக்தஜன சபா நிலையத்துக்குக்

கால்நிலை பெறுத்தினர். பளபளப்பான கருங்கல்லில் இவ்விடயம் வரையப்பட்டுச் சுவரிற் பதிக்கப்பட்டதாயுளது.

## சதானந்த சாகரம்

முன்னரேயே ஸ்ரீமத்-சுவாமிகள், தமது தத்துவம்பகர் நாவாற்சாற்றியருளிய **தகராலய ரகசியத்திற்கு** ஏற்பட்ட **சதானந்த சாகர**மென்னும் உரையுழைப் பொழிப்புரையின் அடிப்புடை நிலவு வடமொழிவேதம் முதலிய மேற்கோள் களோடுங் கூடிய விசேட வுரையை நள (கி. பி. 1916) வருஷத் திற் புதுப்பாக்கத்தில் இயற்றியருளினர். கி. பி. 1916-ஆம் ஆண்டிலேயே அச்சிடப்படுவதாயிற்று. விசேட மேற்கோட் சுவையோடுங் கூடிய இவ்வுரையும், **சிவசூரியப் பிரகாசத்து** அத்தகைய விசேடவுரையும் சொற்சுவை, பொருட்சுவை, உவமானச்சுவை முதலிய சுவை யெல்லாந் துறுமி விளங்குவன வென்று கருத்தூன்றிப் படித்துணரும் யாவருங் கூறுவர்.

## ச. சச்சிதாநந்தம் பிள்ளை சீடராதல்

மேல், சென்னை : ச. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T., சுவாமிகளைத் தரிசித்து வந்தித்து நின்று, "இறைவனது திருவா றெழுத்தின் உபதேச வாயிலாக என்னையும் ஆட்கொள்ளல் வேண்டுமே" யென்ற பெரு வேண்டுகோளை அங்கீகரித்த அடிகள் அவ்வண்ணமே செவி யறிவுறுத்தருளினர். ஸ்ரீமத்-குமாரசுவாமி யத்துக்கு ஒரு **முன்னுரை**யும், அதன் முதற் காண்டச் செய்யுள்கட்குப் **பொழிப்புரை**யும், இரண்டாங் காண்டத்துச் சண்முக ஞானபுரப் பத்து இரண்டற்கும் ஏற்புடைக் **குறிப்புரை கருத்துரை** யென்பனவும், பரிபூரணானந்த போத மூலம் உரை, தகராலய ரகசியமூலம் உரை

யென்பனபற்றி ஒரு முன்னுரையும் எழுதினவர் இந்தச் சச்சிதானந்தம் பிள்ளையே. இவர் இப்பொழுது பாடசாலை டெபுட்டி இன்ஸ்பெக்டரா யிருக்கின்றனர்.

## 'திராவிடன்' செய் தெய்வநிந்தனை நீக்க முயலல்

**திராவிட**னென்னும் பத்திரிகையில் கி. பி. 1917-ஆம் ஞு சூலை மீ 30௳ வெளிவந்த இலக்கம் 51-ன் 2-ஆம் பக்கத்திலே சிவலிங்கத்தையும் தீர்த்தங்களையும் சுப்பிரமணிய மூர்த்தியையும் பெரிதும் பழித்தெழுதி யிருத்தலும் சிவாசாரிய நிந்தை முதலியன தீட்டி யிருத்தலும் காணப்பட்டன. இப்படிப் பட்டவைகளை யெவரெழுதிக் கொடுப்பினும் இனிப் பிரசுரிக்க லாகாதென்று நியாயம் பெறுவான், 17—8—1917 என்னுந் தினமிடப்பட்டதாய்ச் சைவத் திருவினர் பலருங் கையெழுத்துச் செய்யப்பட்டதாயுள்ள ஒரு தமிழ் இலிகிதத்தை ஸ்ரீமான் ஸர். பி. தியாகராஜ செட்டியார் B.A.. அவர்களுக்கு, சில சீடர்களோடும் போந்த நம் சுவாமிகள் கொடுத்துக் கொண்டனர். அவ் வேண்டுகோளை யுணர்ந்த அச்செட்டியாரவர்களும் அவ்வித நிந்தைகளைப் பிரசுரஞ் செய்யாதபடி உடனே ஏற்பாடு செய்வராயினர். அஃதவர் வாழ்நாள் காறும் பேணப்பட்டு வந்தது.

## குமாரஸ்தவம்

சாலிவாகன சகாத்தம் 1841-ல் நிகழ்காலயுத்தி (கி.பி.1918) ஞு ஆடிமீ 7௳ இடப்பட்ட **குமாரஸ்தவ**மானது தமக்குற்ற வெப்பு நோய் நீக்கம் பற்றி ஆசிரியராற் பாடப்பட்டது. அந்நோயும் நீங்கிற்று. இஃது அருச்சனை புரிகாலத்துஞ் சொல்லத்தக்கது.

## பாலசுந்தர சுவாமிகளும் குழந்தைவேலரும் சீடராதல்

மேல். புதுப்பாக்கம் பொ. குழந்தைவேல் முதலியாரும், சிந்தார்ப்பேட்டை - பாலசுந்தரனும் ஆசிரியர் பால் அறுமுகச்சிவனது மகாமந்திரமாகிய திருவாறெழுத்தை உபதேச வாயிலாகப் பெற விழைந்தார்கள். அவர், ஆலோசனையின்மீது திருத்தணிகை யெனுந் திருத்தலத்தை யடைந்து அத்திற வுபதேசத்தை அத்திருவாளர்கட்குச் செய்தருளினர். அஞ்ஞான்று தானே அத்தியாச்சிரமிகள் தரிக்குங் காஷாயதாரணத்தையும் பாலசுந்தர சுவாமிகள் பெற்றுக் கொண்டவராயினர்.

## சண்முகசகச்சிர நாமார்ச்சனை

**சண்முகசகச்சிர நாமார்ச்சனை** யென்பதை ஆசிரியர், வடமொழியிலுள்ள பல பிரதிகளை நன்கு பார்வையிட்டு வழுக்களொழியுமாறு செய்து தமிழெழுத்தில் வரைந்து நல்கினமை சித்தார்த்தி (கி. பி. 1919) வருஷமாம். அச்சிடப்பட்டதும் அவ்வருஷமே யாம்.

## அருணகிரிநாதருக்குக் குருபூசை ஏற்படுத்தல்

சந்தமுனிவராய ஸ்ரீமத் - அருணகிரி நாதருக்கொரு குருபூஜை அவர் வீடுபேறெய்திய காலந் தொடக்கமாகவுறும் எக்காலத்தேனும் எவரானுஞ் செய்யப்படா திருத்தல் கருதிய நம் ஆசிரியர், இறைவன்றிருவரு ளிருந்தவாறு அவ்வித குருபூஜையை உத்தராயணத்து ஆருவது பௌர்ணமிதோறும் நடாத்தும்படி சீடர்களுக்குப் போதித்தார். அவர்களும் பிறரும் அப்படியே நடாத்தி அதனை நடைபெறச் செய்தனர்.

போதித்த காலமும் நாதர் சரித்திரத்தை யெடுத்துரைத்த காலமும் காலயுத்தி (கி. பி. 1918) வருஷமென்றே கோடற்பாற்று.

## திட்பம்

1101 திருப் பாட்டுக்களால் விளங்கா நின்ற **திருப்பாவில்** (43-திருப்பாட்டுக்கட்கு வேதத் தமிழால் உரையாக வரையப் பட்ட) **திட்ப** மென்பதூஉம், மற்றைத் திருப்பாட்டுக்கள் பற்றியுள்ள **குறிப்புரை** யென்பதூஉம் சாலிவாகன சகாத்தம் 1843-ல் ரௌத்திரி (கி.பி. 1920) வருஷத்திற் புதுப்பாக்கத்தில் அடிகளால் ஆக்கப்பட்டன. கி.பி 1921-ம் ஆண்டில் அச்சிடப் பட்டன. பொருட் பொலிவோடு தமிழ் வளந் துறுமித்திகழ் இவ்வுரைகளின் அருமை பெருமைகளை அளவிடலெளிதன்று.

## சிவஞான தீபம்

**சிவஞான தீப**மென்பது, ஆசிரியராலாக்கப்பட்ட ஒரு வசன நூலே. இஃது அவராலேயே திருத்தியும், கழித்தும், சேர்த்தும் புதுக்கப்பட்டமை சாலிவாகன சகாத்தம் 1844-ல் துர்மதி (கி. பி. 1922) ஞு கார்த்திகை மீ - ஆம். இது வேதாந்த சித்தாந்த சமரச நயப்பாட்டினைத் திறம்பட வெடுத்துரைக்கும். கி. பி. 1922-ஆம் ஆண்டு அச்சிடப் பட்டது.

அடிகள், சில தினங்கள் உணவின்றி யிருந்து வருந்தியது காரணமாகக் கி.பி. 1921-ஆம் வருஷத்து டிசம்பர் 2,3-ஆந் தினங்களில்—

"நீற்றிற்குங் கண்மணி மாலைக்கு நின்றிரு நாமசெப
ஆற்றிற்கு மாசைப் படுமெங்க ணெஞ்ச மறிந்தணைப்பார்

பேற்றிற் குரியபி ரானேயெந் தாய்வள்ளி பேணுமின்பே
சோற்றிற்கு நான்படும் பாடிங்குச் சொல்லி முடிவதன்றே.

ஊர்வெறுத் தேனுற வோர்வெறுத் தேன்மனை யோடுசெல்வச்
சீர்வெறுத் தேன்பிர சங்கங்கள் கூடுந் தெருவெறுத்தேன்
ஏர்வெறுத் தேன்வயிற் றுப்பசி யாக வியம்புமொரு
சூர்வெறுத் தேனல்ல னென்செய்கு வேனயிற் றூயவனே.

கூடல் விதிக்கின்ற வேதம் வழுத்துங் குமரநின்றாள்
பாட விதித்த கருணையெங் கேயயிற் பாகுவெங்கே
தேட விதித்த பெருமையெங் கேசுர சேனையெங்கே
நாட விதித்த நலனதெங் கேநெஞ்ச நைகின்றதே''

என்னும் பாட்டுக்களைப் பாடினரென்றல் **ஸ்ரீமத்-குமாரசுவாமி யத்தில் மணிமஞ்சரியில்** அறியக் கிடக்கின்றது.

## அல்லிக்கேணிக் கடற்கரையில் அடிகள் அறிவுரை வழங்கல்

பல வருடங்களாகக் குமாரபுரமெனும் புதுப்பாக்கம் வதிந்துள்ள இவர், மாலைப்போது தோறுந் திருவல்லிக் கேணிச் சமுத்திர தீரத்தை யடைந்திருந்து பத்து நாழிகைக்கு மேல் இருப்பிட மடைதலும், ஆங்கு இராப்புசிப்பாகு பால்பழ முண்டபின்பு சில தினங்களிற் பெயர்த்தும் அச்சமுத்திர தீரத்தை அடைந்திருத்தலும், ஆயிடைத் தனித்திருந்து கடவுளைத் தொழலும், சில தினங்களில் வேனிற்கால வெப்பம் மிக்குறின் அத்தீரத்திருந்தவாறே பால்பழ முட்கொண்டு அங்கேயே இருந்துவிடலும், சூரியோதயத்திற் புதுப்பாக்கம் திருவல்லிக்கேணி சென்னையாய இவ்விடங்களு ளொன்றனை யடைதலும் இவர் செய்கைகளாக விருந்தன. வெண்மண

லிருக்கைக்கும், சந்திரப் பிரகாசத்திற்கும், நின்மல ஆகாய தரிசனத்திற்கும் இவர்மனம் விழைதலுடைத்தாகலின் அச் சமுத்திர தீரத்தை அக்காலங்களிற் பெரிதும் விரும்புவரெனல் வலியுறுத்தப்படும். சில சமயம், சென்னைக் கடற்கரைவரை வெண்மணல் வழியாக நடந்துபோய் மீளத்திரும்புவர். பூரண சந்திரன் கீழ்த்திசையில் ஒளி செய்துகொண்டிருக்கு மொருநாள் மேற்றிசையின் மெல்லிய மழைமேகமிருந்தது. அதனை யிவர் நோக்கினர். நோக்கலும் சூரியனுக்கெதிரே காணப்படும் வானவில்லைப் போலவே 'அம்மேகத்திலே இரட்டை வில் பச்சை முதலிய வர்ணங்களோடு பிரகாசித் தலைக்கண் டதிசயித்தனர். "இராத்திரியில் வானவில் காண்போன் சடிதியின் மரணமாவன் என்னும் புத்தக நிச்ச யத்தை யான் கண்ணுற்ற வில்லானது மறுப்பதாயிற்று. என்னை? 6, 7-வருடங்களாயின அஃதென்னுற் காணப்பட்டா கலின்" என்று தஞ் சீடர்கட்குரைத்தார். அக்கடற்கரை யிலே தாந்தங்கியிருத்தலறிந்துவந்து பக்கலிலிருக்குஞ் சீடர் கட்கும், பார்த்தசாரதி செட்டியார், சிவசங்கரத் தம்பிரான் முதலிய நேயர்கட்கும் நீதியையும் பரமபக்தியையுஞ் சக்தி யையுஞ் சலியாது போதிக்கும் பேராற்றலும் இவர்பாற் காணப்பட்டது. சமுத்திர தீரத்திலே சித்திரை மாதத்துப் பௌர்ணமியிலே வேற்பெருமானுக்குச் சிற்றுண்டி படைத் துண்டலென ஒரு விசேஷத்தை இவரேற்படுந்தினர். அப்படி அது நிகழுந்தோறும் அந்த இயவுள் பிரசாதமாக அஃதுண்டோர் உள்ளமுஞ் செவியும் உவகை பூக்க நெடுநேரம் பரத்துவப் பிரபாவம் போதித்தலும் இவர்கடப்பாடாய் வயங்குவதாயிற்று. இராக்காலத்திலாம் அச்சிற்றுண்டிக் காரி யத்தை முன்னர் நடாத்தினவர் பு. சம்பந்த முதலியாரென்ப தூஉம், பின்னர் நடாத்திக்கொண்டு வருபவர் பொ. குழந்தை வேல் முதலியாரென்பதூஉம், இவ்விரு நல்லாருஞ் சீடர் குழுவைச் சேர்ந்தவர்களே யென்பதூஉம் பலருமறிந்த உண்மையாம்.

## ஆங்கில மருத்துவர்க்கு ஆன்ம உண்மையொன்று அறிவுறுத்தல்

ஆங்கிலம் பயின்று B.A. பட்டம் பெற்றுச் சென்னை வைத்தியசாலை யொன்றில் உடலமைப்பு முதலியன கற்றுக் கொண்டிருப்பாரு ளொருவர், ஒரு தினஞ் சமுத்திர தீரத்திற் கிடக்கின்ற மரத்தின் மிசைச் சாய்ந்து கொண்டிருந்தார்; பார்ப்பாரெனவே காணப்பட்டார். அவர், இவ்வாசிரியரை நோக்கி இரத்தமே அறிவுடையான்மாவென்றும், கையிலுள்ள இரத்தத்தை மேலேறச் செய்துவிடின் அதனிலுணர்ச்சி யிரா தென்பதை யறியலாமென்றும், பண்டைக்கால இருடி முனிவ ரென்பார் இவ்வுண்மையறியா மடவோரென்றும், அவர் புத்தகங்களைக் கொண்டே ஆன்மாவொன்றுண்டென்பது நுங் கூற்றுமென்றுங் கூறினர். அவரை நோக்கி இவர் சில கடாக் களை யெழுப்பினர். அவை வருமாறு:—இரத்தம் அறிவாயின் அதிக ரத்த முள்ளார்க்கு அதிக அறிவு கூறல் வேண்டுமன்றோ? நுமதுடம்பைநோக்குழி அதிக ரத்தத்திற் கிடனின்றென்றலை யெவருமொப்புமாற்றானே நுந்திர்வையும் ஆன்றவறி வுடைமை யாகாதே; இதன்மேலும் நீர் கூறுவ தியாது? என்பனவே. இவை செவிமடுத்த அவர், ஆராய்ந்தறிந்த தீரர் திட்டிய நூல் யானுரைத்தவாறே கூறுகின்றதென்றார். இவர், [இங்கிலிஷ் வைத்தியரே (Chloroform) குளோர பாரம் என்னுமொரு மருந்தால் உணர்ச்சி யிழந்த ஒரு மனித னுடைய காலைக் கையை நறுக்கு ஞான்று இரத்தம் மளமளெ னப் பெருகுகிறது; அஃது உயிராய் உணர்வா யிருப்பின் அவன் யாங்ஙனம் உணர்ச்சியிழந்து கிடப்பவனுவன்? கிடக்கின்றமையின் உதிரம் ஆன்மா அன்றென்பதும், இம் மருந்து கண்டுபிடித்தற்கு முன்னரே நுந்திரர் திட்டிய புத்த கமே நும்மறிவுடைமைக் கருவியாயிற்றென்பதுஞ் சித்திக் கின்றன. இரத்தத்தைப் பிராணவாயுவும் பிராணவாயுவை ஆன்மவுணர்வும் பற்றி நிற்கு மென்பதும், அவ்வுணர்வையும் வாயுவையும் அடங்கச் செய்திருத்தலே குளோரோபாரத்தின்

செயலென்பதும் நீருணர்ந்து கொளின் நுணுகினு நுணுகாய ஆன்ம சக்தியினுண்மை ஒராறு புலனுதல் கூடுமென்று கூறலாயினர். வம்புவிளைத்த வாதி வாளாவிருந்து விட்டனர். இவற்றை யுய்த்துணர்ந்த சீடர்களும் பிறரும் வியப்புற்று மேலுங் கேட்டுத்தெளிதலிற் செவி சாய்த்திருந்தார்கள்.

## 'மஹாதேஜோ மண்டலத்தார்'

மஹாதேஜோ மண்டலவடிவ குமாரபகவானொருவனையே வழிபடுவார் எத்தேசத்தாராய் எக்குலத்தாராயிருப்பினும் அவரெல்லாம் **மஹாதேஜோ மண்டலத்தா**ரெனுஞ் சபையினராவரென்று அடிகள் நிர்ணயித்த பரமதருமமொன் றுளதென்பது கொளக்கிடக்கின்றது. யாங்ஙனமெனின்,—

> ''அளவிலாத் தேஜோ மண்டல இறைவனொருவனையே ஆசாரத்தோடு மன்போடும் வழிபடூஉம் அடியாரனைவரும் எத்தேசத்தாராய் எக்குலத்தாரா யிருப்பினும் அவர், ''மஹாதேஜோ மண்டலத்தார்'' ஆவராகலின், யாமவரை யிப்பெயர் தரித்துநிற்குங் கடன்மைக்குட்படுத்தி யுள்ளோம்.''

எனத் **திட்பத்திலும்** (திருப்பா-கடவுள் வணக்கத்து 3-ன் உரை),

> '' அவனருளொன்றே வேட்டெவ்
> வரந்தைவந் துறினு நிற்போர்
> எவணுறு பதியிற் றோன்றி
> யெங்கிருந் திடினுஞ் சாதி
> எவனென வினவு வார்முன்
> யாதுரைத் திடினு மன்னோர்
> கவனமின் மாதே சோமண்
> டலத்தராய்க் களிப்பார் மன்னோ ''

எனச் **செக்கர்வேள் செம்மாப்பிலுங்** கூறப்பட்டமையினென்க.

## சுவாமிகளின் சித்தாந்தம்

**செக்கர்வேள் செம்மாப்பு, செக்கர்வேளிறுமாப்பு** எனப் பெயரிய இரண்டு செய்யுணூல்களும் கி.பி. 1899, 1913, 1923-ஆம் ஆண்டுகளில் ஆசிரியரால் ஆக்கப்பட்டன வென்னலாம். **எழுவாயுரையில்**

> ''இதனுள் முழுமுதலிலக்கண வதிகாரமும், செக்கர் வேளிறுமாப்பினுள் வீடு பேற்றதிகாரமும் எமது முடிவான சித்தாந்தமாகும். 1101-திருப்பாட்டுக்களானிரம்பியுள்ள **திருப்பா**வென்னும் எமது நூலினுள் 43-திருப்பாட்டுக்கட்கு மேற்கோள்களோடு வேதத்தமிழாலுரையாக வரையப்பட்ட **திட்பத்திலே** இத்தீர்வையே எமது முடிவான சித்தாந்தம் எனவுந் தீட்டப்பட்டமையின் அந்நூலுட் பரந்து கிடக்கும் பொருளும் சுருங்கி நிற்கும் பொருளும் இச் சித்தாந்தமேயாம். இன்னும் எம்முடைய பத்தியகத்திய ரூபமாயுள்ள பன்னூல்களின் முடிபும் இதன் கண்ணேயே அடங்கும்.''

என்று ஆசிரியரே கூறியிருத்தலின் இந்நூல்களின் நுட்பதிட்ப நிபுணத்துவம் உணர்வாருணர்ந்து கொளலாம்.

## சுவாமிகட் குற்றதோர் பேராபத்து

ஆசிரியர் ஐந்து காண்டங்களாக இயற்றியருள் **ஸ்ரீமத்-குமாரசுவாமிய**மெனும் பெயரிய காவியம், கலியுகம் 5023-ஆம் ஆண்டுக்குச் சரியான சாலிவாகன சகாத்தம் 1844-ல் துர்மதி (கி.பி. 1921) வருஷம் ஆடி மாசம் ஆரம்பிக்கப்பட்டதாகும்.

இது நிகழ்ந்து கொண்டிருக்கும்போது கி. பி. 1923-ஆம் ஞூ டிசம்பர்மீ 27வ பகல் சென்னைத் தம்பு செட்டி வீதியிற் போம் ஒரு குதிரை பண்டியின் சக்கரமொன்று ஆசிரியரது இடக் கணைக்காலி லேறிக் காலை முரித்துவிட்டது. உடனே அவர் சில நல்லவர்களால் இராசாங்கத்துப் பெரிய வைத்தியசாலைக் குக் கொண்டு போகப்பட்டார். உரிய சிகிச்சை நிகழ்ந்தது. அக்கணமே திருவல்லிக்கேணியிலிருந்து சோதிடம் - சுப்பிர மணிய தாசரும் அவர் மனைவியார் பார்ப்பாத்தியம்மாளும் வந்து சுவாமிகளுக்குச் சம்பவித்த துன்பத்தைக் கண்டு கண்ணீர்விட்டுக் கதறி யழுதார்கள். அடுத்த நேரத்திலே சிவசங்கரத் தம்பிரானென்னும் அன்பர் ஓடிவந்து அடிகளைக் கண்ணுற்றுக் கண்ணீர்வடித் தழுதார். பின்னர் வந்து பார்த்தவர் பலராவர். சில தினங்கள்காறும் வைத்தியசாலை யில் அன்பர் கூட்டம் அதிகமாயின. பின்னே தமதிருக்கை யிற் **சண்முககவச** பாராசயணத்தைப் பெரிதும் நடாத்திய அச்சுப்பிரமணிய தாசருக்கு அம்முரிந்தகால் எதிரிலே தரிசன மாயிற்று. எலும்பு கூடுங்காறும் பாராயண காலத்தே அத் தரிசனத்தை அவர் கண்டு கண்டு வணங்கி மகிழ்ந்து வெளியிடுபவராயினர். தரிசிந்தபோது அக்காலில் இரண்டு திருவேல்களின் இலையலகு அடிப்புடையிலே பொருந்தப் பூட்டப்பட்டும் மற்றொரு திருவேல்முனை தாங்கி நிற்குமாறு நிறுத்தப்பட்டு மிருந்தன.

## மயூரவாகன சேவனம்

பதின்மூராவது நாளிரவு, குமாரபகவான் வாகனமாகிய மயில்கள் மேற்றிசையிலிருந்து நடனம் பண்ணிக்கொண்டுவர, ஆசிரியர் தரிசித்துப் படுக்கையிற் கிடந்தபடியே கைகூப்பி வணங்கினர். அம்மயில்களுள் தன் கலாபத்தை மண்டலா காரமாக்கி ஆகாயமெல்லாம் ஆவரணித்து வலப்புறத்தேவந்த வொன்று பெருவடிவினதாகும். இடப்புறத்தே நடித்துவந்த

ஒன்று அதிற் சிறுவரை குறைந்த வடிவினதாகும். இம் மாபெருங் காட்சியையே "மயூரவாகன சேவனம்" என மஹா தேஜோ மண்டலத்தார் கொண்டாடிக் களி பெருங் காதல் கொள வுரியவராயினர். பின்றை ஓரிரவு அவ்வைத்திய சாலை யிலே தமது படுக்கையிலே தம்மோடு ஒரு செவ்விய குழந்தை படுத்திருக்கக் கண்ணுற்றுக் களிகொள்போது அது மறைந்து விட்டது கண்டு ஆசிரியர் அவன் றிருநாமங்களு ளொன்றனைப் பன்முறையும் உச்சரிப்பவராயினர். 'பதினைந்து நாட்களில் இரணம் ஆறிவிடும். அதுபரியந்தம் இவ்வைத்திய சாலையை விட்டு யாண்டேனும் போகவேண்டா'வென்னுந் திருவாக் கும் வெளிப்பட்டது.

## இடர்நீக்கம்—அன்பர் பணி

பின்பு குணங்கண்டு வைத்தியசாலையைவிட்டு ஒரு பண்டியிவர்ந்து புதுப்பாக்கத்திற் புதுக்கப்பட்டிருந்த பொ. குழந்தைவேல் முதலியாருடைய வீட்டிலே ஆசிரியர் தங்கி னர். புதுப்பாக்க வாசிகளாய க. வேலாயுத முதலியாரும், மாசிலாமணி முதலியாரும், தாமோதர முதலியாருமாகிய இவர்கள், ஆசிரியர் மீது வைத்த பக்தியால் அவ்வீட்டில் இரவுபகலாகத்தங்கி யிருந்து இயன்ற வேலைகளை யிழைக்கும் அன்பராயினர். குழந்தைவேல் முதலியார் மனைவியார் புஷ்பவதியம்மாள் ஆசிரியர் கால் நடைகொள்ளவேண்டு மென்னுங் கருத்தால் மிகு விசுவாசத்தோடு அவரைப்பெரிதுங் கவனித்தசீலமும், இராமநாத முதலியார் அவர்கள் அன்னை யார் சீவரத்தினம்பாள் தமது வயோதிகத் தன்மையை ஒரு பொருட்படுத்தாமல் அவருக்கு ஆகாரஞ் சமர்ப்பித்து நின்ற நீர்மையும், சிற்சில வமையம் ஆசிரியரைக் கண்ணுற வந்தா ருள் ஞானசாகர முதலியாரு மொருவராய் வயங்கியவாறும், நல்லார் பலரும் போற்றத்தக்கனவாம். இரண்டு மாசங் களுக்குமேல் வெயில் வெப்பம் ஆண்டு மிக்குறல் கருதி

P. ஜகந்நாத முதலியார் சென்னை : நம்புல்லையர் தெருவிலே பெற்றுள்ள ஒரு மேன் மாடியை யடைந்திருந்தனர். சில நாளாய பின்னே கால் நடை நன்கு கொள்வாராயினர். இங்குக்கூறப்பட்ட நிகழ்ச்சிகளின் விவரவிஸ்தார மெல்லாம் ஆசிரியரே போந்த காவியத்தே **அசோகசால வாசத்தே** கூறியுள்ளாராகலின் ஆங்குக் கண்டுகொளலாம். போந்த ஜகந்நாத முதலியாரும் அவர் மனைவியார் பாலம்மாளும் தாம் வசிக்கும் வீட்டின் மேன் மாடியில் ஸ்ரீமத் - சுவாமிகள் வதிந்துள்ளாராகலின் இயன்ற பணிகளை அவர்க்குச் செய்வாமெனுங் கருத்துப் போதர, சில கைங்கரியம்புரி புண்ணியமுடையராயினர். பழைய வண்ணாரப்பேட்டை ஸ்ரீமத் - சண்முகானந்த சுவாமிகள் ஆசிரியரை அடிக்கடி வந்து பார்த்துச் செல்பவராயுமிருந்தார். பரிவிலார் செய்கை இங்ஙனமொன்றுமில்லையாம். அவர், பக்வான் பரிவைக் காண்பது யாங்ஙனமேயோ! உள்ளும் புறனுமிருந்து அவனறிகின்றனனே.

## ஸ்ரீமத் குமாரசுவாமியம்

கிளந்துபோந்த ஸ்ரீமத்-குமாரசுவாமியத்தின் காண்டங்கள் ஐந்தனுள்ளுங் கால்முறிவுக்குப் பின்னர் நிகழாச் செய்யுளனைத்தும் அம்முறிவு கூடிக் குணமார்ந்தவுடன் ஆசிரியராற் பாடப்பட்டன. ஐந்து காண்டமும் 1192-திருச்செய்யுள்களானிரம்பியுள்ளன. இந்நூன் **முன்னுரையில்**—" நுவலும் பொருளானும் நுவன்றோன் பெருமையானுஞ் சாலச் சிறப்புடையது. என்னை? நூலின் பொருளாவான் நுதல் நாட்டத் திறைவன் குமாரனும், நுவன்றோன் அக்குமாரன் மெய்யடிமைத் திறத்தில் இஞ்ஞான்று தலை சிறந்து விளங்குமோர் தபசியுமாகலின் " என மொழிந்திருக்கும் வாய்மையும் இங்குக் கருதிக்கொள்ளத்தக்கதே. ஏற்புடைப் புதிய புதிய வர்ணனைகளோடும், எதிர்கால நிகழ்ச்சி தானே யொலிக்குமாறு கூறும்

இரட்டுற மொழிதல்களோடும், வேறுபட விளம்பும் இரட்டுற மொழிதல்களோடும், சந்தர்ப்பத்திற்கேற்ற சந்தத்தோடும், சந்தவேறுபாடுகளுட் பல புதியனதரு மதுகையோடும், எழுத் தளவுகள் பொருந்த நடக்கும் நிரல்களோடும், இறைவ னிலக்கணத்தோடு மாறுபடாப் பரிசுத்த பரம சரிதங்களோ டும் நிகழ்விழுமங்கொண்டுளதிந்நூல்.

இவ்விழுமம் பார்த்துணர்ந்த வொருவர், தமிழ்ப் பயிற்சி யுடையராகக் காணப்படு மொருவர்பால் இந் நூற்றிறமெடுத் தியம்பியபோது 'ஒரு புத்தகம் முழுதும் வகையுளிசெய்து பாடப்பட்டுளதென்பதை நீரறிந்திருக்கிறீரா?' என்று அத் தமிழர் வினவிய வினவிற்கு மேல் ஒன்றுங் கூறவியலாது வந்த அவ்வொருவர், சுவாமிகள் பாலெய்தி 'வகையுளி யென்பதி யாது? அவ்வகையுளி செய்து பாடல் வருத்தத்திலாவதா யின் தங்கள் பாடல்களுள் யாது அவ்வித வருத்தத்திற் பாடப் பட்டது?' என வினவினர். சுவாமிகள் அவரை நோக்கி—

''வகையுளி பேசவுள்ளீர்! அவ்வுளி — பூட்டுவில் மொழிமாற்று முதலிய பொருள்கோள்கள், சிலேடை கள், இரட்டுறமொழிதல், இருகாலப் பொருட்ரு மிரட்டுறமொழிதல், வழியெதுகை, தலையாகெதுகை, நிரோட்டகம், நிரோட்டகப்பிறிதுபடு பாட்டு, ஏக பாதம், மாலை மாற்று, மாலை மாற்றுப் பிறிதுபடு பாட்டு, பாடகமடக்கு அந்தாதிமடக்கு ஒரெழுத்து விகற்பமடக்கு முதலிய மடக்குகள், கொம்பில்லது, ஒற்றில்லது, வல்லி னத்தது, மெல்லினத்தது இடையினத்தது, நெட்டெழுத் தானிகழ்வது, குற்றெழுத்தானிகழ்வது, வெண்டளை கொண்டுனிகழ்வது, சீர்முழுதும் நெடிலோ டொற்றணை தல், குறிலோ டொற்றணைதல், சதாக்கரம், ஒற்றிலாச் சதாக்கரம், ஒற்றிலாச் சதாக்கரம், அட்டோத்தர சதாக்கரம், ஒவ்வோரடியும் எழுத்தளவுடைமை, முதலயல் இரண்டுசீர் குழிப்பு வண்ணம், முற்றுங்குழிப்பு வண்ணம், பல்சந்த வகுப்பு, திரிபாகி, பிறிதுபடுபாட்டு,

பகுபடுபாட்டு, பாட்டுடைத் தலைவன் பெயரை விடாது கொண்ட (125) நூற்றிருபத்தைந்து பங்கி முதலிய பல் வகைப் பங்கிகள், அவற்றுட் பா நான்கும் இனமும் உறு நிரலில் அனைத்துங் குழிப்புவண்ணமாங் கவிப்பிரமம், உவமானப் பிரமம், கட்டளைக்கலித்துறையைப் பல் வகைச் செய்யுள்களாய் அந்தாதித்து ஒரு நூலாக்கல், அதன் கண் முடுகுசெய்தல், ஒரெதுகைப் பத்து, எதுகை மோனையுடைப் பண்ணடைச் சுழிகுளம், ஒற்றிலாச் சுழி குளம், எதுகைமோனை பிழையாக் குழிப்பு வண்ணச் சருப்பதோபத்திரம், தமருகபந்தம், இரதபந்தம், சதுரங்க பந்தம், சஸ்திரபந்தம், சதாக்கரமயூரபந்தம், அந்தாதித்தொடைக் கமலபந்தம், இக்கமலபந்தத்துள் மோனைநயமுடைப் பிறிதுபடுபாட்டு முதலிய பல்வகைச் சித்திர விசித்திரமாய்ப் பத்திற்கு மேற்படு கவிகள், எதுகை மோனைபிழையா நாகபந்தத்துள்ளே நெட் டெழுத்துச் செய்யுளாய் மாலைமாற்றுய்வரு பங்கிகள், ஆறறை, மாத்திரைவருத்தனம், அக்கரவருத்தனம், மாத்திரைச் சுருக்கம், அக்கரச் சுருக்கம், பஃறிற வினு வுத்தரம், கூடசதுக்கம், காதை கரப்பு, நடுவெழுத்தலங் காரம், ஓரோசையில் ஆறெழுத்தெடுத்துக்கொண்டு பல் வகை யலங்காரங்களாற்றிக் காட்டல், வடசொற்புகாது நூலியற்றல், கோமூர்த்திரி, நான்காரைச்சக்கரம், அந்தாதித் தொடை நான்காரைச் சக்கரம் முதலியன வாக வருத்தப்பட்டுச் செய்யுஞ்செய்யுள்கள் போன்றதா? இக் கவித்திறங்களெல்லாம் என்னூல்களுள் என்னு லாக்கப்பட்டனவே. செம்மையற்ற தொடையே செந் தொடையென மங்கல வழக்கில்வைத் துரைத்ததை யறி யாது செம்மையுற்ற தொடையே செந்தொடையெனப் பட்டதாகலின் இத்தொடைச்செய்யுள் செம்மைத்தெனக் கொள்வர் போல்வாரு மிருப்பரே. அவர் செய்கை, பொரி மாவைக்கண்டு பொக்கை, வாய்ச்சி மெச்சிக்கோடலை யொக்குமென்றுங் கூறல் சால்பிற்றுகாதோ? வகையுளி

யாதுகொல்? "அவ்வச்சொன்முடிவே சீர்முடிவாக்கித் தலைகொள்ளாமல் வேண்டிய விடத்துச் சீர்முடிவுசெய்து தளைகோடல்" என்பதஃதாயின், இதனில் யாது அதிசயம்? இந்நடை, எவர் செய்யுளிற் போதரவில்லை? 'இயலாதென அஞ்சற்க; எளிதாகவே வகையுளிசெய்து கொள்ளலாமே.' என்பதுணர்த்தவன்றே அது போந்ததாகும். சைவ நூல்களுள் ஒரு காவியம் முழுதும் அஃதாயின் அதன் பெற்றி யாதாம்! இவ்வுளியை, எந்த யாப்பிலக்கணம் வியந்து கூறவுளது? உளதேல், அவ் விலக்கண மருங்கில் இலக்கியத்தோடு அது காட்டலாமே. வகையுளி செய்துகொள்வார் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்பன கூறு நாற்கவிராஜரு மாவரோ?"

எனத் தெரித்துக் காட்டினராகலின் ஆசிரியருடைய ஆழ்ந் தகன்றேங்கு மறிவும், நூலாராய்ச்சித் திட்பமும், புலமை வன்மையும் எந்நுனித்த மதியாளர்க்குப் புலனாகாமற் போம்: போகாவென்பது திறம்.

## சுவாமிகளருளிய பாடற்றொகை

ஸ்ரீமத் - குமாரசுவாமியம் கி. பி. 1925-ல் அச்சிடப்படுவ தாயிற்று. இதன்கண் தம்முடைய நூல்களின் செய்யுள்கள் (6666) ஆறாயிரத்து அறுநூற்றறுபத்தாறு என்பதை யறிவிப் பான் விவரங்காட்டிய இவ்வாசிரியரே அந்நூல்களை ஆறு மண்டலங்களாகவும் வகுத்துள்ளார். வகுத்த நிரல்—

குமரகுருதாச சுவாமிகள் பாடலிலுள்ளவை முதன் மண்டலம்,

திருவலங்கற்றிரட்டு (2 - கண்டமும்) இரண்டாவது மண்டலம்,

காசியாத்திரை பரிபூரணானந்தபோதம் தகராலயரகசிய மென்பன மூன்றாவது மண்டலம்,

சிறு நூற்றிரட்டு, திருத்தலதரிசன காலங்களிற் பாடியருளிய கட்டளைக் கலித்துறை, சேந்தன்செந்தமிழ், பத்துப் பிரபந்தம், குமரவேள்பதிற்றுப் பத்தந்தாதி, குமாரஸ்தவம், செக்கர்வேள்செம்மாப்பு, செக்கர் வேளிறுமாப்பு, சிவயாதனுவியாச மென்பன நான்காவது மண்டலம்,

திருப்பா ஐந்தாவது மண்டலம்,

ஸ்ரீமத் - குமாரசுவாமியம் ஆறாவது மண்டலம்.
எனவே அங்ஙனமறியக் கிடக்கின்றது.

## ஆரவாரத்தில் வெறுப்பு

"எவரும் என்னை வணங்கல் வேண்டா: தரிசிக்க வேண்டுமென்னுங் கொள்கையும் விட்டுவிடல் வேண்டும்" என்று கி. பி. 1921-ஆம்ஞு ஏப்ரல்மீ பத்தாந்தினமாகிய ஆதிவாரத்தில் இவர் எச்சரித்தபடி நிற்கும் நியதியைச் சிலர், இடையின் மாற்றுநராய்த் தொழத் தொடங்கினர். அதனில் இதயம் பொருந்தா இவர் 1925-ஆம்ஞு செப்டம்பர்மீ மறுபடியும் அதனை மாற்றிக் கொள்பவராயினர். இச்செயலில் ஆசிரியர் கருத்து எவ்வடக்கத்தைப்பற்றி நிற்கிறதென்பது விவேகிகட்குப் புலனும். இதுபற்றிச் சிலர் செய்த சங்கைகட்கு இவரளித்த உத்தரமாவன,—" தனக்குப் பெருமை தேடிக் கோடலும் பிறர்க்குச் சிரமம் நல்கலுமாஞ் செய்கையிலே துறவறக்கேடெய்தும்; முழு விடுதலையாராது; சிவச்செயலைச் சிவச் செயலாகப் பாவித்திருப்பார்பால் அடியவர் பூஜை நிகழ்த்தப்படலாம். குரு வழிபாடு அந்தரங்கத்திற் பாவிக்

கப்படலாம். அன்னபானுதிகள் பொதுவாம்'' எனவினவ. இன்னுமிவர், உலக நடைப்புகழ் விரும்பு மாந்தர், மனித கூட்டங்கூட்டலைக் கலக நடையுடைத் தென்று கருதி அவரோடு கலந்துநில்லாக் கருத்தினரென்பதூஉம், யாதானு மொரு பெருமைகருதி உலகரிடு மணத்தை, மாலையை, மடியை, அணியை அணிந்துகொண்டு உல்லாச ஆவேசம் உடலார்ந்தசைக்க ஆடல் பாடல்புரி நீரரல்லரென்பதூஉம், தம்மை நம்பாதாரை தாமும் விரும்பா விரக்தரென்பதூஉம் கொள்ளக் கிடக்கின்றன. **ஸ்ரீமத் - குமாரசுவாமியத்து** அசோக சால வாசத்து ஏழாம்பத்துழை—

''உலகநடைப் புகழ்விழைந்தே யுலகைக் கூட்டல்
கலகநடைத் தெனவவருட் கலவான் கொன்னில்
விலகுநடைக் குணனம்பார் விரும்பா னேயவ்
வலகுநடைக் களத்தயிலோச் சமலன் ரூசன்''

என்னுந் திருச்செய்யுள் காண்க. கூட்டங்கூட்டல் கலக நடைத்தெனக் கோடலாற்றான் பலர் விரும்பியும் யாதானு மொரு சபைக்குழுவிலே தந்திருநாமத்தைப் பதிவைத்தற் கிடங்கொடாது காத்துக்கொள்பவருமானார். விண்ணவ ருள்ளே செக்கர்வேளையன்றி எத்தேவனையேனும் மண்ணவ ருள்ளே எம்மனிதனையேனும் பாட்டுடைத் தலைவனுயமைத் துப் பாடிப் புகழ்தல் இவர்மாட்டின்றாகலானும், எவரெழுது புத்தகத்திலுந் தங்கருத்துக் கிசையாதன விருக்குமென உள்கு மாற்றானும், எவரியற்று புத்தகத்துக்குஞ் சாத்துக்கவி மதிப் புரை என்பனவற்று ளொதையேனுமீந்து ஒருபிரதி பெருமை யாகப் பெறுவார் செய்கைக்குத் தஞ்செய்கை இலக்காகாமல் அவற்றுளொதனையுங் கொடாக்குணத்தருமானார் என்க. பரதகண்ட வாசிகளாதல் வேறுகண்ட வாசிகளாதல் நூலாக்கியோர் இன்னரெனத் தம்மையறிவித்துக் கோடலில் ஆசைமிக்கார். தம்முருவினை யலங்கரித்துப் படமாக்கிப் புத்தகமுகத்தே யேய்த்து வெளியிடுங்காரியம் இக்காலத்தே

மலிந்துளதென்பதற்கு இவர் வெளியிட்ட புத்தகங்கள் புறமாகவேயுள்ளனவென்னு முண்மையை அவ்வித படமொன்றுமில்லா அவைகளா லறியலாம். இதனுலும் இவரது உளத்தூய்மை புலனுகின்றதன்றே.

## "புலன்வனப்பு"

**புலன்வனப் பெனப்படுவது**, வடசொற்புகாது பாடப்பட்ட **அமைதி, யைம்பதென்னுஞ் சேந்தன் செந்தமிழைச்** சார்ந்துள்ளது. ஸ்ரீமத்-சுவாமிகளாலாக்கப்பட்ட இதன்கண் வடசொற்கள்போலத் தமிழில் வழங்கப்படு சொற்களேயும் வடசொற்களுட் பல அருஞ்சொற்களேயுமே அகரமுதலாகக் கொண்டு ஏற்புடைமையிற் காட்டப்பட்டவை ஏறக்குறைய இருதிறத்தும் 5400-என்னலாம். அவற்றிற்குப் பொருளாக '=' இத்திறக்கீற்றுக்குப் பின்னே பொறிக்கப்பட்ட அனேத்துந் தூய தமிழேயாம்.

"விளங்காதன விளக்கும் பொருட்டு ( ) இத்திற உகிர்வணரினுட்பட வெழுதியவெல்லாம் வடமொழி யெனப்படுவனவும், வடமொழி யேய்ந்த சொல்லென்னும் வழக்கி னுட்படுவனவும், [ ] இத்திறப் பகர வணரினுட்படத் தீட்டியவெல்லாம் வடமொழி யல்லாத தென்மொழி யெனப்படுவனவுமா மாகலின், நிகண்டுகளானும் அகராதிகளானும் இவற்றிற்கு வேருகு பன்னூல்களானும் இது தென்மொழி இது வடமொழி இது வடமொழிக் கலப்பெனத்தேர்ந்து கொளப்படாதனவற்றை யெளிதாகவே தேர்ந்து கோடலும், தமிழுரை நடையில் வரையப்படு வடமொழிகளே இருதிற நூற்கும் பொருந்த வெழுதுதலும், பொருளறிதலும், அச்சொற்கள் தமிழ் வழக்கிலினிதுபொருந்தத் தீஞ்சுவைச் செய்யுள்களேச் செய்தலும், தமிழின் மேம்பாடுணர்தலும், கடவுள் வழிபாடு பேணியுய்தலும் இந்நூலாற் பெறும்பயனும்."

என ஈற்றில் ஆசிரியரே யெழுதினராகலின் இந்நூற் பயன் இங்கு வேறு கூறப்படுவதில்லையாயிற்று. இயற் சொல்லா னியன்றபொரு டோன்றக் கூறுதலையே புலன்வனப் பென்மனுர் புலவர். இவ்வனப்பு கி. பி. 1925, 1926-ஆம் ஆண்டுகளி லாக்கப்பட்டதாகும்.

ஸ்ரீமத்-சுவாமிகளது திருவுருவத்தையே சிவ சுப்பிர மணியக் கடவுள் திருவுருவமெனத் தியானஞ் செய்ய வேண்டி, அருணகிரிநாத முனீந்திரரது திருவிழாத் தொடக்கநாளில், திருவொற்றியூர்க் கோயிலில் சடக்கரோபதேசஞ் செய்யப் பெற்ற சீடருள் ஒருவராகிய மா. துரைசாமி முதலியார் மேற் கூறப்பட்ட **சேந்தன் செந்தமிழ்** என்னும் நூலுக்கு வரைந்த உரையைச் சுவாமிகள் பார்வையிட்டுத் திருத்தி அச்சுக்குக் கொடுக்கத் தக்க நிலையில் வைத்துள்ளார்கள்.

## வேதவியாச முதலிய வியாசங்கள்

அடிகள் எழிலுறு வசனத்தி லியற்றியருளிய **வேதவியாச** மொன்று காணப்படுகின்றது. அதிலுள்ள வினவிடைகள் 40. இந்நூல், வேதம் முதலியன எத்திறத்தன வென்பதையும் அவற்றின் சம்பந்தமான பலவற்றையும் இனிது விளக்கிப் பொருளுரைக்கும் ஆற்றல் கொண்டது. கி. பி. 1903-ல் அச்சிடப்பட்டது. இதுமுதலிய வியாசங்கள் வெளிவந்த பின்னரேதான் சிலரெழுதிய சில இலிகிதங்களுக்கு "வியாசம்" எனப் பெயரிட்டனரெனத் தோன்றுகிறது.

அடிகள், இன்சுவைப் பொலிவுடைத் திவ்விய வசனத்தில் 97 - வினு விடைகளா லியற்றியருளிய ஸ்ரீ சுப்பிரமணியவியாச மெனும் நூலொன்று பிரபலப் பிரமாணங்களோடு நிலவு கின்றது. கி. பி. 1925 - ஆம் ஆண்டு அச்சிடப்பட்ட பிரதி காண்க.

மேலும் இவராக்கியுள்ள **குருசீடசம்பவ வரலாற்று வியாச** மெனும் வசன நூலொன்றும் நிலவுகின்றது.

## 'செவியறிவுறூஉ'

சுவாமிகள், தஞ்சீடர்கட்கும் நண்பர்கட்கும் மூன்று காலங்களிற் கூறியுள்ள **செவியறிவுறூஉ** (Statement) மூன்று கூறாய் நிலவுகின்றது. இம்மூன்றும் சுவாமிகள் சரித்திரமா மிதன்கண் ஈண்டேகோடற்பாலனவாம். சீரிய செந்தமிழ்ச் சொற்சுவை, ஆழ்ந்த கருத்துக்களை யுட்கொண்ட பொருட் சுவை முதலிய சுவைகள் நனி துறுமியுள்ள இம்முத்திறச் செவியறிவுறூஉவையும் படித்துணர்வார்க்கு எத்தனையோ ஐய நீக்கமாந் தெளிவும், ஆன்மலாபவூக்கமும் ஓங்கிப் பிறங்கு மென்பது பசுமரத்தில் ஆணியறைந்தது போலாம். இதுவு மொரு தனிநூலாய் வெளியிடப் பெற்றுள்ளது.

மேலே புகன்றுபோந்த சிவஞானம்பாள் என்னுங் குழந்தை பெரிய பெண்ணாய பின்னர், அப்பெண்ணைப் பிரப்பன்வலசை தி. உடையநாயகம் பிள்ளை புதல்வர் நாகலிங்கம் பிள்ளை விவாகஞ் செய்துகொண்டனர். இவ் விருவருக்கும் பிறந்த ஆண் குழந்தை பாலசுப்பிரமணியம் என்னும் பெயர் பெற்றுள்ளது.

## பஞ்சாமிர்தவண்ண மகிமை

பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணத்தின் மீது குமாரக் கடவுள் பிரியம்வைத்து வெளிப்பட்டு நின்றருளிய கட்டளை விவரம் பின்னர்க்கூறப்படும் என்று முன்னர்க் கூறினமை யுண்டன்றே? அவ்விவரம்:—திருச்செந்தூர் ஸ்தானிகருள்

என ஈற்றில் ஆசிரியரே யெழுதினராகலின் இந்நூற் பயன் இங்கு வேறு கூறப்படுவதில்லையாயிற்று. இயற் சொல்லா னியன்றபொரு டோன்றக் கூறுதலையே புலன்வனப் பென்மனர் புலவர். இவ்வனப்பு கி. பி. 1925, 1926-ஆம் ஆண்டுகளி லாக்கப்பட்டதாகும்.

ஸ்ரீமத்-சுவாமிகளது திருவுருவத்தையே சிவ சுப்பிர மணியக் கடவுள் திருவுருவமெனத் தியானஞ் செய்ய வேண்டி, அருணகிரிநாத முனீந்திரரது திருவிழாத் தொடக்கநாளில், திருவொற்றியூர்க் கோயிலில் சடக்கரோபதேசஞ் செய்யப் பெற்ற சீடருள் ஒருவராகிய மா. துரைசாமி முதலியார் மேற் கூறப்பட்ட **சேந்தன் செந்தமிழ்** என்னும் நூலுக்கு வரைந்த உரையைச் சுவாமிகள் பார்வையிட்டுத் திருத்தி அச்சுக்குக் கொடுக்கத் தக்க நிலையில் வைத்துள்ளார்கள்.

## வேதவியாச முதலிய வியாசங்கள்

அடிகள் எழிலுறு வசனத்தி லியற்றியருளிய **வேதவியாச** மொன்று காணப்படுகின்றது. அதிலுள்ள வினாவிடைகள் 40. இந்நூல், வேதம் முதலியன எத்திறத்தன வென்பதையும் அவற்றின் சம்பந்தமான பலவற்றையும் இனிது விளக்கிப் பொருளுரைக்கும் ஆற்றல் கொண்டது. கி. பி. 1903-ல் அச்சிடப்பட்டது. இதுமுதலிய வியாசங்கள் வெளிவந்த பின்னரே தான் சிலரெழுதிய சில இலிகிதங்களுக்கு ''வியாசம்'' எனப் பெயரிட்டனரெனத் தோன்றுகிறது.

அடிகள், இன்சுவைப் பொலிவுடைத் திவ்விய வசனத்தில் 97 - வினா விடைகளா லியற்றியருளிய **ஸ்ரீ சுப்பிரமணியவியாச** மெனும் நூலொன்று பிரபலப் பிரமாணங்களோடு நிலவு கின்றது. கி. பி. 1925 - ஆம் ஆண்டு அச்சிடப்பட்ட பிரதி காண்க.

மேலும் இவராக்கியுள்ள குருசீடசம்பவ வரலாற்று வியாச மெனும் வசன நூலொன்றும் நிலவுகின்றது.

## 'செவியறிவுறூஉ'

சுவாமிகள், தஞ்சீடர்கட்கும் நண்பர்கட்கும் மூன்று காலங்களிற் கூறியுள்ள செவியறிவுறூஉ (Statement) மூன்று கூருய் நிலவுகின்றது. இம்மூன்றும் சுவாமிகள் சரித்திரமா மிதன்கண் ஈண்டேகோடற்பாலனவாம். சீரிய செந்தமிழ்ச் சொற்சுவை, ஆழ்ந்த கருத்துக்களை யுட்கொண்ட பொருட் சுவை முதலிய சுவைகள் நனி துறுமியுள்ள இம்முத்திறச் செவியறிவுறூஉவையும் படித்துணர்வார்க்கு எத்தனையோ ஐய நீக்கமாந் தெளிவும், ஆன்மலாபவூக்கமும் ஓங்கிப் பிறங்கு மென்பது பசுமரத்தில் ஆணியறைந்தது போலாம். இதுவு மொரு தனிநூலாய் வெளியிடப் பெற்றுள்ளது.

மேலே புகன்றுபோந்த சிவஞானம்பாள் என்னுங் குழந்தை பெரிய பெண்ணுய பின்னர், அப்பெண்ணைப் பிரப்பன்வலசை தி. உடையநாயகம் பிள்ளை புதல்வர் நாகலிங்கம் பிள்ளை விவாகஞ் செய்துகொண்டனர். இவ் விருவருக்கும் பிறந்த ஆண் குழந்தை பாலசுப்பிரமணியம் என்னும் பெயர் பெற்றுள்ளது.

## பஞ்சாமிர்தவண்ண மகிமை

பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணத்தின் மீது குமாரக் கடவுள் பிரியம்வைத்து வெளிப்பட்டு நின்றருளிய கட்டளை விவரம் பின்னர்க்கூறப்படும் என்று முன்னர்க் கூறினமை யுண்டன்றே? அவ்விவரம்:—திருச்செந்தூர் ஸ்தானிகருள்

ஒருவராகிய ஈ. அனந்தசுப்பையரென்னும் பெயரிய வேதிய ஞர், 'சொல்லானும் பொருளானும் பாட்டானும் இனிமை யாயிருக்கின்றதே இவ்வண்ண'மெனுங் கருத்தால் அதனைப் பாராயணஞ் செய்யத் தொடங்குகையில் வாட்கொடைக் கிராமத்து வ. ந. சுப்பிரமணிய ஐயரென்னும் வேதியர், 'யானும் பாராயணத்தி லுடனிருக்கக்கடவே' னென்று கூறிக் கொண்டனர். பின்னர்க் கந்தக்கடவுள் பக்தியி லீடுபடு மெய்யுணர்வுடைய இவ்விருவரும் அவ்வூர்க் கவுண்டர் மண்ட பத்திற்கு மாலைப்போதுதோறும் போந்து வைகிக் குறிப்பிட் டுள்ள பாராயணஞ் செய்து வருதலை உடனிருந்து செவி மடுத்து வருபவரும் 80-வயதின் மிக்கவரும் முத்தம்மையென் னும் பெயருடையருமாகிய ஒரு பெரும்புண்ணியவதியா ருடைய கண்கள் காணுமாறு சித்தார்த்தி வருடத்துச் சித்திரை மாதத்தொரு குருவாரத்திரவு 6-கடிகைக்கு மேல் 20, 22-பிராயமுடையவொருவர் வந்தனர். சிறிது மறைவாக நின்று இவ்வண்ண பாராயணத்தைக் கேட்டு நிற்குமிவர் யாரோ புதியராயிருக்கின்றனர் என்று அவ்வம்மையார் சிந்தித்து நோக்கியவுடன் அவர் மறைந்தனர். வேதியரிரு வருக்கும் இவ்விவரங் கூறியுள்ள அவ்வம்மையார் தமதிருக்கை யடைந்தனர். மறுநாளாகிய சுக்கிரவாரத்திரவு 23-கடிகைக்கு மேலே மறைந்து சென்றவவர் 'அவ்வம்மையாரை நோக்சி யான் இவ்வூரே; என்னுடன் வருவையேல் இருப் பிடங் காட்டுவே' னென்றவுடன் ஆவலோடெழுந்துவந்த அவ்வம்மையாரோடு வீதிபோந்து ஆண்டு நிற்கின்ற ஓரிளம் பருவப் பெண்ணோடும் கலியாண மண்டபத்தை யடைந்தார். ஆண்டு அவர், 'கிழவீ! கவுண்டர் மண்டபத்திற் பாராயணஞ் செய்யப்படுகின்ற வண்ணம் இயன்றவளவில் இன்னேசை யெழப் பாடப்படல் வேண்டும்; இச் செய்தியை அவர்கட் குச்சொல். அவ்வண்ணம் எனக்குப் பிரீதியாயுள்ளது; அஃதெங்கே பாராயணஞ் செய்யப்படுமோ அங்கே யான் வருவே னிருப்பேனுகலின் அம்மண்டபத்திற்கு வந்தேன். என்னுடைய இருக்கை, இக் கலியாண மண்டபமும் வசந்த

மண்டபமுங் கோவிலுமாகு' மென்று ஆங்குள்ள அவற்றைச் சுட்டிக்காட்டி அவ்விளம் பருவப்பெண்ணேடு மறைந்தருளினர். முத்தம்மையார், 'ஆஅ! பெருமானே! பெருமானே!! யென்று கூவி வணக்கஞ் செய்தெழுந்து போந்து விடிந்த பின்றை அவ்வேதியரிருவரையுங் கண்ணுற்று இறைவன் கட்டளையை வெளியிட்டனர். பக்த சிரோமணிகளாய அவ்விருவரும் விம்மித மடைந்து, வண்ணங்கேட்பான் திவ்விய திருவடித்தாமரைகள் புழுதியளையப் பிராட்டியோடு பூமிசை நடந்து வந்தருளிய பெருங்கருணைத் தடங்கடலுக்கு அனேக வந்தன மனேகவந்தனமென்று கூறி வணங்கினர் என்று கூறுக. இவ்வரலாறு அவ்வண்ணத்து 4-வது பதிப்புப் பிரதியில் விரிவாக வுணரவுள்ளது.

## வில் சாசனம்

அடிகள், 1926-ஆம் வருஷம் ஜூன் மாசத்திலே சென்னையிலிருந்து புறப்பட்டுக் கோயம்புத்தூரை யடைந்தார். அங்கிருந்து நீலகிரிபோந்து திரும்பி அக்கோயம்புத்தூரை யெய்திய அவர், தமதுடம்பு பலவீனப்பட்டிருத்தலை உத்தேசித்துச் சென்னை மாநகரையே யடைந்தார். அடைந்திருக்கு ஞான்று 1926-ஆம் வருஷம் ஜூலை மாசம் 17-ஆந் தேதியில் ஒரு வில் சாசனம் எழுதிவைத்தார். இங்கிலிஷிலெழுதப்பட்ட அது ரிஜிஸ்தருஞ் செய்யப்படுவதாயிற்று. முன்னரேயே சொல்லியுள்ள மஹாதேஜோ மண்டலத்தாரென்னுஞ் சொல்லிற்குரியவரில் 21-பெயர்களை அச்சபையாராகக் கூட்டிய ஆசிரியர், பெயர்கள் விவரமும் அச்சாசனத்தில் விளக்கினர். அன்னோருட் சிலர் தமது மனோதருமத்துக்குத் திருப்தியாய் நடப்பவர்களாகக் காணப்படவில்லை யென்பதும் வேறுபிறவுங் கருதி 1927-ஆம் வருஷம் டிசம்பர் மாசம் 19-ம் தேதி (Codicil) காடிசில் என்னும் வில் அனுபந்தசாசன மொன்றைப் பிறப்பித்துத் தமது கையெழுத்தையும் அதிற் செய்வராயினர். இது தமிழிலெழுதப்பட்டது. இது 1927-ஆம் வருஷம் டிசம்பர் மாசம் 21-ம் தேதி ரிஜிஸ்தருஞ் செய்யப்பட்டுள்ளது.

## பெங்களூர் வாசம்

அடிகள், 1928-ஆம் வருஷம் மே மாசம் சென்னையி லெய்திய வெயில் வெப்பஞ் சகிக்கமாட்டாதவராய் மே மாசம் 29உ பெங்களூரையடைந்து ஒரு நெடிய மேன் மாடி யிலே தங்கியிருந்தார். ஒரு மாசம் ஆந்தருணத்தில் ஓரிரவில் அடிகள் சயனித்திருக்கும்போது ஒரு பேரொளி இடம் வலமா கத் தம்மைச் சூழ்வதைக் கண்டார். அதிலொரு சிறுபாகம் தமது வாய் வழியாக உண்ணுழைந்து இருதய பதுமத்தை மேலே கிளப்புதலையு மறிந்தார். உடனே பெரிதும் மகிழ்வுற்றவராகி யான் வெளியே செல்பவனுனேன். என்னுயிர்த் துணைகளாம் வேலும் மயிலும் வருக வென்பதாக இருமுறை கூறினர். அஞ்ஞான்றே அவ்வொளிகள் மறைந்து விட்டன. அடிகளும் தேகசுக நயப்பெய்தினர். பிறிதோ ரிரவில் கம்பிவழியாக ஆங்கு வெளிச்சந் தந்துகொண்டிருந்த தீபம் அணைந்து இருள் மூடிக்கொண்டது. அஞ்ஞான்று நான்கு தீவட்டிப் பந்தங்கள் தம்மைச் சூழ்ந்து நிற்றலை நோக்கி அடிகளெழுந்தார். உடனே அப்பந்தங்கள் மறைந்து விட்டன. 'இவ்வடியான் இருளிற் சயனித்திருக்கச் சம்மத மிலாது திருவருள், தீவட்டி வெளிச்சங்காட்டிய இரக்க மிருந்தவா றென்னே, யெனச் சிந்தித்துக் கைகூப்பு நராகி வேறு தீபமொன் றேற்றிக்கொண்டனர். 1928-ஆம் வருஷம் ஜூலை மாசம் 15உ இரவு பெங்களூரை விட்டுச் சென்னைமா நகரமடைந்தனர்.

## சுவாமிகள் செவ்வேட்பரமன் சேவடி சேர்தல்

ஸ்ரீமத் - சுவாமிகள் பெங்களூரி னின்றுஞ் சென்னை போந்ததற்பின் தேகதிடனுற்றே யிருந்தார்கள். ஆனுல். அவர்கள் பெங்களூருக்குச் செல்லு முன்னரே கைக்கொண்ட கோதுமை நொய்க் கஞ்சியையே உச்சியம்போ துணவாக்

கொண்டார்கள். அன்னத்தை அறவே நீத்தார்கள். சுவாமிகள் விபவ ஆண்டுற்ற கத்தமாசட்டி விரதத்தினையும், மயூரவாகன சேவன விழாவினையும், மாசி சிவராத்திரிப் பூசையினையும் மிகச் சிறப்பாகவே நிகழ்த்தினார்கள். அவர்கள் குமரகுருதாச சுவாமிகள் பாடல், திருவலங்கற்றிரட்டு ஆகிய நூற்களை இரண்டாம் பதிப்பாகத் திருத்தி யச்சிடத் தொடங்கினார்கள். இதனால் சுக்கில வாண்டாகிய இவ்வாண்டுக் கோடை தொடங்கியும் சுவாமிகள் சென்னையிலேயே இருக்க நேர்ந்தது. உட்டிணம் பொறுமலே அவர்கள் இராக் காலங்களில் நெடுநேரத்தைத் திருவல்லிக்கேணிக் கடற்கரையிலே கழித்தார்கள். இவ்வாண்டு வைகாசி மாசம் 2உ புதன் கிழமையன்று பகல் 11-மணிக்கு அன்பார்ந்த சீடருஞ் சுப்பிரமணிய தாசரெனப் பெயருடையருமாகிய பு. சின்னசுவாமிப் பிள்ளையை யழைத்து, "இறைவன் திருவுளக் குறிப்பு ஒருவாறுகக் காணப்படுகிறது. திருவான்மியூரில் ஒரு நிலம் பார். அது விரைவிலாகவேண்டும். இத் திருநீற்றினை யணிந்து கொண்டு அக்காரியத்திற்குச் செல்" என்று கூறி நீற்றினைக் கொடுத்தனுப்பினார்கள். ஆ. ஞானசாகர முதலியாரென்னும் நண்பரொருவர் சுவாமிகளைப் புதுப்பாக்கத்திற்கு வருமாறு அழைத்தபோது, "நான் அங்கு வரமாட்டேன்; திருவான்மியூருக்குப் போகிறேன்; நீ அங்கு வா" என்றார்கள். சுவாமிகள் திருவான்மியூரில் நிலம் பார்க்கச் சொன்ன பிறகு சுவாமிகளைப் பரமன் பழனித் தலத்திற்கு இன்னும் அழைக்கவில்லையே, அழைப்பதாகச் சொன்ன பாட்டுளதே எனத் தா. வேங்கடாசல முதலியார் வினவியதற்கு, அவர்கள் "சொன்னது உண்மை. அஃதிப்போதோ? எப்போதோ? இறைவன் திருவுள மெப்படியோ" என்று விடை யிறுத்தார்கள். பின்னர், வைகாசி மாசம் 15உ சேய்வாரத்தன்று திருவான்மியூரில் பேசப்பட்ட நிலத்தின் கிரய பத்திரத்திற்கொருநகல் எழுதுவித்தார்கள். அன்றிரவு நெடுநேரம் விழித்திருந்த சுவாமிகள் இரவு 2-மணிக்கு அருகிலிருந்த இராஜாபாதர் முதலியாரையும், மதுரை முதலியாரையும்

நோக்கி, "மயூரவாகன சேவன விழாவை விடாது நிகழ்த்தி வாருங்கள்; என்னுடைய உடலைத் திருவான்மியூரிலே சேர்த்து விடுங்கள்" என்றார்கள். * மறுநாள் புதன் கிழமை காலையில் ஆசிரியர் வழக்கப்படி குளித்துப் பூசை முடித்து அமர்ந்திருந்தார்கள். விரைவில் உடல் நீங்கப்பெறு மென உணர்ந்துணர்த்திய சுவாமிகள் உட்டிண மிகுதியா லுண்டாங் களைப்பைப் பொறுது பெங்களூருக்குச் சென்று திரும்பலாமென வெண்ணியவராய் அவ்வாறு செல்லப் புகை பண்டிச் சீட்டையும் பெறச்செய்தார்கள். மாலையிற் பலர் புகைபண்டி நிலையத்திற்குச் சென்றார்கள். சிலர் சுவாமிகள் இருந்த நிலையத்தை யடைந்தார்கள். அப்போது, சுவாமிகள் தமக்குற்ற ஒரு களைப்பினால் சிறிது நடை கொள்ளவும் இயலாதிருந்தார்கள். ஆகலின் பிரயாணம் நிறுத்தப்பட்டது. மருத்துவர்களால் சுவாமிகளுடைய உடல் நிலையறியக் கூடவில்லை. உட்டிண மிகுதியாலுண்டாய இரத்தக் கொதிப் பென்று ஒருவாறு நிச்சயிக்கப்பட்டது. மறுநாட் குருவாரம் (30—5—1929) காலை 7-15 மணிக்குச் சுவாமிகள் யாவரு மறியவே சுவாசத்தை உள்ளுக்கிழுத்தார்கள். அது வெளி வராமல் உந்தியிலேயே எழும்பி அடங்குவதாயிற்று. சுவாமிகள் அடங்கியது அந்நிலையிலேயாம். அது நிகழ்ந்தது சுக்கிலஞு வைகாசிமீ அமர பக்கத்துச் சட்டி திதியும், அவிட்ட நக்ஷத்திரமுங் கூடிய சுப வேளையிலென்க.

## திருவான்மியூரிற் சமாதியாதல்

உடனே வான்மியூரில் வாங்க நிச்சயிக்கப்பட்டிருந்த சமாதி நிலயங்கட்ட ஏற்பாடு செய்யப்பட்டது. இச்செய்தி

---

* சுவாமிகள் தமது எதிர்கால நிலையைப் பற்றிய ரகசிய மொன்று சிலர்க்குத் தெரிவித்தனரென் றறிகிறேன். தீர விசாரித்து உண்மை தெளிந்த பின்னர், அது வெளியிடப் படும்.—(ச. ச.)



விளம்பர வாயிலாக நகரெங்கும் பரவலும் சுவாமிகளைத் தரிசிக்க வந்தவர் தொகை எண்ணிலடங்காது. சுவாமிகள் இறைவன் பூசைகளை இரவிலே கண் விழித்துச் செய்யும் வழக்கப்படியே அவர்கட்கும் அபிடேக ஆராதனைகள் ஆற்றப்பட்டன. பிறகு, சுவாமிகள், திருப்புகழ் ஓதியும் விருதுகளைத் தாங்கியும் செல்லும் அடியார் கூட்டம் புடைசூழ, திவட்டி மத்தாப்பு முதலியன ஒளிசெய்ய, மிக அழகியதொரு புஷ்ப விமானத்தில் எழுந்தருளி, மறுநாள் (31—5—29) வெள்ளிக்கிழமை காலை 8-15 மணிக்குத் திருவான்மியூர் சேர்ந்து சமாதி நிலையத்தில் அமர்ந்தருளினார்கள்.

**குமரகுருதாச சுவாமிகள் திருவடி வாழ்க.**